இலை.இன் றேதா தேவுவம்
பனந்தார் வேய்ந்தோன் அனந்தைப் பதிக்கே.

ஜீவ: பழிப்ப றென்ற மொழிப்பய னென்னை ?
பகருதி வெளிப்படப் பண்பாய்
நிகரிலாச் சூழ்ச்சி நெடுந்தகை யோனே! 3

குடில: என்னுதற் கில்லை யிறைவ! அவையெலாம்;
கண்ணகன் ஞாலங் கழறும் பலவிதம்.
மணஞ்செய முதன்முதற் பேசி வருதல்,
இணங்கிய ஆடவ ரில்லுள் ளாரே;
அன்றி யாடவர்த் தேடி மன்றல்
சாற்றுதல் தகாதெனப் போற்றுமிவ் வுலகம்;
முன்னை வழக்கும் அன்னதே; ஆயினும்,
ஆத்திரந் தனக்குச் சாத்திர மென்னை ?

ஜீவ: கூடா தஃதொரு காலும்; குடில!
கேடாம் நமது கீர்த்திக் கென்றும்;
மாசறு மனோன்மணி தனக்கும் மாசாம்;
என்னே ஆத்திரம் ? நமது
கன்னியை விழையும் மன்னருங் குறைவோ ? 4

குடில: குறைவோ அதற்கும் இறைவ! ஓஹோ!
மூவருந் தேவரும் யாவரும் விரும்புங்
கொழுந்தை விழைந்து வந்த வேந்தரைக்
கணக்கிட லாமோ ? கலிங்கன், சோழன்,
கன்னடன் வடிவி லொவ்வார்; காந்தர்
மன்னவன் வயதிற் கிசையான்; மச்சன்
குலத்திற் பொருந்தான்; கோசலன் பலத்திற்
கிணங்கான்; விதர்ப்பன் வீர மில்லான்;
வணங்கலில் நிடதன், மராடன் கல்வியில்
நேரான்; மகதன் நிறத் தரித்திரன்;
இன்னம் பலரும் இங்ஙனம் நமது
கன்னியை விழைந்துங் கல்வி வடிவு
குணம்பலங் குலம்பொரு ளென்றிவை பலவும்
இணங்கா ரோமாந் திருந்தார். அரசருள்
கொங்கன் றனக்கே யிங்கிவை யாவும்

தோடம்! — சுடு! சுடு!
தீது நன்றென ஓதுவ வெல்லாம்
அறியார் கரையும் வெறுமொழி யலவோ
பாச்சி பாச்சி யென்றழும் பாலர்க்குப்
பூச்சி பூச்சி யென்பது போலாம்;
மன்னரை யுலகம் வணங்கவும் பார்ப்பார்
கன்னங் கிடைக்கவும் அங்ஙன மறைந்து
மதியி லாரை மயக்குவர் வஞ்சமாய்;
அதினால் நமக்கென்? அப்படி நினைக்கில்
இதுவரை யித்தனை நன்மையெப் படிவரு ?
பார்க்குது மொருகை. சுந்தரன் யந்திரந்
தாக்கும் வகையுங் காண்போம்; சுவான
சக்கரங் குக்கனைத் தடுத்திடும் வகையே
யந்திரத் தந்திரம் இருப்பதென் றறியான்
பித்தன் மெத்தவும்! நமக்கினி யிதுவே
உத்தம வுபாயம். ஓகோ! சேவக!
சித்தம் மெத்தக் களித்தோ மிந்த
மணவுரை கேட்டென மன்னன் துணியட்
பாவனை பண்ணுவோம் ஏ! ஏ! சேவக!
(சேவகன் எழுந்து வர)
இன்றுநாம் உற்றவிவ் வின்பம் போல
என்றும் பெற்றிலம். இணையறு மாலை
இந்தா! தந்தோம். இயம்பாய்,
வந்தோம் விடியுமுன் மன்னவைக் கென்றே. 1

(நேரிசை யாசிரியப்பா)

சேவகன் வாழ்க! வள்ளால்! நின்னுதா ரம்போல்
ஏழுல கெவற்றினு முண்டோ?
வாழ்க! எப் போதும் மங்கலம் வரவே. 2

குடில: (தனிமொழி) நல்லது! விரைந்து செல்லாய்! நொடியில்
(சேவகன் போக)
மதியிலி! என்னே மனிதர் மடமை!
இதுவு முதாரமாய் எண்ணினன்; இங்ஙனம்
தருமந் தானம் என்றுல கறியும்

கரும மனைத்துஞ் செய்பவன் கருத்தைக்
காணின் நாணமாம்; அவரவர் தமக்கா
எண்ணிய எண்ணம் எய்துவான் பலவும்
பண்ணுவர் புண்ணியம் போல. எல்லாந்
தந்நயங் கருதி யன்றித் தமைப்போற்
பின்னொரு வினையெணிப் பேணுவ ருளரோ?
புண்ணியஞ் சிவகா ருண்ணிய மெனப்பல
பிதற்றுதன் முற்றும் பித்தே, அல்தேல்
யாத்திரை போன நாற்றுவர், சோறடு
பாத்திரந் தன்னிற் பங்கு பங்காக
ஒருவரை யொருவர் ஒளித்துப் பருமணல்
இட்ட கதையா யிருக்குமோ? அவ்வளவு
எட்டுமோ வுலகின் கட்டைச் சிறுமதி?—
ஆயினும், அரசனைப் போலிலை
பேயர் பெரிய மேதினி யெங்குமே. 2

முதல் அங்கம்: ஐந்தாங் களம்
முற்றிற்று.

---

கலித்துறை

சீரும் வதுவையுஞ் சேர்முறை செப்பியுஞ் சிவகன்றன்
போரும் நிதனமும் புந்திசெய் மந்திரம் போற்றினனே
சாருந் தனுகர ணங்களைத் தானெனுந் தன்மைவந்தால்
யாரும் அருள்வழி நிற்கிலர் மாயை யடைவிதுவே.

முதல் அங்கம்
முற்றிற்று.

---

| | | | |
|---|---|---|---|
| ஆசிரியப்பா | 52-க்கு | அடி | 830 |
| ஆசிரியத் தாழிசை | 6-க்கு | ,, | 18 |
| வெண்பா | 2-க்கு | ,, | 8 |
| கலித்துறை | 1-க்கு | ,, | 4 |
| ஆக, அங்கம் 1-க்கு : பா. 61-க்கு | | ,, | 860 |

# முதல் அங்கம்

## ௫-ம் களம்

இடம்: குடிலன் மனை. காலம்: மாலை.

குடிலன் உலாவ.

(இணைக்குற ளாசிரியப்பா)

குடிலன்:
(தனிமொழி)

புத்தியே சகல சத்தியும்! இதுவரை
நினைத்தவை யனைத்தும் நிறைவே றினவே
உட்பகை மூட்டிப் பெட்புற் றிருந்த
மதுரையாம் முதுநகர் விடுத்து மன்னனைப்
புதியதோர் பதிக்குக் கொணர்ந்து புரிசை யுங்
கட்டுவித் தோம்நம் இட்டமாம் வகையே;
நாமே யரசும் நாமே யாவும்;
மன்னவன் நமது நிழலின் மறைந்தான்;
பிடித்தாற் கற்றை விட்டாற் கூளம்;
மதுரையை நெல்லை யினிமேல் வணங்குமே?
இதுதனக் கிறைவ னிறக்கில் யாரே
அரச ராகுவர்?— (மௌனம்)
புரவலன் கிளைஞர் புரிசையைக் கேட்கினும்
வெருளுவர். வெல்லார். ஆயினும்—
முழுதும் நம்மையே தொழும்வகை யிலையே?
கருவியுங் காலமும் அறியில் அரியதென்?
ஆ! ஆ! அயர்த்தோம் அயர்த்தோம்!
மயக்கம் மனோன்மணி கொண்டதை முற்றும்
அயர்த்தோம்! ஆ! ஆ! ஆயிழை யொருவனைக்
கண்டு காமங் கொண்டவ ளல்லள்;
பருவம் வருதலாற் பற்றல் விழைந்தனள்,
அருகுள தெட்டியே யாயினும் முல்லைப்
படர்கொடி படரும். பலதேவ னையவள்
இடமே பலமுறை யேவி னுடன்படல்

கூடும். கூடிலென் கூடா ?
யாவன் அஃதோ வருமொரு சேவகன் ?
(சேவகன் வர)

சேவகன் : ஜய ! ஜய ! விஜயி பவ குருகுலேந்திரா ?
(திருமுகம் கொடுக்க)

குடில : நல்ல தப்புறம் நில்லாய் ; ஓ ! ஓ !
(வாசித்து நோக்கி) சொல்லிய தார்கொல் ? சுந்தர னேயாம்.
(சேவகன் ஒருசாரிருந்து தூங்க)

அடுத்தது போலு மிம்மணம். அவசியம்
நடக்கும். நடக்கினென் ? நமக்கது நன்றே
அரசர்கட் காயு ளற்பமென் றறைவர் ;
பிரியமாந் தன்மகட் பிரிந்து வெகுநாள்
வாழான் வழுதி. வஞ்சிநாட் டார்க்குத்
தாழா ரிந்நாட் டுள்ள ஜனங்களும்.
அதுவும் நன்றே.—ஆயினுங்
கால தாமதஞ் சாலவு மாகும் ;
வேறொரு தந்திரம் வேண்டும் ; ஆ ! ஆ !
மாறன் மாண்டான் ; மன்றலும் போனது ;
சேர னிறுமாப் புடையதோர் வீரன்
ஆமெனப் பலரும் அறைவர். அதனால்
நாமவன் பால்விடுந் தூதுவர் நலம்போன்
மெள்ள அவன்றன் செருக்கினைக் கிள்ளிற்
படைகொடு வருவன் ; திண்ணம் ; பாண்டியன்
அடைவதப் போதியா மறிவம்.
போர்வந் திடிலிவண் சேர்வந் திடுமெலாம்
யாரிற வார்கள் ? யாரறி வார்கள் ?
முடிதன் அடிவிழில் யாரெடுத் தணியார் ?
அரச வமிசக் கிரமம் ஓரில்
இப்படி யேமுத லுற்பவ மிருக்கும்
சிலதலை முறையாப் பலவரு டஞ்செலில்
இந்துவில் இரவியில் வந்தோ ரெனவே,
மூட உலகம் மொழியும். யாரே
நாடுவ ராதியை ? நன்று நன்றிது !

ஈறிலாச் சகர ரெண்ணில ராமெனப்
பொன்னேர் பூட்டி நின்றவர் தம்மைப்
போற்றிய குரவையே பொலிதரு மொருசார்;
சேற்றிடை யடர்ந்த நாற்றடைத் தெடுக்குநர்
நாறுகூ றுக்குநர் வேறுபுலம் படுக்குநர்
நடுபவர் களைப்பகை யடுபவ ராதியாக்
கள்ளுண் கடைசியர் பள்ளும் பாட்டும்
தருமொலி பரந்தே தங்குவ தொருசார்;
குன்றென அரிந்து குவித்திடுஞ் செந்நெற்
போர்மிசைக் காரா காரெனப் பொலியச்
கறங்குங் கிணைப்பறை முழவுடன் பிறங்கும்
மங்கல வொலியே மல்குவ தொருசார்;
தூவியால் தம்முடல் நீவிடில் சிரிக்குஞ்
சிறுமிய ரென்னவச் செழுநில நங்கை
உழுபடைக் கொழுமுனை தொடுமுனங் கூசி
உடல்குழைந் தெங்கும் உலப்பறு செல்வ
பயிர்மயிர் சிலிர்த்துப் பல்வளம் நகுவள்,
எனினினி யானிங் கியம்புவ தென்னை?
அனையவந் நாடெலாம் அரச! மற் றுனக்கு
உரித்தென அங்குள பாடையே யுரைக்கும்.
சின்னா ளாகச் சேரனாண் டிடினும்
இந்நாள் வரையு மந்நாட் டுரிமை
கொடுத்தது மில்லை, நாம் விடுத்தது மில்லை.
பண்டைநம் முரிமையா ராட்டிட வென்றோ
கண்டன னிப்புரி. ஆயினும் அதுவிம்
மணத்திற் குதவியாய் வந்தது நன்றே.
ஆதலி லவன்பால் தூதரை விடுத்துக்
கிழமையும் பழமையு மெடுத்துக் கிளத்தி,
நாட்டிய நமது நகர்வலி கருதி
மீட்டும் விடுப்பினும் விடுப்பன். அன்றி
வாதமே பலவும் ஓதினு மொருவிதம்
ஒப்புர வாகா தொழியான். பின்னர்,
அங்கியோர் நியசமா தானச் சின்னம்
ஆகவோர் விவாக மாயின் நன்றெனக்
குறிப்பாற் பொதுவாய்க் கூறிடின்,

மறுத்திடா னுடன்மனை முடிக்குதும் நன்றே. 8

ஜீவ: மெத்தவுங் களித்தோம்! உத்தமோ பாயம்
இதுவே! குடில! இதனால்
வருமவை யும் நடந்தசா மதித்தேம் மனத்தே. 9

குடில: அப்படி யன்றே செப்பிய உபாயம்
போது மாயினு மேனுந் தூதுவர்
திறத்தாற் சித்தி யாகவேண் டியதே.
வினைதெரிந் துரைத்தல் பெரிதல. அஃது
தனைநன் காற்றலே யாற்றல். அதனால்,
அன்புங் குடிமைப் பிறப்பு மரசவாம்
பண்பு மறிவும் பரவுறு முணர்வும்
தூய்மையும் மன்னவை யஞ்சாத் திண்மையும்
வாய்மையுஞ் சொல்லில் வழுவா வன்மையுந்
துணிவுங் காலமுங் களமுந் துணியுங்
குணமும், மந்திரத் தலைவர் துணைமையும்
உடையனே வினையாள் தூதனென் றோதினர்.
அன்ன தூதனை யனுப்பின் மன்னவ!
உன்ன தெண்ண முறுமே யுறுதி;
அன்றெனி லன்றே; அதனால்
வென்றிவை வேலாய் விடுவாய் தெரிந்தே. 10

ஜீவ: அத்திறம் முற்றும் ஒத்தவ னெய்நமக்
குரிமை பூண்டநின் னருமை மகன்பல
தேவனே யுள்ளான். மேவலர் பலர்பால்
முன்னம்பன் முறை தூதிலும் முயன்றுளான்.
அன்னவன் றன்னை யமைச்ச!
ஏவிடத் தயையா யிசைவாய் நீயே. 11

குடில: ஐய மதற்கென்? ஐய என்னுடல்
ஆவியும் பொருளும் மேவிய சுற்றமும்
நினதே யன்றோ! உனதே வலுக்கியான்
இசையா தொழிவனோ! வசையறு புதல்வன்
பாலியன் மிகவும்; காரியம் பெரிது.

ஜீவ: பெரிதென்? அங்கவன் பேசவேண்டியவெலாம்
விரிவா யெடுத்துநீ விளம்பி விடுக்கில்,

நலமா யுரைப்பன் நம்பல தேவன்.
வருத்த மிவையெலாங் கருத்தி னுணராது
உரைத்தனர் முனிவர். உதிய னவைக்கே
யோசனை யின்றி நடேசனை யேவில்
நன்றாய் முடிப்பனிம் மன்றல்
என்றார். அவர்கருத் திருந்த வாறே! 12

குடில : குற்றமோ அதுவுங் கொற்றவ! முனிவர்
அறிந்ததவ் வளவே யாகும். ஏழை!
துறந்தா ரறிவரோ தூதின் தன்மை?
இகழ்ச்சியும் புகழ்ச்சியு மின்பமுந் துன்பமும்
எல்லா மில்லை; ஆதலா லெவருங்
கட்டுக கோவில், வெட்டுக ஏரி,
என்று திரிதரு மிவர்களோ நமது
நன்றுந் தீதும் நாடி யுரைப்பர்?
இராச்சிய பாண சூத்திரம் யார்க்கும்
நீச்சே யன்றி நிலையோ? நடேசன்!
யோசனை நன்று! நடேசன்! ஆ! ஆ!
ஏதோ விவ்வயிற் சூதாப் பேதையர்
உள்ளம் மெள்ள வுண்டு மற்றவர்
அம்மை யப்பரை யணுகா தகன்று
தம்மையும் மறந்தே தலைதடு மாறச்
செய்யுமோர் சேவக முண்டுமற் றவன்பால்.
ஐயமொன் றில்லை. அதனால் மொய்குழல்
மாதர்பாற் றூதுசெல் வல்லமை கூடும்.
பித்த னெப்படிச் சுந்தரர்க்கு
ஒத்த தோழனா யுற்றனன்! வியப்பே! 13
முனிவரும் வரவர மதியிழந் தனரே.

ஜீவ : இருக்கும், இருக்கும். இணையறு குடில!
பொருக்கெனப் போயுன் புதல்வற் குணர்த்தி
விடுத்திடு தூது விரைந்து;
கால விளம்பனஞ் சாலவுந் தீதே. 14

குடில : ஈதோ அனுப்பினேன்; இன்றிம் மாலையில்
தூது செல்வான் தொழுதுன் னனுமதி
பெறவரு வான்நீ காண்டி;

இறைவ! மங்கலமென் றமுன் னடிக்கே!
(குடிலன் போக)

ஜீவ: (தனதுள்) நல்லது! ஆ! ஆ! நமது பாக்கியம்
அல்லவோ இவனைநா மமைச்சனாய்ப் பெற்றதும்?
என்னே! இவன்மதி முன்னிற் பவையெவை?
(சில பிரபுக்களும் நாராயணனும் வந்து வணங்க)

(பிரபுக்களை நோக்கி) வம்மின், வம்மின். வந்து சிறிது
காலமானது போலும். நமது
மந்திரி யுடன்சில சிந்தனை செய்திங்கு
இருந்தோ மிதுவரை, குடிலன் மிகவும்
அருந்திறற் சூழ்ச்சியன்.

முதற் பிரபு: அதற்கெ னையம்?
சுரகுரு பிரசுரன் முதலவர் சூழ்ச்சி
இரவலா யிவன்சிறி திந்தாற் பெறுவர்.
எல்லை யுளதோ இவன்மதிக் கிறைவ!
வல்லவன் யாதினும்.

நாராயணன்: (தனதுள்) நல்லது கருதான்.
வல்லமை யென்பயன்!

உ-ம் பிரபு: மன்னவ! அதினும்
உன்தொல் குலத்தில் உன்திரு மேனியில்
வைத்த பரிவும் பத்தியு மெத்தனை!
குடிலனுன் குடிக்கே யடிமை பூண்ட
ஆஞ்ச னேயனே அறியேம்!

நாரா: முழுப் பொய்.
(தனதுள்) வாஞ்சையாய் மன்னனிவ் வாயுரை முகமன்
விடுப்பனோ விடமென? குடிப்பனே!

சேவகன்: கொற்றவ!
நேற்று மாலையில் நின்திரு வாணையிற்
சென்றுழித் திருமுகம் நோக்கி யேதோ
சிந்தனை செய்துதன் சித்த மகிழ்ச்சியால்
தந்தன னெனக்கித் தரள மாலை.

நாரா: (தனதுள்) எதுவோ பொல்லாங் கெண்ணினன். திண்ணம்.

ஜீவ : பார்மின், பார்மின், நம்மீசை வைத்த
ஆர்வமு மன்பும். ஆ! ஆ!

நாரா : (தனதுள்) யாதும்
பேசா திருக்கி லேசுமே நம்மனம்;
குறியாற் கூறுவம்; அறிகி லறிக.

(நாராயணன் செல்ல)

௩-ம் பிரபு : சாட்சியு மோகண் காட்சியா மிதற்கும்!
அங்கைப் புண்ணுக் காடியும் வேண்டுமோ?
எங்கு மில்லையே யிவன்போற் சுவாமி
பத்தி பண்ணுநர். சுமித்திரை பயந்த
புத்திரன், வீரவா கிவர்முதற் போற்றிய
எத்திறத் தவரும் இறைவ! இவனுக்
கிணையோ தன்னய மெண்ணுப் பெருமையில்?

(நாராயணன் மூக்கிற் கரி தேய்த்து வர)

ஜீவ : (நாராயணனை நோக்கி) ஏ! ஏ! நாரணா கரியா யுன்மூக்
கிருந்தவா றென்னை? ஏ! ஏ! இதுவென்!

நாரா : மூக்கிற் கரிய ருளரென நாயனார்
தூக்கிய குறளின் சொற்படி, எல்லாம்
உள்ளநின் னருகவ ரில்லா ராவரோ?

ஜீவ : ஓகோ! ஓகோ! உனக்கென் பைத்தியம்!

யாவரும் : ஓகோ! ஓகோ! ஓகோ! ஓகோ! (யாவரும் நகைக்க)

ஜீவ : நாரணா! நீயும் நடேசன் தோழனே.
(பிரபுக்களை நோக்கி) நல்லது; விசேடமொன் றில்லை போலும்.

முதற் பிரபு : இல்லையெம் மிறைவ! எல்லாப் புவியுநின்
வாகுவே தாங்க! மங்கலம் வரவே!

(பிரபுக்கள் போக)

ஜீவ : நாரா யணா! உனக் கேனிப் பித்து?
தீரா இடும்பையே தெளிவி லையுறல்.

நாரா : எனைவகை தேறியக் கண்ணும், வினைவகை
கோடிய மாந்தர் கோடியின் மேலாம்.

ஜீவ : எதற்குந் திருக்குற ளிடந்தரும்! விடுவிடு.

விரும்பி யெவருந் தின்னுங்
கரும்பு கைப்பதுன் வாய்க்குற் றம்மே.
(அரசனும் சேவகர்களும் போக)

நாரா : (தனிமொழி)
ஐயோ ! இதற்கென் செய்வன் ! அரசன்,
உறுதியா நம்பினன் ; சிறிதும் பிறழான்.
வெறுத்த தெல்லாம் பாலெனு மெய்ம்மை
யுளத்தான் ; களங்க மோரான். குடிலனே
சூதே யுருவாத் தோற்றினன். அவன்றன்
ஓதுவ வுன்னுவ செய்குவ யாவுந்
தன்னயங் கருதி யன்றி மன்னனைச்
சற்று மெண்ணான். முற்றுஞ் சாலமா
நல்லவன் போலவே நடிப்பான், பொல்லா
வஞ்சகன். மன்ன னருகுளோ ரதனை
நெஞ்சிலு நினையார் ; நினையினு முரையார்
இறைவன் குறிப்பிற் கிசைய அறைவர்
வடித்து வடித்து மாற்றொலி போன்றே.
தடுத்து மெய்ம்மை சாற்றுவர் யாரே ?
என்னே யரசர் தன்மை ! மன்னுயிர்க்
காக்கமும் அழிவும் அவர்தங் கடைக்கண்
நோக்கி னுண்டாம் வல்லமை நோற்றுப்
பெற்றார் ; பெற்றவப் பெருமையின் பாரம்
உற்றுநோக் குவரே னுடல்நடுங் காரோ ?
கருப்போ தேனோ என்றவர் களிப்பது.
நெருப்பா றும்மயிர்ப் பாலமும் மன்றோ ?
விழிப்பா யிருக்கிற் பிழைப்பர் ; விழியிமை
கொட்டிற் கோடி பிறழுமே. கொட்டும்
வாலாற் றேளும், வாயாற் பாம்புங்
காலும் விடமெனக் கருதி யாவும்
அடிமுதன் முடிவரை யாய்ந்தா ராய்ந்து
பாரா ராளும் பாரென் படாவே ?
யாரையான் நோவ ! அதினுங் கொடுமை !
அரசர்க் கமைச்ச ரவயவம் அலரோ ?
உறுப்புகள் தாமே உயிரினை யுண்ண
ஒருப்படில் விலக்குவ ருளரோ ? தன்னயம்

மறந்து மன்னுயிர்ச் சகமே மதித்தங்
கிறந்தசிந் தையனோ இவனோ அமைச்சன்?
குடிலன் செய்யும் படிறுகள் வெளியாப்
பொய்யும் மெய்யும் புலப்பட உரைக்க
என்றால், நோக்க நின்றார் நிலையில்
தோன்றுஞ் சித்திர வொளிபோ லியார்க்குஞ்
சான்றோடு காட்டுந் தன்மைய வலவே.
சித்திரப் பார்வை யழுந்தார்க் கெத்தனை
காட்டினுங் கீறிய வரையலாற் காணார்.
என்செய? இனியா னெப்படிச் செப்புவன்?
நிந்தையா நடேசனைப் பேசிய குறிப்புஞ்
சிந்தனை செய்ததாச் செப்பிய செய்தியும்
ஓரில் யாதோ பெரிய வுறுகண்
நேரிடு மென்றென் னெஞ்சம் பதறும்.
என்னே யொருவன் வல்லமை!
இன்னும் பிழைப்பன் மன்னன் விழிக்கிலே. 17

(நாராயணன் போக)

இரண்டாம் அங்கம்: முதற் களம்
முற்றிற்று.

---

# இரண்டாம் அங்கம்

## உ-ம் களம்

இடம்: ஊர்ப்புறத்து ஒரு சார். காலம்: வைகறை.

நடராசன் அருணோதயங் கண்டு நிற்க

(இணைக்குற ளாசிரியப்பா)

நடராசன்: (தனிமொழி)

பரிதியி னுதயம் பார்க்கக் கருதில்
இவ்விடஞ் சாலவு மினிதே. உதயஞ்
செவ்விதிற் கண்டபின் செல்வோம்.
ஓவியத் தொழில்வலோன் ஓவியக் கிழியில்
திட்டுவான் புகுந்த சித்திரம், நீட்டுந்
தூரியந் தொடத்தொடத் துலங்குதல் போல,
சூரியன் பன்னிறக் கதிர்கள் தொடத்தொட
உருவுதோன் றாவணம் ஒன்றாய்ச் செறிந்து
கருகிருண் மயங்கிய காட்சி கழிந்து
சிறிது சிறிதா யுறுப்புகள் தெளியத்
தோன்றுமித் தோற்றம் நன்றே!
சூட்டைச் சேவல் சுரைக்கொடி படர்ந்தவவ்
வீட்டுச் சியின்மேல் விம்பாய் நடந்துபின்
இருசிறை யடித்து நெடுவா யங்காந்து
ஒருமுறை கூவி உழையுளார் புகழ
உற்றுநோக் குவர்போற் சுற்றுநோக்குதலும்,
இருட்பகை யிரவி யிருளெனத் தம்மையுங்
கருதிக் காய்வனோ என்றயிர்த் திருசிறைக்
கையான் மார்பிற் புடைத்துக் கலங்கி
மெய்யாந் தம்பெயர் விளம்பி வாயசம்
பதறியெத் திசையினும் சிதறியோ டுதலும்,
பன்னிறச் சிறகர்ப் பறவைத் தொழுதி
தம்மினந் தழுவிச் சூழ்ந்து வட்டமாய்
அங்கங் கிருந்து தங்கண் முறைமுறை
அஞ்சிறை யொத்தறுத் தடியா, எஞ்சலில்
இசையறி மாக்களின் ஈட்டம் போல

வசையறு பாடல் வழங்கலு மினிதே !
அதுவென் ! ஆஹா ! அலகா லடிக்கடி
தழையுந் தஞ்சிறை தடவி விளக்கிக்
கதுவுங் காத லாணையிட் டறைந்து
பின்புசென் றோயா தன்புபா ராட்டும்
இவ்விரு குருகுங் காதலர்.
கண்டு மவர்நிலை காணார் போல்துகிர்த்
துண்டங் கொண்டு பாலைச் சொரிந்த
பழமெனப் பாவனை பண்ணிக் கொத்தி
யுழையுழை யொதுங்கி யோடிப் போலிக்
கூச்சங் காட்டுமிக் குருகுகா தலியே.
ஆடவர் காத லறைதலுந் தையலர்
கூடமாய்க் கொள்ளலு மியல்பே போலும்.
வாணீ ! மங்காய் ! வாழி நின்குணம் !
ஒருதின மிவ்வயி னுனையான் கண்டுழி
முருகவிழ் குவளைநின் மொய்குழற் சூட்டத்
தந்தனை யன்பாய் மந்தகா சத்தொடு
வாங்கியும்; மதியா தவள்போ லாங்கே
யோடுமவ் வாய்க்கால் நீரிடை விடுத்துச்
சிறுமியர் குறும்பு காட்டிச் சிரித்தனை.
ஏதியா னெண்ணுவ ஞெவன வுடனங்
கலங்கிய கலக்கமென் கண்ணுள தின்றும்.
அழுங்கலை வாணீ ! அறிவேன் ! அறிவேன் !
உளத்தோ டுளஞ்சென் றொன்றிடிற் பின்னர்
வியர்த்தமே செய்கையும் மொழியும்—
{ உற்றுச் செவி கொடுத்து } “வாணி” என்றபேர் கேட்டனன் ! யாரது ?
காணின் நன்றாம். காரிகை யார்கொல்?
(பலதேவனும், ஒரு நற்றாயும், தோழனும் தொலையில் வர)
சொல்வதென் ! சூழ்ச்சியென் ! கேட்குதும் மறைந்து.

(ஆசிரியத்துறை)

நற்றாய் : நாணமு மென்மகள் நன்னல மும்முருகத் துன்னை நம்பி
வீணில் விழைந்தனைக் கேடவள் தன்னுடன் வீவுறுமே.
பேணிய என்குடிப் பேர்பெரி தாதலி னால்
வாணியின் வம்புரை யாமினி யஞ்சுதும் வாரலையோ;

(ஆசிரியப்பாவின் தொடர்ச்சி)

நட: (தனதுள்) ஐயோ! இதுவென்! கட்டம்! கட்டம்!

(ஆசிரியத்துறை)

நற்றாய்: நாணிக் கவிழ்த்தவள் தன்றலை தொட்டு நவின்றவுன்றன்
ஆணைக் கவசமாம் அற்றினி விழிநீ மஞ்சிலம்பாம்.
காணப் பிறர்பொருள் கள்ளல மாதலி னால்
வாணிக் குரித்தெனக் கேட்டபின் வெளவலம் வாரலையோ.

(ஆசிரியப்பாவின் தொடர்ச்சி)

நட: (தனதுள்) நாராயணன் அன் றுரைத்தது மெய்யே!

(ஆசிரியத்துறை)

நற்றாய்: நாணமிலா மகள் சாவுக் கினிவெகு நாள்களில்லை
காணிய நீயும் விரும்பலை யோலையிற் கண்டுகொள்வை.
பேணிய நின்வாழ் வேபெரி தாதலி னால்
வாணி யொளித்துநீ வாசித் தறிந்துகொள் வாரலையோ.

(ஆசிரியப்பாவின் தொடர்ச்சி)

நட: (தனதுள்) ஆயினு மித்தனை பாதகனோ இவன்!

பலதேவன்: எவருனக் குரைத்தா ரித்தனை பழங்கதை!
சவமவ ளெனக்கேன்? இவள்சுக மெங்கே?
பொய்பொய் நம்பலை, ஐயமெல் லாம்விடு.
பணத்திற் காக்கிடப் பிணந்துடிக் கின்றது.
சேரன் பதிக்கோர் செய்திசொல் லுதற்காச்
சென்றிதோ விரண்டு நாளையிற் றிரும்புவன்.
இச்சிறு பொற்றொடி மைச்சினிக்குக் கொடு.
வருகுவ னீதோ! மறக்கன்மி னென்னை!
(நற்றாய் போக, பலதேவனும் தோழனும் நடக்க)

தோழன்: செவ்விது! செவ்விது! இவ்விட மெத்தனை!
ஐந்தோ? ஆறோ?

பலதே: அறியேன். போ! போ!
இச்சுக மேசுகம், மெய்ச்சுகம் விளம்பில்.

தோழன்: வாணியை மணந்தபின் பூணுவை விலங்கு.

பலதே: வாணி யாயினென்? மனோன்மணி யாயினென்?

அதைவிடப் படித்த வல்லையா யினுமென் ?
கணிசத் திற்கது ; காரியத் திற்கிது,
வாவா போவோம் ; வழிபார்த் திருக்குஞ்
சேவக ராதியர் செய்குவ ரையம்.
எத்தனை பொழுதிங் கானது வீடுவிட்டு ?
ஏகுவம் விரைவில், இனித்தா மதமிலை.

(பலதேவனும் தோழனும் போக.)

நட : கொடுமை ! கொடுமை ! இக் கொடும்பா தகன்சொல்
கடுவெனப் பரந்தென் கைகால் நடுக்கின.
கைத்ததென் கண்ணுங் காதும்.
இத்தனை துட்டரு மிருப்பரோ வுலகில் ?
ஐந்தோ ! ஆறோ ! அறியான் ! பாதகன் !
நொந்தது புண்ணா யென்னுளங் கேட்க.
மெய்ச்சுக மிதுவாம் ! விளம்புவ தென்னினி?
இச்சண் டாளனும் வாணியும் ! ஏற்கும் !
ஒருபிடி யாயவ னுயிரினை வாங்க
ஒழிய தெண்ணம் ; உறுத்தின தென்கை !
தீண்டவும் வேண்டுமோ தீயனை ?
என்னிவ னனந்தைக் கேகுங் காரியம் ?
யாருடன் வினவ? நாரணனோ அது ?

(நாராயணன் வர)

வா வா, நாரண !

நாராயணன் : ஏ ! ஏ ! என்னை !
சினந்தனை தனியாய் ?

நட : என் இத் தீயவன்
அனந்தைக் கேகுங் காரணம் ?

நாரா : யார் ? யார் ?

நட : அறிவை ! நீவிளை யாடலை ; அறைதி.

நாரா : வதுவை மனோன்மணி தனக்கு வழங்கிட—

நட : அதுவும் நன்றே ! கெடுவனிவ் வரசன் !

நாரா : அடுத்தது வாணியின் மணமும், அறைந்துளேன்.

நட : விடுத்திடவ் வெண்ணம்; தடுக்கையா னறிவன்;
விடுத்தனன் கண்டும் ; எரித்திடுவேன் நொடி.

உறுதியொன் றுளதேல்! உரையாய் நடந்தவை.

நாரா: முதியவ ருசிதனுக் குரைக்க மற்றவன்
வதுவை யவ்வழியே யாற்றிட வாணியை
அதட்டினன்.

நட: அதற்கவள்?

நாரா: மறுத்தனள்.

நட: எங்ஙனம்?

நாரா: 'இறக்கினு மதற்கியா னிசையேன்' என்றாள்.

நட: அரைக்கண முன்ன மறிந்திலே னிம்மொழி.

நாரா: என்னே யுன்மதி! ஏந்திழை யார்சொல்
நீர்மே லெழுத்தாம்; யாரறி வாருளம்?
மாறி நாடொறும் வேறுபா டுறுமதி
யெண்ணுட் பட்டு நண்ணயங் கூடலாற்
பெண்கள் நிலையிற் பெரிதுந் திடனே.
புண்கொள் நெஞ்சொடு புலம்புகின் றாய்மிக.
காதலா ஊழிக் கனன்முன் வையாய்
மாதரார் கட்டுரை மாயா தென்செயும்?
அக்கண முற்ற துக்கந் தூண்டக்
கன்னியா யிருப்ப னென்று ளன்றி
யன்ன தவள்கருத் தாமோ?

நட: அறியாய்!
புருடரே புலையர்; நிலையிலாப் பதடிகள்;
இருளடை நெஞ்சினர்; ஈரமி லுளத்தர்;
ஆணையு மவர்க்கொரு விணுரை; அறிந்தேன்.
தந்நய மன்றிப் பின்னொன் றறியாக்
காதகர்; கடையர்; கல்வியில் கசடர்.

நாரா: ஓதி யுணரினும் மாத ருள்ளம்
அலையெறி கடலினுஞ் சலன மென்ப.

நட: திரைபொரல் கரையிலும் வெளியிலு மன்றி,
கயத்திலும் அகத்திலுங் கலக்க மவர்க்கிலை,
தியக்கமும் மயக்கமுஞ் செறிவ தரிவையர்,
உள்ளப் பரப்பி லொருபுறத் தன்றி,
பள்ளத் தாழ்ச்சியிற் பரிவும், கொள்கை

விள்ளா முரணும், மெய்ம்மையில் தெளிவும்,
உள்ளார்; அவர்தம் முறுதிநீ யுணராய்.
சுற்றிச் சுழலினுங் கறங்கொரு நிலையைப்
பற்றியே சுழலும்; அப்படியலர் புருடர்.
சேடவ ருறுவதிங் காடவ ருருவுகொண்
டலைதருங் கொடியவிவ் வலைகைகள் வழியே.
புருடரோ இவரும்! கருவுறுங் குழவிமெய்
மென்றிட நன்றெனக் கொன்றுதின் றிடுவர்.
அவாவிற் களவிலை, அன்போ அறியார்.
மணமும் அவர்க்கொரு வாணிகம்! அந்தோ!
சீ! சீ! என்இத் தீயவர் செய்கை!
மாசிலா வையகத் திவ்வுயிர் வாழ்க்கை
ஆம்பெருங் கடலுள் போம்மரக் கலனும்
ஆடவர் நெஞ்சம், அறத்துறை யகன்று
நீள்திசை சுழற்று நிலையிலாக் காற்றும்
நிண்ணய மற்ற எண்ண மியக்கச்
சென்றுழிச் சென்று நன்றறி வின்றி
அலையா வண்ணம் அறத்துறைக் குடாவில்
நிலைபெற நிறுத்துநங் கூரமாய், பின்னுஞ்
செய்வினை முயற்சியிற் பொய்வகைப் புன்னெறிக்
கெற்றுண் டகன்று பற்றொன் றின்றி
ஆசையாந் திசைதொறும் அலைந்து திரிந்து
கெடாவணங் கடாவிக் கெழுமிய அன்புசேர்
அறப்பிடி கடைப்பிடி யாகக் காட்டிச்
சிறப்புயர் சுகத்துறை சேர்த்துசுக் காணும்,
நின்றது மங்கையர் நிலைமை யென்று
நினையா மனிதர், விலங்கினுங் கீழாய்
அனையார் தருசிற் றின்பமே யவாவி
வாழ்க்கைத் துணையா வந்தவர் தம்மைத்
தாழ்த்துஞ் சேறு மாற்றுவர். தவத்தால்
மந்திரவாள் பெற்று மாற்றலர் வெல்லாது
அந்தோ! தம்மெய் யரிவார் போலத்
தனியே தளருந் தமக்குத் துணையாய்
வருபவர் தமையும் பகைவரா நலிந்து
பாலையும் நஞ்சாப் பண்ணுவர். அவர்தம்

மதிகே டென்னே! துதிபெறு மன்புநற்
குணமுறு மாரில் துணைவ ராயின்
இல்லதென் னுலகில்? இவற்றுடன் கல்விசேர்
நல்லறி வாந்தேற் பொன்மலர் நாற்றம்
பெற்றவா றன்றோ? எற்றே மடமை!
கேட்ட வேட்டவை யாவையு மீயுங்
கற்பக தருவென வற்பமுங் கருதாது
அஃதுடன் புழித்துப் புழுப்பற வெரித்துக்
கரிபோற் முயன்று சம்பிய னேனென,
தனக்கென வாழுந் தனிமிரு கத்தின்
மனக்கோள் திரித்து மற்றைய ரின்பமுந்
துன்பமுந் தனதா அன்புபா ராட்ட,
மெள்ளமெள் ளத்தன் னுள்ளம் விரித்துப்
பொறையுஞ் சாந்தியும் படிப்படி புகட்டிச்
சிறிது சிறிதுதன் சித்தந் தெளித்துத்
தானெனு நினைப்புந் தனக்கெனு மிச்சையும்
ஒய்வுறச் செய்து,மற் றொன்றாய் நின்ற
எங்கு நிறைந்தபே ரின்ப வெள்ளம்
முங்கி யதனுள் மூழ்கிட யாரையும்
பக்குவஞ் செய்புநற் பள்ளிச் சாலை, இவ்
இல்லற மென்பதோர் நல்லுணர் வின்றி,
உடற்றின வடக்குமா உரைஞ்சிடு தடியென
மடத்தனங் கருதித் தம்மையும் பிறரையுங்
கெடுத்திடு மாந்தரின் கெடுமதி யென்னே!
நாரண! இவ்வயிற் கேட்டதுங் கண்டதுந்
தீராத் துயரமே செய்வது. செல்குவன்.
ஏதா யினுமினி யெய்தில்,
ஓதாய் முனிவ ருறையு ளுற்றே. 1

(நடராஜன் போக)

(நேரிசை யாசிரியப்பா)

நாரா: (தனிமொழி) நல்லது மிகவும்! செல்லிடந் தோறுங்
கதையா யிருந்தது.கண்டதென்? கேட்டதென்?
புதுமை யிங்கிதுவும்! பொருந்துவ
தெதுவா யினுஞ்சரி. ஏகுவம் மனைக்கே. 2

(நாராயணன் போக)

இரண்டாம் அங்கம்: இரண்டாவது களம் முற்றிற்று.

# இரண்டாம் அங்கம்

## ௧-ம் களம்

இடம்: திருவனந்தையிற் சேரனரண்மனை. காலம்: காலை.

புருடோத்தமன் சிந்தித்திருக்க.

(நேரிசை யாசிரியப்பா)

புருடோத்தமன்: (தனிமொழி)

யார்கொலோ அறியேம்! யார்கொலோ அறியேம்!
வார்குழல் துகிலொடு சோர மாசிலா
மதிமுகங் கவிழ்த்து நுதிவேற் கண்கள்
விரகதா பத்தால் தளரநீ ரிறைப்ப
பரிபுர மணிந்த பங்கயம் வருந்துபு
விரல்நிலங் கிழிப்ப வெட்கந் துறந்து
விண்ணணங் கனைய கன்னியர் பலரென்
கண்முன் னின்றங் கிரக்கினுங் கலங்காச்
சித்தம் மத்துறு தயிரிற் றிரிந்து
பித்துறச் செய்தவிப் பேதை யார்கொலோ?
எவ்வுல கினளோ? அறியேம். இணையிலா
நவ்வியும் நண்பும் நலனு முடையவள்
யார்கொலோ? நாள்பல வானவே. ஆ! ஆ!
விழிப்போ டென்கண் காணில்! வீண்! வீண்!
பழிப்பாம் பிறருடன் பகர்தல். பகர்வதென்?
கனவு பொய்யெனக் கழறுவர். பொய்யோ?
நனவினு மொழுங்காய் நாடொறுந் தோற்றும்.
பொய்யலப்: பொய்யல; ஐய மெனக்கிலை.
நாடொறு மொருகலை கூடி வளரும்
மதியென வெழில்தினம் வளர்வது போலும்.
முதனாள் முறுவல் கண்டிலம்; கடைக்கணில்
ஆர்வம் அலையெறி பார்வையன் றிருந்தது.
நேற்றிராக் கண்ட தோற்றமென் னெஞ்சம்
பருகின தையோ! கரிய கூந்தலின்
சிறுசுருள் பிறைநிகர் நறுநுதற் புரளப்

பொருசிலைப் புருவ மொருதலை நெகிழ்த்துச்
செவ்வரி படர்ந்த மைவழி நெடுவிழி
உழுவலோ டென்முக நோக்க வெழுங்கால்
என்னைக் கெதிர்ப்படத் தன்னைக் ககற்றி,
வெய்யோன் வாரியில் விழுங்கால் துய்ய
சேணிடைத் தோன்றுஞ் செக்கர்போற் கன்னம்
நாணொடு சிவக்க, ஊர்கோள் நாப்பண்
தோன்றிய உவாமதி போன்றங் கெழிலொளி
சுற்றிய வதனஞ் சற்றுக் கவிழ்த்தி,
அமுதமூற் றிருக்குங் குமுதவா யலர்ந்து
மந்த காசந் தந்தவள் நின்ற
நிலைமையென் னெஞ்சம் நீங்குவ தன்றே !
தேவ கன்னியர் முதலாந் தெரிவையர்
யாவரே யாயினும் மென்கண் தனக்கு
மைந்தரா மாற்றுமிச் சுந்தரி யார்கொலோ ?
அறியுமா றிலையே ! அயர்க்குமா றிலையே !
உண்டெனிற் கண்டிடல் வேண்டும். இலையெனில்
இன்றே மறத்தல் நன்றே. ஆம் ! இனி
மறத்தலே கருமம். மறப்பது மெப்படி ?
போரெவ ருடனே யாயினும் புரியிலவ்
ஆரவா ரத்தி லயர்ப்போ மன்றி—

[சேவகன் வர]

சேவகன் : எழுதரு மேனி யிறைவ ! நின் வாயிலில்
வழுதியின் தூதுவன் வந்துகாக் கின்றான்.

புரு : யாரவன் ?

சேவகன் : பேர்பல தேவனென் றறைந்தான்.

புரு : (தனதுள்) சோரன் !

(சேவகனை நோக்கி) வரச்சொல்.

(தனதுள்) தூதேன் ? எதற்கிக்
கயவனைக் கைதவ னனுப்பினான் ?
நயந்தி துணர்ந்து நட்டிலன் போன்மே. [1]

(பலதேவன் வர)

பலதேவன் : மங்கலம், மங்கலம் ! மலய மன்னவ !
பொங்கலைப் புணரிசூழ் புவிபுகழ் சுமக்கத்
தன்தோள் தாரணி தாங்க வெஃகும்

ஒன்னார் தலையொடு திகிரி யுருட்டிக்
குடங்கை யணையிற் குறும்பர் தூங்க
இடம்பார்த் தொதுங்குந் தடமுற் றத்து
மேம்படு திருநெல் வேலிவீற் றிருக்கும்
வேம்பார் ஜீவக வேந்தன் விடுத்த
தூதியான். என்பே ரோதில்அவ் வழுதியின்
மந்திரச் சிகாமணி தந்திரத் தலைவன்,
பொருந்தலர் துணுக்குறு மருந்திறற் சூழ்ச்சியன்
குடிலேந் திரன்மகன்—

புரு: (தனதுள்) மடையன்.
வந்ததென்?

பலதே: அப்பெரு வழுதி யொப்பறு மாநகர்
நெல்லையிற் கண்டு புல்லா ரீட்டமும்
அரவின தரசும் வெருவி ஞெரேலெனப்
பிறவிப் பௌவத் தெல்லையும் வறிதாம்
ஆணவத் தாழ்ச்சியும் நாண அகழ்வலந்
தொட்டஞ் ஞானத் தொடர்பினு முரமாய்க்
கட்டிய மதிற்கணங் காக்க விடயத்து
எட்டி யழுத்தி யிழுக்கும் புலன்களின்
யந்திரப் படைகள் எண்ணில வியற்றி—

புரு: வந்த அலுவலென்?

பலதே: மன்னவா! நீயாள்
வஞ்சிநா டதற்குத் தென்கீழ் வாய்ந்த
நன்செய்நா டென்றொரு நாடுள தன்றே?
எங்கட் கந்நா டுரித்தாம். அங்கு
பரவு பாடையும் விரவுமா சாரமும்
நோக்கில் வேறொரு சாக்கியம் வேண்டா—

புரு: நல்லது! சொல்லாய்.

பலதே: தொல்லையாங் கிழமைபா
ராட்டித் தங்கோல் நாட்டி நடத்த
வல்ல மன்னவ ரின்மையால் வழுதிநாட்டு
எல்லையுட் புகுந்தங் கிறுத்துச் சின்னாள்

சதியாய் நீபர சாண்டாய்.......

புரு : அதனால்?

பலதே: அன்னை தன் னுரிமை மீட்க உன்னியே
முதுநக ராமெழின் மதுரை துறந்து
நெல்லைக் கல்நகர் வல்லையி லாக்கி
ஈண்டின னிங்கே.

புரு : வேண்டிய தென்னை?
உரையாய் விரைவில்.

பலதே: உதியனும் செழியனும்
போர்தனி புரியில் யார்கொல் பிழைப்பர்?
பங்கமி லிரவியுந் திங்களுந் தூவி
எதிர்ப்படுங் காலை, கதிர்க்கடுங் கடவுள்
மறையஇவ் வுலகில் வயங்கிருள் நிறையும்
அவரந் நிலையி லமர்ந்திடி லவ்விருள்
தவறுந் தன்மைபோல் நீவி ரிருவருஞ்
சமர்செயி னுலகந் தாங்கா தென்றே
எமையிங் கேவி யிவ்வவைக் கேற்றவை
நீதியா யெடுத்தெலா மோதி,நன் செய்நாடு
உடையார்க் குரிமை நோக்கி யளிப்பதே
கடனெனக் கழறிப் பின்னிக ழுன்கருத்து
அறிந்து மீளவே விடுத்தான்.

புரு : ஆ! ஹா!
முடிந்ததோ? இல்லையெனின் முற்றுஞ் செப்புவாய்.

பலதே: மேலு மொருமொழி விளம்புதும் வேந்தே!
சாலவும் நீவிர் பகைக்கிற் சகமெலாம்
ஆழ்துயர் மூழ்கலு மன்றி உங்கட்கு
ஏது விளையுமோ அறியேம் ஆதலின்,
அஞ்சா அரியே றன்னஜீ வகனுடன்
வெஞ்சமர் விளைத்தல் நன்றல.

புரு : (பயந்தாற்போல்) ஆ! ஆ!

பலதே: நன்செய்நா டினிமேன் மீட்டு நல்கலும்
எஞ்சலில் பெரும்புகழ்க் கேற்ற தன்றெனில்

உரைக்குது முபாயமொன் றுசிதன் மனையில்
திரைக்கட லமுதே யுருக்கொண் டதுபோல்
ஒருமலர் மலர்ந்தங் குறைந்தது. தேனுணா
விரைமலர் தேடவி வீற்றிங் கிருந்தது.
அன்னவள் மன்ன! நின் அரியணை யமரில்
தென்னவன் மனமுந் திருந்தும். நன்செய்நா
டுன்னது மாகும்.

புரு: உண்மை! ஓ ஹோ!
வண்டு மலரிடை யணையஉன் நாட்டிற்
கொண்டு விடுவரே போலும். நன்று!
கோதறு மிருபுறக் காத லன்றியெம்
நாட்டிடை வேட்டன்மற் றில்லை. மேலும்நம்
அரியணை யிருவர்க் கிடங்கொடா தறிகுதி.

பலதே: (தனதுள்) சுரிகுழல் வதுவை போனது. சுகம்! சுகம்!

புரு: ஆதலின் முடிவில்நீ யோதிய தொழிக.
நன்செய்நா டதற்கா நாடிநீ நவின்ற
வெஞ்சொல் நினைதொறும் மேலிடும் நகையே
அடைக்கலம் என்றுநம் அமைச்சரை யடைந்து
நடைப்பிணம் போலக் கடைத்தலை திரிந்து
முடியுடன் செங்கோ லடியிறை வைத்துப்
புரவலர் பலர்வாய் புதைத்து நிற்க,
அனையர்தம் மனைவிய ரவாவிய மங்கல
நாணே யிரந்து நாணந் துறந்து
கெஞ்சுமெஞ் சபையில், அஞ்சா தெமது
நன்செய்நா டதனை நாவுகூ சாமற்
பாண்டியற் களிக்க என்றுரை பகர்ந்தும்,
ஈண்டுநீ பின்னு முயிர்ப்பது தூதுவன்
என்றபே றொன்றா லென்றே யறிகுதி.
கருதா துனையிங் கேவிய கைதவன்
ஒருவா ரத்திற் குள்ளா யவன்முடி
யார்பகை யின்மையா லிதுகா றணிந்து
பார்வகித் தானெனப் பகரா தறிவன்.
விரித்துநீ யெம்மிட முரைத்த புரிசையும்,
அரிக்குநே ரென்னநீ யறைந்த அரசனும்

இருப்பரேற் காண்குவம் அவர்வலி யினையும்.
(சேவகனை நோக்கி) அருள்வர தனையிங் கழையாய்! சேவக!
(அருள் வரதன் வர)

பலதே : (தனதுள்) சிந்தனை முடிந்தது.

அருள்வரதன் : வந்தனம்! வந்தனம்!!

புரு : நல்லது! செழியன் நெல்லையை நோக்கி
நாளையா மேகுவம். நமதுபோர் வீரரவ்
வேளையா யத்தமாய் வைப்பாய்.

அருள் : ஆஞ்ஞை.

புரு : செல்லாய் விரைவில். தென்னன் போர்க்கு
(பலதேவனை நோக்கி) வல்லா னென்னில் வாரமொன் றிற்குள்
துன்னிய சேனையுந் தானும்நீ சொன்ன
கடிபுரி பலமாக் காக்க. இல்லையேல்,
முடிநம் அடியில் வைத்து நாமிடும்
ஆணைக் கடங்கி யமர்க. எமதிடம்
வீணுக் குன்னை விடுத்தகை தவற்கு
வஞ்சியான் மொழிந்த மாற்றமீ தெனவே
யெஞ்சா தியம்புதி. ஏகாய், ஏகாய்!
(பலதேவன் போக)

(தனதுள்) மூட்டா ளிவனை விட்டவன் குட்டுப்
பட்டபோ தன்றிப் பாரா னுண்மை.
பச்சாத் தாபப் படுத்துவம்; நிச்சயம்.
நண்ணிய நமது கனவின்
எண்ண மேகினும் ஏகும் இனியே. 2
(புருடோத்தமன் போக)

(காவற் படைஞரும், சேவகர்களும் அருள்வரதனைச் சுற்றி நிற்க)

நிலைமண்டில ஆசிரியப்பா

அருள் : தீர்ந்தது சூரரே! நுந்தோள் தினவு;
நேர்ந்தது வெம்போர்.

யாவரும் : வாழ்கநம் வேந்தே!

முதற்படைஞன் : நொந்தோம்; நொந்தோ மிதுகா றுறங்கி.

யாவரும் : உய்ந்தோம்; உய்ந்தோம், வாழ்க உன்சொல்!

உ-ம் படை : பெரும்போ ரிலாநாள் பிறவா நாளே.

௩-ம் படை: மெய்யோ? பொய்யோ? ஐய! இதுவும்.

௪-ம் படை: யாவரோ, பகைவர்? அருளா பரணா!
தேவரோ, அசுரரோ, மூவரோ, யாவர்?

அருள்: பாண்டியன்.

யாவரும்: (இகழ்ச்சியாய்) பாண்டியன்! சீச்சீ! பகடி

அருள்: ஈண்டுவந் தவனவன் தூதன். யதார்த்தம்.—

யாவரும்: வியப்பு! வியப்பு!

௩-ம் படை: வேற்றா ளொருவனென்
அயற்புறம் போனான். அவன்முகம் நோக்குழி
வியர்த்தனன்; தூதுடை கண்டு விடுத்தேன்.

முதற் படை: அவன்றான்! அவன்றான்! அவன்றான்! தூதன்

௪-ம் படை: யாதோ காரணம்? ஓதாய், தலைவா!

௨-ம் படை: அப்பந் தின்னவோ? அலால்குழி யெண்ணவோ
செப்பிய துனக்கு? நமக்கேன்? சீச்சீ!

அருள்: நல்லது வீரரே! நாளை வைகறை
நெல்லையை வளைந்து நெடும்போர் குறித்துச்
செல்லற் குரியன திட்டஞ் செய்வான்
வல்லையி லேகுதும். மங்கல முமக்கே. 3

(அருள் வரதன் முதலியோர் போக)

*இரண்டாம் அங்கம்: ௩-வது களம் முற்றிற்று.*

**கலித்துறை**

அடைய மனோன்மணி அம்மையுஞ் சேரனும் ஆசைகொள்ள
இடையில் நிகழ்ந்த கணத்திற வைபவ மென்னையென்க!
உடலு ளுலண்டென வேயுழல் கின்ற வுயிர்களன்புந்
தடையில் கருணையுஞ் சந்தித்த லெங்ஙனஞ் சாற்றுதுமே.

## இரண்டாம் அங்கம்

*முற்றிற்று.*

---

| | | |
|---|---|---|
| ஆசிரியப்பா | 22-க்கு அடி | 708 |
| ஆசிரியத்துறை | 3-க்கு ,, | 12 |
| கலித்துறை | 1-க்கு ,, | 4 |
| ஆக அங்கம் 1-க்கு: பா-26-க்கு ,, | | 724 |

---

# மூன்றாம் அங்கம்

## க-வது களம்

இடம்: பாண்டியன் அரண்மனை. காலம்: காலை.

ஜீவகனும் குடிலனும் மந்திராலோசனை.

[நிலைமண்டில ஆசிரியப்பா]

ஜீவகன்:
ஐயமென்? அருள்சூழ் அமைச்ச! நின்றனையன்
பெய்வளைக் கன்னியென் பேதையின் வதுவைக்
குரியன முற்று மொருங்கே முடித்து
வருவதற் கமைந்த வலிமையுங் கல்வியும்
உபாயமும் யாவு முடையான்; அதனால்
அபாயங் கருதிநீ யையுறல் வீண்! வீண்!

குடிலன்:
பலதேவ னொருபா றுதுறு மெனவெனக்
கிலையிலை யையஞ் சிறிதும். உலகத்து
இயற்கை யறியா இளையோ னாகிலும்
முயற்சியின் மதியின் முதியோ னெனவே
மொழிகுவர். அவனாற் பழுதிலை. கொற்றவ!
வஞ்சிநாட் டுள்ளார் வஞ்சனைக் கஞ்சார்.
நஞ்சினுங் கொடிய நெஞ்சினர், அவர்தாங்
கெஞ்சிடின் மிஞ்சுவர்; மிஞ்சிடிற் கெஞ்சுவர்;
என்னுந் தொன்மொழி யொன்றுண் டதனால்
மன்னவ! சற்றே மருளு மென்னுளம்.
அன்றியும் புருடோத் தமனெனு மரசன்
கன்றுஞ் சினத்தோ னென்றார் பலரும்.

ஜீவ:
சினத்தோ னாயினென்? தேவருந் தத்தம்
மனத்தே யவாவி மயங்குறும் மனோன்மணி
திருவும் வெருவு முருவும், பெருகும்
அருளுறை யகமும், மருளறு முணர்வும்,
முன்னமே யிருடிகள் மொழியக் கேட்டுளன்.
அன்னவன் தன்னிடைப் பின்னரும் பெயர்த்துக்
குறிப்பால் நமது கொள்கை யுணர்த்தில்,
செறித்திடுஞ் சிறையினை யுடைத்திடும்புனல்போல்

தாங்கா மகிழ்ச்சியுள் தாழ்ந்தவ னிப்பால்
தலையா லோடி வருவன். உனக்கு
மலைவேன் மந்திரக் குடிலேந் திரனே!

குடில: முனிவர்க ளாங்கே முன்னர் மொழிந்தனர்
எனநாம் நினைப்பதற் கில்லை. நம் மழுதின்
எழிலெலா மெங்ஙனம் முனிவோர் மொழிவர்?
துறந்தார்க் கவைதாந் தோற்றுமோ மறந்தும்?
சிறந்த நூலுணர்வுந் தெளிந்ததோ ருளமுஞ்
செப்பின ரென்றிடி லொப்பலாந் தகைத்தே.
ஆயினும், மலையநாட் டரசன் நமது
தாயின் தன்மை சகலமு மிப்போது
அறியா தொழியான்; அயிர்ப்பொன் றில்லை.
நெறிமுறை சிறிதும் பிறழா னினது
தூதுவன் யாவு மோதுவன் திண்ணம்
அம்ம! தனியே யவன்பல பொழுதும்
மம்ம ருழன்றவன் போன்று மனோன்மணி
அவயவத் தழகெலாம் மாறா தறைந்தறைந்து,
இமையவர் தமக்கு மிசையுமோ இவளது
பணிவிடை? நமது பாக்கிய மன்றோ
அணிதா யிருந்திவட் காம்பணி யாற்றுதும்?
என்றுமிப் படியே யிவள்பணி விடையில்
நின்றுநம் முயிர்விடி லன்றோ நன்றாம்?
என்றவன் பலமுறை யியம்பல்கேட் டுளனே.

ஜீவ: ஐயமோ? குடிலா! மெய்ம்மையும் இராஜ
பத்தியு நிறைந்த பலதே வன்றன்
சித்த மென்குல திலகமாந் திருவுடன்
பரிவுற லியல்பே. அரிதாம் நினது
புத்திர னென்னில், இத்திற மென்றிங்கு
ஓதவும் வேண்டுவ துளதோ? ஏதிலும்?

குடில: அதுகுறித் தன்றே யறைந்ததெம் மிறைவ!
மதிகுலக் கொழுந்தாம் மனோன்மணி சீரெலாம்
அறியினுஞ் சேரன் வெறிகொளுஞ் சிந்தையன்
ஆதலின் வதுவைக் கவன்தான் இசைவனே,
யாதோ வெனவென் மனந்தா னயிர்க்கும்;

அவன்குண மொருபடித் தன்றே; அவனுளம்
உவந்தன வெல்லாம் உஞற்றுவ னென்றே
நாட்டுளார் நவில்வது கேட்டுளாய் நீயும்.

ஜீவ: ஆம்! ஆம்! அறிந்துளேம். ஏமாப் படைந்த
தன்னுளம் வியந்தவை யின்னவென் றில்லை.
வேதம் வகுத்த வியாசன் வியந்து
போற்றினும் பொருட்டா வெண்ணான்; புலையன்
சாற்றுத லொருகால் தான்மகிழ்ந் திடுவன்;
ஒருவன் றனதடி யிணையடைந் துறவே
பெரிது விரும்பினும் பெருமைபா ராட்டுவன்;
மற்றோர் மனிதன் சற்றுமெண் ணாதே
செருப்பால் மிதிக்கினும் விருப்பா யிருப்பன்,
மலரிடிற் காய்வன்; பரவிடின் மகிழ்வன்;
பெரியோர் சிறியோர் பேதைய ரறிஞர்
உரியோ ரயலோ ரென்றவ னொன்றும்
உன்னான். ஆயினு மின்னவை யாவும்
பிரபுத் துவமலாற் பிறவல குடிலா!

குடில: அடியேற் கவ்விடத் தையமொன் றுளது.
முடிபுனை மன்னரிற் கடிநகர்ச் செருக்கும்
இணையிலாச் சேனையு மீறிலா நிதியுந்
துணிவுறு வுளனும் பணிகிலா வுரனும்
உனைவிட எவர்க்குள? ஓதுவாய். உன்வயின்
தினையள வேனுஞ் சேரா தாகும்
ஒருகுணம் பிரபுத் துவமென யாரே
உரைதர உன்னுவர்? ஒவ்வுவ தெவ்விதம்?
மலையன் தந்தைகீழ்த் தாய்க்கீழ் வளர்ந்தவன்
அலனெனுந் தன்மைநீ யாய்ந்திலை போலும்.
நன்றுதீ தென்றவ னொன்றையு நாடான்
என்றிடில் நாஞ்சொலும் நன்மையு மெங்ஙனம்
நாடுவ னெனவெனக் கோடுமோர் நினைவே.

ஜீவ: ஒக்கும்! ஒக்கும்நீ யுரைத்தவை முற்றும்.
குலகுரு கூறுதல் கொண்டில மென்னில்
நலமன் றென்றே நாடி யனுப்பினேம்.
நயந்திலனாகி லவன்விதி. நமக்கென்?

இயைந்த கணவர்வே றுயிரம். காண்குதும்.

குடில : அதற்கே னையம்? ஆயிரம்! ஆயிரம்!
இதுமாத் திரமன் றிறைவ! சேரன்
சென்றவர்க் கெங்ஙனந் தீதிழைப் பானோ
என்றே யென்மனம் பதறும். ஏவுமுன் . .
உரைக்க வுன்னினே னெனினு முன்றன்
திருக்குறிப் பிற்கெதிர் செப்பிட அஞ்சினேன்.

ஜீவ : வெருவலை குடிலா! அரிதாம் நமது
தூதுவர்க் கிழிபவன் செய்யத் துணியும்
போதலோ காணுதி, பொருநைத் துறைவன்
செருக்குந் திண்ணமும் வெறுக்கையும் போம்விதம்!
விடுவனோ சிறிதில்? குடில! உன் மகற்குத்
தினைத்துணை தீங்கவன் செய்யின்என் மகட்குப்
பனைத்துணை செய்ததாப் பழிபா ராட்டுவன்.

(ஒற்றன் வர)

ஒற்றன் : மங்கலம்! மங்கலம்! மதிகுல மன்னவா!

ஜீவ: எஙகுளார நமது தூதுவர்?

ஒற்றன் : இதோ! இம்
மாலையில் வருவர். வாய்ந்தவை முற்றுமிவ்
ஓலையில் விளங்கும்; ஒன்னல ரேறே!

(ஒற்றன் போக, ஜீவகன் ஓலை வாசிக்க.)

குடில : (தனதுள்) ஒற்றன் முகக்குறி ஒரிலெம் மெண்ணம்
முற்றும் முடிந்ததற் கற்றமொன் றில்லை.
போரும் வந்தது. நேரும் புரவலற்
கிறுதியு மெமக்குநல் லுறுதியும் நேர்ந்தன.

ஜீவ: (தனதுள்) துட்டன்! கெட்டான்! விட்டநந் தூதனை
யேசினுன்; இகழ்ந்தான் பேசிய வதுவையும்.
அடியில்நம் முடிவைத் தவனு ணையிற்கீழ்ப்
படியில் விடுவனும்; படைகொடு வருவனும்;
முடிபறித் திடுவனும்; முடிபறித் திடுவன்!

(குடிலனை நோக்கி) குடிலா! உனைப்போற் கூரிய மதியோர்
கிடையார். கிடையார். அடையவும் நோக்காய்;
கடையவன் விடுத்த விடையதி வியப்பே!

(குடிலன் ஓலை நோக்க)

குடில: நன்னலர் கூற்றே! என்னுதற் கென்னே!
உன்னவா என்றியாம் உறவுபா ராட்டிற்
குத்சவா எனும்உன் மத்தனன் றேயிவன்!
யுத்தந் தனக்கெள் ளத்தனை யேனும்
வெருவினேம் அல்லோம். திருவினுஞ் சிறிய
உருவினாள் தனக்கிங் குரைத்ததோர் குற்றமும்
இழிவுடை மென்னியே அழியு மென்னுளம்!

ஜீவ: பொறு! பொறு! குடில! மறுவிலா நமக்கும்
ஒருமறுக் கூறினேன் குலம்வே றோடுங்
கருவறுத் திடலுன் கண்ணுற் காண்டி.

குடில: செருமுகத் தெதிர்க்கிற் பிழைப்பனோ சிறுவன்?
ஒருமயக் கதனாற் பொருவதற் கெழுந்தான்.
வெற்றியாம் முற்றினுங் கொள்வே மெனினும்,
ஆலவா யுள்ள படைகளை யழைக்கிற்
சாலவும் நன்றாம்: காலமிங் கிலையே.

ஜீவ: வேண்டிய தில்லை யிண்டவ ருதவி.
தகாதே யந்நி காதர்தஞ் சகாயம்
ஒருநாட் பொருதிடில் வெருவி யோடுவன்.
பின்னழைத் திடுவோம்; அதுவே நன்மை.
புலிவேட் டைக்குப் பொருந்துந் தவிலடி
எலிவேட் டைக்கு மிசையுமோ? இயம்பாய்.

குடில: அன்றியு முடனே யவன்புறப் படலால்
வென்றிகொள் சேனை மிகஇரா தவன்பால்.

ஜீவ: இருக்கினென்? குடிலா! பயமோ இவற்கும்?
**பொருக்கெனச் சென்றுநீ போர்க்குவேண் டியவெலாம்**
ஆயத்த மாக்குதி; யாமிதோ வந்தனம்.
(ஜீவகன்போக வாயிற்காத்த சேவகன் வணங்கிவந்து)

சேவகன்: விழுமிய மதியின் மிக்கோய்! நினைப்போற்
பழுதிலாச் சூழ்ச்சியர் யாவர்? நின்மனம்
நினைந்தவை யனைத்தும் நிகழ்க வொழுங்கே.

குடில: நல்லது! நல்லது! செல்லா யப்பால்.
(சேவகன் போக

(தனதுள்) சொல்லிய தென்னை? சோரன் நமது
நினைவறிந் துளனோ? நிருபர்க் குரைப்பனோ?
இனையவ னெங்ஙன முணருவன்? வினையறி
நாரண னோர்ந்து நவின்றனன் போலும்—
காரண மதற்குங் கண்டிலம். ஆ! ஆ!
மாலைக் காக வாழ்த்தின னிவனும்!
புலமையிற் சான்றோர் புகல்வது பொய்யல.
"கள்ள மனந்தான் துள்ளு" மென்பதுந்
"தன்னுளந் தன்னையே தின்னு" மென்பதுங்
"குற்ற முள்ளோர் கோழைய" ரென்பதுஞ்
சற்றும் பொய்யல; சான்றுநம் மிடத்தே
கண்டனம். அவனெம் அண்டையி லம்மொழி
விளம்பிய காலை விதிர்விதிர்ப் பெய்தி
யுளம்பட படத்தென் னூக்கமும் போனதே.
சிச்சீ! இச்சைசெய் அச்சஞ் சிறிதோ!
வஞ்சனையாற் பெறும் வாழ்வீ தென்னே!
நஞ்சுபோல் தனது நெஞ்சங் கொதிக்கக்
கனவிலும் நனவிலும் நினைவுகள் பலவெழத்
தன்னுளே பன்முறை சாவடைந் தடைந்து
பிறர்பொருள் வெளவும் பேதையிற் பேதை
எறிகடல் உலகில் இலையிலை. நில்! நில்!—
நீதியை நினைத்தோ நின்றேன்? பள! பள!
ஏதிது? என்மன மிங்ஙனந் திரிந்தது!
கொன்றபின் அன்றோ முதலை நின்றழும்?
வா வா காலம் வறிதாக் கினையே.
ஓவா திவையெலா முளறுதற் குரிய
காலம் வரும்வரும். சாலவு மினிதே! 1

(குடிலன் போக)

மூன்றாம் அங்கம்: முதற் களம் முற்றிற்று.

# மூன்றாம் அங்கம்

## உ-ம் களம்

இடம்: ஊர்ப்புறம் ஒருசார். காலம்: எற்பாடு.

நடன்: நடராஜன்.

(நேரிசை ஆசிரியப்பா)

நடராஜன்:
(தனிமொழி)

காலையிற் கடிநகர் கடந்து நமது
வேலை முடிக்குதும். வேண்டின் விரைவா
இன்றிரா முடிக்கினும் முடியும். அன்றாக்
கவ்விய முழுமதிக் காட்சியிற் செவ்விதாம்
பின்னிய கூந்தற் பேதையி னிளமுகம்
என்னுளத் திருந்திங் கியற்றுவ திப்பணி.
அதனா லன்றோ இதுபோல் விரைவில்
இவ்வினை யிவ்வயின் இனிதின் முடிந்தது?
எவ்வினை யோர்க்கும் இம்மையிற் றம்மை
இயக்குதற் கின்பம் பயக்குமோ ரிலக்கு
வேண்டும். உயிர்க்கது தூண்டுகோல் போலாம்
ஈண்டெப் பொருள்தான் இலக்கற் றிருப்பது?
இதோ ஓ! இக்கரை முளைத்தஇச் சிறுபுல்
சதாதன் குறிப்பொடு சாருதல் காண்டி.
அதன்சிறு பூக்குலை யடிபொன் றுயர்த்தி
இதமுறத் தேன்றுளி தாங்கி ஈக்களை
நலமுற அழைத்து நல்லூ ணருத்திப்
பலமுறைத் தனதுபூம் பராகம் பரப்பித்து
ஆசிலாச் சிறுகா யாக்கி, இதோ! என்
தாசிடைச் சிக்குந் தோட்டியுங் கொடுத்தே,
"இவ்வயின் யாமெலாஞ் செவ்விதில் துன்னில்
தழைப்பதற் கிடமிலை. சிறார்நீர் பிழைப்பதற்கு
ஏகுமின். புள்ளூ ரெருதுஅயத் தொருசார்
சிக்கிநீர் சென்மின்!" எனத்தன் சிறுவரைப்
புக்கவிட் டிருக்குமிப் புல்லின் பரிவும்
பொறுமையும் புலனுங்காண் போர், ஒன்றையுஞ்
சிறுமையாச் சிந்தனை செயாதுஆங் காங்கு

தோற்றுபே ரழகும் ஆற்றல்சா லன்பும்
போற்றுதங் குறிப்பிற் கேற்றதோர் முயற்சி
பார்த்துப் பார்த்துத் தம்கண் பனிப்ப,
ஆர்த்தெழு மன்பினா லனைத்தையுங் கலந்துதம்
என்பெலாங் கரைக்குநல் லின்பந் திளைப்பர்.
தமக்கூண் நல்கும் வயற்குப யோகம்,
எனப்பலர் கருது மிச்சிறு வாய்க்கால்
செய்தொழி லெத்தனை விசித்திரம்! ஐயோ!
அலைகடல் மலையா மலையலை கடலாப்
புரட்டிட வன்றோ நடப்பதிச் சிறுகால்!
பாரிதோ! பரற்களை நெறநெறென் றுரைத்துச்
சிரிய தூளியாத் தெள்ளிப் பொடித்துத்
தன்வலிக் கடங்கிய மண்கல் புல்புழு
இன்னதென் றில்லை; யாவையு மீர்த்துத்
தன்னுட் படுத்தி முந்நீர் மடுவுள்
காலத் தச்சன் கட்டிடும் மலைக்குச்
சாலத் தருமிவை யெனவோர்ந் துருட்டிக்
கொண்டு சென்று இட்டுமற் "றையா!
அண்ட யோனியி னாணையின் மழையாய்ச்
சென்றபின் பெருமலைச் சிகர முதலாக்
குன்றுவீ ழருவியாய்த் தூங்கியுங், குகைமுகம்
இழிந்தும், பூமியின் குடர்பல நுழைந்தும்
கதித்தெழு சுனையாய்க் குதித்தெழுந் தோடியும்
ஊறிடுஞ் சிறிய ஊற்றாய்ப் பரந்தும்,
ஆறாய் நடந்தும், மடுவாய்க் கிடந்தும்,
மதகிடைச் சாடியும், வாய்க்கா லோடியும்
பற்பல பாடியான் பட்டங் கீட்டியது
அற்பமே யாயினும் ஆதர வாய்க்கொள்;
இன்னமு மீதோ ஏகுவன்." எனவிடை
பின்னரும் பெற்றுப் பெயர்த்தும் எழிலியாய்
வந்திவ ணடைந்துமற் றிராப்பகல் மறந்து
நிரந்தரம் உழைக்குமிந் நிலைமையர் யாவர்?
(நீரைக் கையாற் றடுத்து)
நிரந்தரம்! ஐயோ! நொந்தனை! நில்! நில்!
இரைந்ததென்? அழுவையோ? ஆயி னேகுதி

நீரே! நீரே! என்னையுன் நிலைமை?
யாரே யுனைப்போ லனுதினம் உழைப்போர்?
நீக்கமி லன்பும் ஊக்கமும் உறுதியும்
உனைப்போ லுளரேல் பினைப்பே றென்னை?—
(நாங்கூழ்ப் புழுவை நோக்கி) ஓகோ! நாங்கூழ்ப் புழுவே! உன்பாடு
ஓவாப் பாடே. உணர்வேன்! உணர்வேன்!
உழைப்போ ருழைப்பில் உழுவோர் தொழில்மிகும்
உழுவோர்க் கெல்லாம் விழுமிய வேந்துநீ.
எம்மண் ணாயினும் நன்மண் ணாக்குவை.
விடுத்தனை யிதற்கா, எடுத்தவுன் யாக்கை.
உழுதுழுது உண்டுமண் மெழுகினும் நேரிய
விழுமிய சேறாய் வேதித் தருட்டி
வெளிக்கொணர்ந் தும்புகழ் வேண்டார் போல
ஒளிக்குவையுன் குழிவாடமோ ருருண்டையால்!
இப்புற் பயிர்நீ யிங்ஙன முழாயேல்
எப்படி யுண்டாம்? எண்ணு துனக்குங்
குறும்புசெய் யெறும்புங் கோடி கோடியாப்
புழுக்களும் பூச்சியும் பிழைக்குமா றென்னை?
ஒழுக்கமும் பொறையும் உனைப்போல்யார்க்குள
(நாங்கூழ்ப்புழு குழிக்குள் மறைதலை நோக்கி) விழுப்புகழ் வேண்டலை. அறிவோம். எனிது?
துதிக்கலம். உன்தொழில் நடத்துதி. ஆ! ஆ!
எங்கு மிங்ஙனே இளைப்பிலா இன்பம்
பங்கமி லன்புந் தங்குதல் திருந்தக்
காணோர் பேணும் வாறென்னே!
அலகிலாத் தோற்றமோ டிலகிய உலகிற்
சிதறிய குணக்கதிர் செறிந்து திரள
வைத்தசிற் றடியின் மையமே யொத்த
உள்ளமும் உடலும் பெற்றுங், கள்வர்—
நினைக்கலை, தியனை நினைப்பதுந் தீதே!
சினக்கனல் எழும்பும். நமக்கேன் இச்சினம்?
கிருபணன். தினன். விடுவிடு. அஃதென்?
என்கொல்அத் தோற்றம்? புகையோ?-மங்குலுக்கு
இந்நிற மில்லை. செந்நிறப் படாமென,
பொதியில்நன் முகடாம் பொற்பறு காவிற்

கதிர்மதி தினமெனும் பொன்வினைக் கம்மியன்
உருக்கி விடுதற் குயர்த்திய ஆடகப்
பெருக்கென விளங்கிய அருக்கன தொளியைப்
பொருக்கெனப் புதைத்தவிப் புழுதி யென்னே
இதோ! தூவண் டங்கிடை யிடைத் தோற்றுவ
பதாகையின் தொகுதி யன்றோ பார்க்கின்?
இடியுருண் டதுபோ லெழுமொலி தேரொலி?
அடிபடை கொண்டிங் கடைந்தவன் யாவன்?
வருதிசை நோக்கில் வஞ்சிய னேயாம்....
பொருதற் கன்றவன் வருவது. சரிசரி!
வதுவைக் கமைந்து வந்தான் போலும்.
இதுவென்? ஓகோ? மணப்பாட் டன்றிது.

(வஞ்சிநாட்டுச் சேனை யணிவகுத்து வழியில் ஒருபுறம் போக படைப்பாணர் பாட)

(வஞ்சித் தாழிசை)

படைப்பாணர்: அஞ்சலி லரிகாள்! நும்
சஞ்சிதப் பெருவாழ்வெம்
வஞ்சியன் சினத்தாற்கண்
துஞ்சிய கனவேகாண் (1)

படைகள் ஜே! ஜே! ஜே!

பாணர்: எஞ்சலில் பகைகாள்! நும்
மஞ்சுள மணிமகுடம்,
வஞ்சியன் சினத்தானீர்
கஞ்சியுண் கடிஞையேகாண். (2)

படை: ஜே! ஜே! ஜே!

பாணர் மிஞ்சிய பகைகாள்! நும்
துஞ்சிய பிதிர்க்கூட்டம்
வஞ்சியன் சினத்தாலென்,
நெஞ்சிலும் நினையார்காண். (3)

படை ஜே! ஜே! புருஷோத்தமர்க்கு ஜே! ஜே!

நட: பார்புதைத் தெழுந்த வீரர்தம் ஆர்ப்பும்,
வார்கழ லொலியும், வயப்படை யொளியும்,
பாடிய பாட்டின் பண்ணும், தலைமிசைச்
சூடிய வஞ்சித் தொடையும், தண்ணுமை

பொருவுசம் புயத்தில் வெண்கலப் பொருப்பில்
உருமுவீழ்ந் தென்னத் தட்டிய ஓதையும்,
இருகனல் கடமிடு பொருசரு முகிலில்
மின்னுதித் தடக்கல்போல் துன்னிய சினநகை
காட்டிய முகக்குறி யாவும் நன்றல.
வெட்டவோ இதுவும்! விளையுமா றெவனோ!
நினைவினும் விரைவாய் நனிசெலுந் துரத்த
கொய்யுளைத் திரைக்கடற் கூட்டமும், பெய்மத
மைம்முகி லீட்டமும், வான்றொடு விலோதனப்
பெருஞ்சிறை விரித்து நெடுந்திசை புதைத்துச்
செல்லும் அசலத் திரளுஞ் செறிந்து,
நெல்லையை வெல்லவே செல்வது திண்ணம்.
அந்தோ! அந்தோ! மனோன்மணி வதுவை
வந்தவா றிதுவோ! வந்தவா றிதுவோ!
(இரண்டுழவர்கள் வர)

முதலுழவன்: வியப்பென்? சுவாமி!

நட: வயப்படை வந்தது
அறிவையோ நீயும்?

முதல் உழ: அறிவேன். போருக்கு
அழைத்திடில் யாவ ரனுகார்?

நட: வழுதி
மணமொழி வழங்க அன்றே விடுத்தான்?

உ-வது உழ: மணமொழி பிணமொழி யானது; குடிலன்
கைதொடின் மஞ்சளுங் கரியா கும்மே!

நட: செய்ததென்?

முதல் உழ: ஐய! அதுநாம் அறியோம்;
குடிலன் படிறன்; கொற்றவன் நாடும்
முடியுங் கவர்ந்து மொய்குழல் மனோன்மணி
தன்னையுந் தன்மகற்கு ஆக்கச் சமைந்தான்;
மன்னனைக் கொல்ல மலையனைத் தனக்குச்
சூதாய்த் துணைவராக் கூவினன்.

நட: சீச்சீ!

ஏதிது? வஞ்சியான் வஞ்சனைக் கிசையான்;
பொய்பொய்; புகன்றதார்?

முதல் உழ: பொய்யல, பொய்யல.
ஐய! நா னறைவது கேட்டி: எனது
மைத்துன னவன்தாய் மரித்த மாசம்
உற்றதா லந்தத் திதியினை யுணரச்
சென்றனன் புரோகித சேஷைய னிடத்தில்.

(உ-வது உழவனை நோக்கி) அன்றுநா ளாதித்த வாரம்; அன்றுதான்
சாத்த னுன்னுடன் சண்டை யிட்டது.

(நடராஜனை நோக்கி) சாத்திரி தரையி லிருக்கிறார்; அவரது
மாமனார் கிட்டவே ஆமைப் பலகையில்—

(நாற்புறமும்நோக்கி, செவியில்) இருந்து பலபல இரகசிய மியம்புவர்—

நட: திருந்தச் செப்பாய்; யாருள ரிவ்வயின்

உ-வது உழ: இந்த மாமனார் மந்திரி மனைவிக்கு
உற்ற ஜோசியர்.

முதல் உழ: பொறு! யா னுரைப்பன்.
மற்றவ் வெல்லையென் மைத்துன னொதுங்கி
யருகே நின்றனன். அப்போ தறைவர்:—
"மருகா! நேற்று மந்திரி மனைவி
பலபல பேச்சுப் பகருங் காலை,
பலதே வன்றன் ஜாதக பலத்தில்
அரச யோக முண்டென் றறைந்தது
விரைவில் வருமோ என்று வினவினள்;
வரும்வரும் விரைவி லென்றேன் யானும்.
மறுமொழி கூறுது இருந்துபின் மனோன்மணி
வதுவைக் காரியம் பேசினள். மற்று அது
நடக்குமோ? என்றவள் கேட்டு நகைத்தாள்.
நடப்ப தரிதென நான்மொழிந் ததற்கு
வருத்தமுற் றவள்போல் தோற்றினும், கருத்திற்
சிரித்தன ளென்பது முகத்தில் தெரிந்தேன்."—
எனப்பல இரகசியம் இயம்பி "வலியோர்

மனக்குறி, முகக்குறி, வறிதாஞ் சொற்கள்
இவைபோல் வருபவை யெவைதாங் காட்டும்?"
எனஉரைத் திருவரு மெழுந்தபின் நகைத்தார்.
பின்னையென் மைத்துனன் பேசிமீண் டுடனே
யெனக்கிங் கிவையெலா மியம்பினன். உனக்குச்
சாக்கி வேண்டுமேற் காக்கைச் சுப்பனும்
உண்டு:மற் றவனைக் கண்டுநீ வினவே.

உ-வது உழ: வேண்டாம்! வேண்டாம் ஐயமற் றதற்கு.
மீண்டு மொருமொழி கேள்: இவ் வழியாய்த்
தூதுவர் போகுங் காலைத் தாக
ஏதுவால், இரும்படி யிராம னென்றன்
தங்கை மனைக்கு வந்தவத் தருணம்
அங்கியா னிருந்தேன். "அரண்மனைச் செய்தி
என்ன?" என் றேற்கவ னியம்பும்: "மன்னன்
தெத்தெடுத் திடும்படி யத்தன முண்" டென,
"எப்போது யாரை?" என்றேற்கு ஒன்றுஞ்
செப்பா தெழுந்து சிரித்தவ னகன்றான்.

முதல் உழ: பலதே வற்கிவன் நலமிகு சேவகன்.

உ-வது உழ: குடிலனுள் வகைவிடக் குடகனுள் வதுநலம்.

முதல் உழ: ஆயினும், நமக்கஃ திழிவே; மேலுந்
தாயினுஞ் சிறந்த தயாநிதி மனோன்மணிக்
குறுதுய ரொருவரும் ஆற்றார்.

உ-வது உழ: அறிவிலாத்
தந்தையர் தம்வினை மக்களைச் சாரும்;
சுந்தர வாணியின் சிந்தைநோய் வழுதியை
விடுமோ? சொல்லாய்.

முதல் உழ: விதியெனப் பலவும்
படியோர் பாவனை பண்ணித் தமது
கடமையின் விலகுதல் மடமை: அதனால்
நாட்டிற் போர்வரின் நன்குபா ராட்டி
எஞ்சா வெஞ்சம ரியற்றலே தகுதி.

உ-வது உழ: அரசன், அரசனேற் சரியே; சுவாமி!

உரையீர் நீரே; திருவார் வாணியை
யறியீர் போலும்.

நட: அறிவோம், அறிவோம்!
நல்ல தப்புறஞ் செல்லுமின் நீவிர்.—
(உழவர் போக)

(தனதுள்) ஏழைகள்! தங்க ளாழமில் கருத்தில்
தோற்றுவ தனைத்துஞ் சாற்றுவர். அவர்தந்
தேற்றமில் மாற்றம், சிறுமியர் மழலைபோல்,
சுகந்தரு மொழிபோல், சுகந்தரும். சூழ்ச்சியும்
அனுமா னிக்கும் அளவையும் முனும்பினுங்
கூட்டிக் காரண காரியக் கொள்கைகள்
காட்டலும், காணாக் களிப்பே! ஆயினும்
பழுதில பகர்ந்தவை முழுதும். முன்னோர்
ஜனமொழி தெய்வ மொழியெனச் செப்புவர்.
அரசியல் இரகசியம் அங்காடி யம்பலம்
வரும்வித மிதுவே! மட்குடத் துளநீர்
புரைவழி கசிந்து புறம்வருந் தன்மைபோல்,
அரச ரமைச்ச ராதியர் தங்கள்
சிந்தையிற் புதைத்த அந்தரங் கப்பொருள்
விழிமுகம் நகைமொழி தொழில்நடை யிவைவழி
ஒழுகிடும். அவைகளை யுழையுளார் தமக்குத்
தோற்றிய பலவொடுந் தொடுத்துக் காற்றில்
தூற்றுவர். எனினுஞ் சொன்னவை முற்றுங்
குடிலன் குணமுடன் கூடலா லவையும்,
படையிவன் வரநாம் பார்த்ததும்,
அடையவும் முனிவற் கறைகுவஞ் சென்றே.
(நடராஜன் போக)

மூன்றாம் அங்கம்: இரண்டாவது களம்
முற்றிற்று.

# மூன்றாம் அங்கம்

## க-ம் களம்

இடம்: கன்னிமாடம், நிலாமுற்றம். காலம்: யாமம்.
மனோன்மணி உலாவ; வாணி நிற்க;
செவிலி படுத்துறங்க.

(நேரிசை ஆசிரியப்பா)

செவிலி: ஏதம்மா! நள்ளிரா எழுந்து லாவினை?
(படுத்தபடியே) தூக்கம் ஒழிவையேல் சூடுமே யுடலம்

மனோன்மணி: உடலா லென்பயன்? சுடவே தகுமது.
வேர்க்கிற திவ்விடம்: வெளியே யிருப்பல்.
போர்த்துநீ தூங்கு!

(செவிலி தூங்க)

வாணி! உனக்கும்
உறக்க மில்லையா?

வாணி: எனக்கது பழக்கம்.

மனோ: வருதி யிப்புறம். இரு இரு—

(இருவரும் நிலாமுற்றத்திருக்க)

இதுவரை
எங்கிருந் தனவிவ் அன்றிற் பேய்கள்!
நஞ்சோ நாவிடை? நெஞ்சந் துளைக்கும்!
உறக்கங் கொண்டனள் செவிலி! குறட்டைகேள்
கையறு நித்திரை! வாணி! மற்றிது
வைகறை யன்றோ?

வாணி: நடுநிசி அம்மா!

மனோ: இத்தனை யரவமேன்? முனிவ ரறையில்
நித்தமு முண்டிது! நிதியெடுப் பவர்போல்
தோண்டலு மண்ணினைக் கிண்டலுங் கேட்டனன்
ஊரிலேன் இன்றிவ் உற்சவ அரவம்?

வாணி: (தனதுள்) போமெனிற் பொறுப்பளோ? உரைப்பனோ? ஒளிப்பனோ?

மனோ: கண்டதோ நகருங் காணுங் கனவு?

வாணி: கண்டது கனவோ தாயே?

மனோ: கண்டது,—
கனவெனிற் கனவு மன்று: மற்று
நனவெனில் நனவு மன்று.

வாணி: நன்றே!
கண்ணாற் கண்டிலை போலும்! அம்ம!

மனோ: கண்ணா லெங்ஙனங் காணுவன்? கண்ணுளார்?

வாணி: எண்ணம் மாத்திரமோ? இதுவென் புதுமை!

மனோ: எண்ணவும் படாஅர்! எண்ணுளும் உளாஅர்!

வாணி: புதுமை! ஆயினும் எதுபோ லவ்வுரு?

மனோ: இதுவென வொண்ணா உவமையி லொருவரை
எத்திற மென்றியான் இயம்ப! நீயுஞ்
சித்திர ரேகை யலையே. விடுவிடு!
பண்ணியல் வாணீ! வாவா! உன்றன்
பாட்டது கேட்டுப் பலநா ளாயின!

வாணி: என்பா டிருக்க! யாவரு மறிவார்!
உன்பா டதுவே யொருவரு மறியார்.

மனோ: பாக்கிய சாலிநீ! பழகியும் உளையே!
நீக்குக இத்தி நினைவு! யாழுடன்
தேக்கிய இசையிற் செப்பொரு சரிதம்
(வாணி வீணை மீட்ட)
அவ்விசை யேசரி ஒவ்வுமித் தருணம்!
(வாணி பாட)

---

## சிவகாமி சரிதம்

(குறள்வெண்செந்துறை)

“வாழியநின் மலரடிகள்! மௌனதவ முனிவ!
மனமிரங்கி யருள்புரிந்தோர் வார்த்தையெனக் கீயில்
பாழடவி யிதிற்சுழன்று பாதைவிடுத் தலையும்
பாவியொரு வினையழித்த பலனுறுவை பெரிதே. (1)

சாரும்வரை குறியாது தன்னிழலை யளக்குந்
தன்மையென நான்நடக்கத் தான்வளரும் அடவி,
ஆரிருளி னினிநடக்க ஆவதில்லை. உடலம்
மாறும்வகை விடுளதே லடையுநெறி யருளாய்." (2)

என்றமொழி கேட்டமுனி யெதிர்விடையங் கியம்பும்:—
"ஏகாந்தப் பெருங்ககனம்; இதிலுலக நிலையார்;
சென்றுறைய மடமுமில்லை; திகழ்வெளியென் வீடு:
சிந்தையற நொந்தவர்க்குச் சேரவில்லை பந்தம். (3)

அறங்கிடந்த சிந்தையரா யாசையெலாந் துறந்த
அதிவீர ரொழியஎவ ராயினுமிங் கடையார்.
உறங்கஅவர் பணிப்பாயும் பூவணையும் உன்னார்
உண்ணவெனில் பாலமிழ்து மொன்றாக மதியார். (4)

ஆதலிலென் பாலுறவ தியாதெனினு மைந்த!
அன்புடனீ யென்பிறகே யணையிலஃ தானதாம்.
வேதனையும் மெய்ச்சலிப்பும் விட்டகல இருளும்
விடியும். உடன் மனமிருக்கில் வேண்டுமிடம் ஏகாய்."

என்றுரைத்த இனியமொழி யிருசெவியுங் குளிர,
ஏதோதன் பழநினைவும் எழவிருகண் பனித்து
நன்றெனவே தவவடிவாய் நின்றமகன் வணங்கா
நன்முனிவன் செல்வழியே நடந்துநனி தொடர்ந்தான்.

இந்திரநற் சாலவித்தை யெதுவோவான் றிழைக்க
இட்டதிரை யெனத்திசைக ளெட்டுமிருள் விரிய
அந்தரத்தே கண்சிமிட்டிச் சுந்தரதா ரகைகள்
அரியரக சியந்தமக்குள் ளறைந்துநகை புரிய; (7)

என்புருகப் பிணைந்த அன்றில் இணைசிறிது பிரிய
ஏங்கியுயிர் விடுப்பவர்போ லிடையிடையே கூவ,
அன்புநிலை யாரறிவ ரென்பனபோல் மரங்கள்
அலர்மலர்க்கண் நீரருவி அகமுடைந்து தூவ: (8)

விந்தைநடப் பதுதெரிக்க விளிப்பவரில் வாவல்
விரைந்தலைய மின்மினியும் விளக்கொடுபின் ஆட:
இந்தவகை அந்தியைமுன் ஏவிஇர வென்னும்
இறைவியும்வந் திறுத்தனள்மற் றிளைஞருயிர் வாட (9)

பொறியரவின் சுடிகையுறு பொலன்மணியி னொளியும்,
பொலிமதத்தின் கறையடியின் புலமருப்பி னொளியும்
அறிவரிய சினஉழுவை அழல்விழியி னொளியும்,
அலதில்லையவ் அடவியிடை யயல்காட்டு மொளியே. (10)

பிரிவரிய ஊசிவழி பின்தொடரும் நூல்போல்
பேரயர்வின் மனமிறந்து பின்தொடரும் மைந்தன்,
அரியபுத ரிடையகற்றி அன்பொடழைத் தேகும்
அம்முனிவ னடியன்றி அயலொன்றும் அறியான். (11)

ஒருங்கார நிறைமுளரி யுழையொதுக்கி நுழைந்தும்,
உயர்மலையின் குகைகுதித்தும் ஓங்கார ஒலியே
தருங்கான நதிபலவுந் தாண்டிஅவ ரடைந்தார்
சார்பிலர்க்குத் தனித்துணையாந் தவமுனிவ னிடமே. ()

நேயமுட னெவ்வழியும் நேர்ந்தவரைத் தன்னுண்
நிறுவுதலை வளைத்தழைக்கு நெருப்பொன்றும் அன்றி
வாயிலெனப் பூட்டென்ன மதிலென்ன வழங்கும்
மனையென்னும் பெயர்க்குரிய மரபொன்று மின்றி. (13)

நின்றதனி யிடமிவர்கள் நேர்ந்தவுடன் முனிவன்
நெருப்பின்னும் எழுப்புதற்கு நிமலவிற கடுக்கி
ஒன்றியமெய்ப் பத்தரில்தன் உளங்கூசி யொருசார்
ஒதுங்குகின்ற மைந்தனகம் உவப்பஇவை உரைக்கும்:—

“இனிநடக்க வழியுமில்லை; இனித்துயரு மில்லை.
இதுவேநம் மிடம்மைந்த! இக்கனலி னருகே
பனிபொழியும் வழிநடந்த பனிப்பகல இருந்து
பலமூல மிதுபுசிக்கிற் பறக்குமுன திளைப்பே. (15)

தந்நாவி லொருவிரலைத் தாண்டவறி யாமல்
சாகரமும் மலைபலவுந் தாண்டியலை கின்றார்.
என்னேயிம் மனிதர்மதி!” எனநகைத்து முனிவன்
இனியகந்த முதலனந்த இனம்வகுத்தங் கிருந்தான். (16)

இருந்தமுனி “வருந்தினவ! ஏதுனது கூச்சம்?
இருவருமே யொருவரெனி லெவர்பெரியர் சிறியர்?
திருந்தஅன லருகிலினிச் செறிந்துறைதி மைந்த!
சேர்ந்தார்க்குக் களிப்புதவுஞ் சேரார்க்குப் பனிப்பே.”

எனஇரங்கி யிரண்டுமுறை இயம்பியுந்தன் னருகே
யேகாம லெதிரொன்று மிசையாமல் தனியே
மனமிறந்து புறமொதுங்கி மறைந்துவதி திருந்த
மகன்மலைவு தெளிந்துவெளி வரும்வகைகள் பகர்ந்தான்.

பகர்ந்தநய மொழிசிறிதும் புகுந்ததிலை செவியில்:
பாதிமுக மதியொருகைப் பதுமமலர் மறைப்பத்
திகழ்ந்தசுவ ரோவியம்போ லிருந்தவனை நோக்கி
சிந்தைநனி நொந்துமுனி சிறிதுகரு திடுவான். (19)

செந்தழலு மந்தவெல்லை திகழ்ந்தடங்கி யோங்கி
திகைக்களவி பிடித்தலைக்குஞ் சிறுவனை யெனவே
விந்தையொடு நடம்புரிந்து விங்கிருளை வாங்கி
மீண்டுவர விடுத்தெடுத்து விழுங்கிவிளங் கினதே. (20)

மொழியாதும் புகலாது விழிமாரி பொழிய
முகங்கவிழ வதிந்தகுறி முனிநோக்கி வினவும்:—
"எழிலாரு மிளமையினில் இடையூறு திகளால்
இல்லமகன் றிவ்வுருவ மெடுத்திவண்வந் தனையோ? (21)

ஏதுனது கவலை? உளத் திருப்பமெனக் கோதாய்
இழந்தனையோ அரும்பொருளை? இழந்தனரோ நண்பர்
காதல்கொள நீவிழைந்த மாதுபெருஞ் சூதாய்க்
கைவிடுத்துக் கழன்றனளோ? மெய்விடுத்துக் கழறாய்.

ஐயோஇவ் வையகத்தி லமைந்தசுக மனைத்தும்
அழலாவிங் கெழுந்தடங்கு நிழலாக நினையாய்.
கையாரும் பொருளென்னக் கருதிமணல் வகையைக்
காப்பதெலா மிலவுகிளி காத்தலினும் வற்றே. (23)

நண்பருற வினர்கள்நமை நாடியுற வாடல்
நறுநெயுறு குடத்தெறும்பு நண்ணலென எண்ணாய்!
பெண்களகக் காதலெலாம் பேசுமுயற் கொம்பே!
பெருங்கபட மிடுகலனே பிறக்குமவ ருடலம்!" (24)

எரியுமுளம் நொந்தடிக ளிசைத்தவசை யுட்கொண்டு
ஏதிலனீள் கனவுவிழித் தெழுந்தவன்போல் விழித்து
கிரிவெயிலில் விளக்கொளியும் மின்னொளியிற் கண்ணும்
வெள்ளிப்பட்ட கள்வனும்போல் வெட்கிமுகம் வெளுத்தான்.

இசைத்தவசைச் செயலுணர எண்ணிமுகம் நோக்கி
யிருந்தயதி யிக்குறிகண் டிறும்பூதுள் ளெய்தி
விசைத்தியங்கு மெரியெழுப்பி மீண்டுமவன் நோக்க
வேஷரக சியங்களெலாம் வெட்டவெளி யான. (26)

நின்மலவி பூதியுள்ளே பொன்மயமெய் தோன்றி
நீறுபடி நெருப்பெனவே நிலவியொளி விரிக்கும்.
உண்மைதிகழ் குருவிழிக்கு ளூட்கூசி யொடுங்கும்
உண்மைபெறு கண்ணிணையும் பெண்மையுருத் தெரிக்கும். (27)

கூசுமுக நாணமொடு கோணியெழில் வீச
குழற்பாரஞ் சரிந்துசடைக் கோலமஃ தொழிக்கும்.
வீசுலையின் மூக்கெனவே விம்மியவெய் துயிர்ப்பு
வீங்கவெழு கொங்கைபுனை வேடமுழு தழிக்கும். (28)

இவ்விதந்தன் மெய்விளங்க இருந்தமக ளெழுந்தே
யிருடிபதந் தலைவணங்கி யிம்மொழியங் கியம்பும் :—
“தெய்வமொடு நீவசிக்குந் திருக்கோயில் புகுந்த
தீவினையேன் செய்தபிழை செமித்தருள்வை முனியே !

மண்ணுலகிற் காவிரிப்பூ மாநகரிற் செல்வ
வணிககுல திலகமென வாழ்வளொரு மங்கை.
எண்ணரிய குணமுடையள். இவள்வயிற்றி லுதித்தோர்
இருமகளி ரொருபுருட ரென்னஅவர் மூவர். (30)

ஒப்பரிய இப்புருடர்க் கோர்புதல்வ ருதித்தார்.
ஒருத்திமகள் யான்பாவி ; ஒருத்திமுழு மலடி.
செப்பரிய அம்மலடி செல்வமிக வுடையள் ;
செகமனைத்து மவள்படைத்த செல்வமென மொழிவர்.

உடல்பிரியா நிழல்போல ஒதியஅப் புதல்வர்
உடன்கூடி விளையாடி யொன்றாக வளர்ந்தேன்.
அடல்பெரியர் அருளுருவர் அலகில்வடி வுடையர்.
அவருடைய திருநாமம் அறைவேனோ அடிகாள்?” (32)

உரைத்தமொழி கேட்டிருடி யுடல்புளக மூடி
யூறிவிழி நீர்வதன மொழுகவஃ தொளிக்க
எரிக்கவிற கெடுப்பவன்போ லெழுந்துநடந் திருந்தான்.
இளம்பிடியுந் தன்கதையை யெடுத்தனள்முன் தொடுத்தே. (33)

" மலடிசிறு தாய்படைத்த மதிப்பரிய செல்வம்
மடமகளென் றெனக்களித்தாள். மயங்கியதின் மகிழ்ந்து
தலைதடுமா றுச்சிறிய தமியளது நிலையுந்
தலைவனெனுந் தன்மையையுந் தகைமையையு மறந்தேன்.

குறிப்பாயுள் ளுணர்த்தியும்யான் கொள்ளாது விடுத்தேன்.
குறும்புமதி யாலெனது குடிமுழுதுங் கெடுத்தேன்.
வெறுப்பாக நினைந்தென்மேல் வேதனைப்பட் டவரும்
வெறும்படிறென் னுள்ளமென விட்டிலகி னாரே. (35)

பொருள்விரும்பிக் குலம்விரும்பிப் பொலம்விரும்பி வந்தோர்
பொய்க்காதல் பேசினரோ புகலிலள வில்லை.
அருளரும்பி யெனைவிரும்பி யாருமென ததிபர்
அவரொழிய வேறிலையென் றறிந்துமயர்ந் திருந்தேன்.

ஒருவார மொருமாத மொருவருட காலம்
ஓயாம லுன்னியழிந் தேன். உருவங் காணேன்.
திருவாருஞ் சேடியர்க்குச் செப்பஅவர் சேருந்
திசைதேய மெவரறிந்து தெரிப்பரெனச் சிரித்தார். (37)

ஆயத்தார் கூடியெனை யாயவுந்தா னொட்டார்.
அகல்வேலை யோஎறியும் அகோராத்திரங் கெடுத்து;
தீயைத்தா னேயுமிழுஞ் சிறந்தகலை மதியும்;
திரிந்துலவுங் காலுமுயிர் தின்னுகம னென்ன. (38)

கண்டவரைக் கேட்டவரைக் காசினியில் தேடிக்
கண்டிடச்சென் றேயலைந்த கட்டமெனைத் தென்க?
உண்டெனத்தம் யூகநெறி யுரைப்பவரே யல்லால்
உள்ளபடி கண்டறிந்தோ ரொருவரையுங் காணேன்.

உண்டெனிலோ கண்டிடுவன்; இல்லையெனில் ஒல்லை,
உயிர்விடுத லேநலமென் றுன்னியுளந் தேறி
கண்டுயிலு மில்லிடந்தி கதுவவெளி யோடிக்
கணக்காஇவ் வேடமொடு கரந்துபுறப் பட்டேன். (40)

தீர்த்தகுலம் மூர்த்திதலம் பார்த்துடலஞ் சலித்தேன்.
திருக்கறுபற் குருக்கள்மடந் திரிந்துமன மலுத்தேன்.
வார்த்தைகத்தும் வாதியர்தம் மன்றனைத்தும் வறிய.
மற்றுத்துறங்கும் யோகியர்போய் வாழ்குகையும் பாழே.

மான்மறவாக் கலையினமே! வாழ்பிடிவிட் டகலா
 மதம்பெருகு மாகுலமே! வன்பிகமே! சுகமே!
நான்மறவா நாதனையெஞ் ஞான்றுமறி விரோ?
 நவில்விரெனப் பின்தொடர்ந்து நாளனந்தங் கழித்தேன்.

இவ்விடமு மவ்விடமு மெவ்விடமு மோடி
 இதுவரையுந் தேடியுமென் னதிபரைக்கண் டிலனே.
எவ்விடம்யான் நண்ணவினி? எவ்விடம்யான் உண்ண?
 இக்காய மினியெனக்கு மிக்கஅரு வருப்பே. (43)

ஐயோவென் னுள்ளநிலை யறியாரோ இனியும்?
 ஆசைகொண்டு நானலைந்த தத்தனையும் பொய்யோ?
பொய்யேதா னாயிடினும் புனிதரவர் தந்த
 போதமலால் வேறெனக்கும் ஓதுமறி வுளதே? (44)

நல்லர்அரு ளுடையரென நம்பி யிதுவரையும்
 நானுழைப்ப தறிவரெனி லேனெதிர்வந் திலரோ?
இல்லையெனி லென்னளவு மிவ்வுலக மனைத்தும்
 எந்நலமுங் கொல்லவென எடுத்தசுடு காடே. (45)

என்னுடைய உயிர்த்துணைவ ரெண்ணரிய அருளில்
 ஏதோசிற் சாயையுன திடத்திருத்தல் கண்டு
மன்னுதவ மாமுனிவ! மனத்துயரம் உன்பால்
 வகுத்தாறி னேன்சிறிது. மறுசாட்சி யில்லை (46)

இனியிருந்து பெறும்பயனென்? இவ்வழலே கதி'' யென்று
 எரியுமழ லெதிரேகின் றிசைத்தமொழி முழுதும்
முனிசெவியிற் புகுமுனமே மூதுருவம் விளக்கி
 முகமலர்ந்தங் கவளெதிரே முந்திமொழி குளறி— (47)

"சிவகாமி யானுனது சிதம்பரனே" என்னச்
 செப்புமுன மிருவருமற் றோருருவ மானார்!
எவர்தாமுன் னணைந்தனரென் றிதுகாறு மறியோம்.
 இருவருமொன் றாயினரென் றேயறையுஞ் சுருதி. (48)

பரிந்துவந்து பார்வதியும் பாரதியுங் கஞ்சப்
 பார்க்கவியும் யார்க்கிதுபோல் வாய்க்குமென வாழ்த்த,
அருந்ததியும் அம்ம! இஃது அருங்கதியென் றஞ்ச
 ஆர்வமுல கார்கவென ஆரணங்க ளார்த்த. (49)

ஆழிபுடை சூழுலகம் யாவுநல மேவ!
அறத்துறை புகுந்துயிர்க ளன்புவெள மூழ்க!
பாழில்லை வேறுடைய பந்தனைகள் சிந்த
பரிந்தருள் சாந்தமை நிரந்தரமும் வாழ்க! (50)

---

மனோ: வாணி! மங்காய்! பாடிய பாட்டின்,
வீணையி னிசையும் விளங்குநின் குரலுந்
தேனினும் இனியவாய்ச் சேர்ந்தொரு வழிபடர்ந்து
ஊனையு முயிரையு முருக்கும். ஆ! ஆ!—
(இருவரும் சற்று மௌனமாயிருக்க)
உனதுகா தலனெங் குளனோ? உணர்வைகொல்?

வாணி: எனது சிந்தையி லிருந்தனர்; மாறார்.

மனோ: ஆயினும் வெளியில்?

வாணி: அறியேன். அம்ம!

மனோ: போயின இடம்நீ யறியாய்?

வாணி: நாரணன்
முனிவர் தம்மடத் தேகினர் தனியென
ஓதின னோர்கால்

மனோ: ஓகோ! ஓகோ:—
(மௌனம்)
கடைநாள் நிகழ்ந்ததை யென்னோ? கழறாய்.

வாணி: அடியனேற் கந்நாள் கெடுநாள் மிகவும்!
ஒருநா ளந்தியி லிருவரு மெதிர்ச்சையாக்
கடிபுரி கடந்துபோய், நெடுவயற் பாயும்
ஒருசிறு வாய்க்காற் கரைகண் டாங்கே,
பெருமலை பிறந்து சிறுகாற் செல்வன்
தெண்ணீர்க் கன்னி பண்ணிய நிலாநிழற்
சிற்றில் பன்முறை சிதைப்பவன் போன்று
சிற்றலை யெழுப்பச் சிறுமி முறுமுறுத்து
அழுவது போல விழுமிய பரல்மேல்
ஒழுகும் தீம்புன லோதையுங் கேட்டுப்
பழுதிலாப் பால்நிலா விழுவது நோக்கி

இருவரும் மௌனமாய் நெடும்பொழு திருந்தோம்.
கரையிடை அலர்ந்த காவியொன் றடர்த்தென்
அருகே கொணர்ந்தெனக் கன்பா யீந்தனர்.
வருவதிங் கறியா மதியிலி யதனைக்
கண்ணிணை யொற்றிலன்; உள்மணம் முகந்திலன்;
மார்பொடு சேர்த்திலன்; வார்குழற் சார்த்திலன்;
ஆர்வமும் அன்பும் அறியார் மான
ஓடுந் தீம்புனல் மாடே விடுத்துச்
சிறுமியர் குறும்பு காட்டிச் சிரித்தேன்.
முறுவலோ டவரும் ஏதோ மொழிய
உன்னு முன்னரென் னன்னையங் கடைந்தாள்;
தீமொழி பலவுஞ் செப்பினள். யானோ?
நாவெழ லின்றி நின்றேன். நண்பர்
மறுமொழி யொன்றும் வழங்கா தேகினர்.
அதுமுத லிதுகாறும் அவர்தமை ஐயோ!
கண்டிலேன். இனிமேற் காண்பனோ? அறியேன்.
ஒருமுறை கண்டென் னுளக்கருத் தவருடன்
உரைத்தபோ தன்றி ஒழியா துயிரே!

மனோ: உரைப்பதென் வாணீ! உளமும் உளமும்
நேர்பட அறியா என்றோ நினைத்தாய்?

வாணி: ஓர்வழிப் படரின் உணருமென் றுரைப்பர்.

மனோ: ஏனதி லையம்? எனக்கது துணிபே?
பூதப் பொருட்கே புலன்துணை யன்றிப்
போதப் பொருட்குப் போதும் போதம்.
இரவியை நோக்கற் கேன்விளக் குதவி?
கருவிநுண் மையைப்போற் காட்சியும் விளங்கும்.
பட்டே யுணரு முட்டா ளர்கள்போல்
தொட்டே யுணருந் துவக்கிந் திரியம்.
நுண்ணிய கருவியாங் கண்ணோ உணரும்
எண்ணறச் சேய்த்தாம் நுண்ணிய ஒளியை!
கண்ணினு மெத்தனை நுண்ணிய துள்ளம்!
களங்க மறுந்தொறும் விளங்குமங் கெதுவும்.
உண்மையாய் நமதுள முருகிலவ் வுருக்கம்

அண்மை சேய்மை யென்றிலை: சென்றிடும்.
எத்தனை பெட்டியுள் வைத்துநாம் பூட்டினும்
வானுள மின்னொளி 'வடக்கு நோக்கி'யைத்
தானசைத் தாட்டுந் தன்மைக் கண்டிலை!
போதங் கரைந்துமேற் பொங்கிடு மன்பை
பூத யாக்கையோ தடுத்திடும்? புகலாய்!

வாணி　கூடுங் கூடும்! கூடுமக் கொள்கை:
நம்பலாந் தகைத்தே!

மனோ　　　　நம்புவ தன்றிமற் று
என்செய நினைத்தாய்? இவ்வரும் பொருள்கள்
தருக்கவா தத்தால் தாபித் திடுவோர்
கரத்தாற் பூமணங் காண்பவ ரேயாம்!
அரும்பிற் பூமண மாய்குத லேய்ப்பத்
தரும்பக் குவமிலார் தமதுளம் போய
வழியே வாளா மனக்கணக் கிட்டு
மொழிவார் முற்றுந் துணிவா யெனயான்
இச்சிறு தினத்தி னிவைபந் தவை தம்மால்
நிச்சயித் துணர்ந்தேன் வாணீ! ஐயோ!
நம்பலென் பதுவே யன்பின் நிலைமை!
தெளிந்தவை கொண்டு தெளிதற் கரியவை
யுளந்தனில் நம்பி உறுதியாய்ப் பிடித்துச்
சிறிது சிறிதுதன் னறிவினை வளர்த்தே
அனுபவ வழியா யறிவதை யந்தோ!
அனுமா னதியால் ஆய்ந்தறிந் திடுவோம்
அல்லெனி லில்லென அயிர்ப்போமெனத்திரி
வாதிய ரன்பொரு போதுமே யறியார்.
தாய்முலைப் பாலுள்நஞ்சு ஆய்பவ ரவரே!
முற்றுங் களங்க மற்றிடில் ஆ! ஆ!
(உடல் புளகாங்கிதமாய் நடுங்க)
ஏதோ வாணீ! இப்படி என்னுடல்?—

வாணி:　சீதமோ? தாயே!

மனோ:　　　　சீ! சீ! இன்றெலாம்
இப்படி யடிக்கடி யென்னுடல் நடுங்கும்!

வாணி :
இக்குளிர் காற்றி னிடையே இருத்தல்
தக்க தன்றினி. தாயே ! பாராய் !
அம்மழை பெய்யும் இம்மெனும் முன்னம்.

மனோ :
நனைந்திடி லென்னை ? கரைந்திடு மோவுடல் ?
(எழுந்து மேகம் பார்க்க)

வாணி : (தனதுள்) ஐயோ ! என்நான் அத்திசை காட்டினேன் ?
பொய்யெப் படியான் புகல்வன் !

மனோ :
வாணீ !
ஊர்ப்புற மத்தனை யொளியேன் ? ஓ ! ஓ !
ஆர்ப்பேன்? ஆ ! ஆ! அயிர்ப்பேன்? அறைகுதி
போர்க்குறி போலும், புகலுதி யுண்மை.
(மழை இரைந்து பெய்ய)
அஞ்சலை அஞ்சலை. இதோஎன் நெஞ்சிடை
வெஞ்சரம் பாயினும் அஞ்சிலேன் ! விளம்பு.

வாணி :
இம்மழை நிற்கலை அம்ம ! அறைகுவன்.—
விளம்புவன் வீட்டுள் வருக !
தெளிந்ததோர் சிந்தைத் தீரநற் றிருவே !
(இருவரும் போக)

மூன்றும் அங்கம்: மூன்றாவது களம்
முற்றிற்று.

---

# மூன்றாம் அங்கம்

## முதற் களம்

இடம்: சுந்தரமுனிவர் ஆசிரமம். காலம்: வைகறை.
நிஷ்டாபரர் கருணாகரர் இருவரும் அளவளாவி இருக்க.
(நேரிசை ஆசிரியப்பா)

நிஷ்டாபரர்: ஏதிது! நமக்குமோ இத்தனை பயக்கம்!
வேதவே தாந்தம் ஓதிநீர் தெரிந்தும்
இரவெலா மிப்படி யிமையிமை யாதே
பரிதபித் திருந்தீர்! கருணா கரரே!
பாரினிற் புதிதோ போரெனப் படுவது!
போரிலை யாயினென்? யாருறார் மரணம்?
எத்தின முலகி லெமன்வா யற்றினம்?
இத்தின மிறந்தோ ரெத்தனை யென்பீர்?
ஒவ்வொரு தினமும் இவ்வண மொன்றில்,
எறும்பு முதலா எண்ணிலா உயிர்கள்
உறுந்துயர் கணக்கிட் டுரைப்போர் யாவர்?
சற்றிதோ மனங்கொடுத் தாற்றுநீர் பாரும்.
குரூரக் கூற்றின் விரூபமிச் சிலந்தி!
பல்குழி நிறைந்த பசையறு தன்முகத்து
அல்குடி யிருக்க, அருளிலாக் குண்டுகண்
தீயெழத் திரித்துப் பேழ்வாய் திறந்து
கருக்கொளுஞ் சினைசெருக் கொளக் கௌவி
விரித்தெண் டிசையினும் நிறுத்திய காற்களின்
முன்னிரு கையில் வெந்துறக் கிடத்தி,
மார்பொடு வயிறுஞ் சோர்வுறக் கடித்துப்
பறித்திழுத் திசித்துக் கறிக்குமற் றவ்வ
நொந்துநொந் தந்தோ! சிந்தனை மயங்கி
எய்யா தையோ! என்றழு தரலிக்கு
யார்கேட் கின்றார்? யார்காக் கின்றார்?
கைகால் மிகில்நம் மெய்வே றாமோ?
நோவுஞ் சாவு மொன்றே. அன்றியும்
உலகெலாம் நோக்கில்நம் உடலொரு பொருளோ!

பஞ்சா சத்கோடி யெனப்பலர் போற்ற
எஞ்சா திருந்த இப்புவி யனைத்தும்
இரவியின் மண்டலத் தொருசிறு திவலை.
பரவிய வானிடை விரவிய மீனினம்
இரவியி லெத்தனை பெரியதுஒவ் வொன்றும்!
இரவியு மிம்மீ னினங்களுங் கூடில்
ஒருபிர மாண்டமென் றுரைப்பர். இதுபோல்
ஆயிரத் தெட்டுமற் றுண்டென அறைவர்.
ஆயிரத் தெட்டெனல் அலகிலை யென்பதே.
இப்பெரு முலகெலா மொப்பறு திருமால்
உந்தியந் தடாகத் துதித்தபன் முளரியில்
வந்ததோர் நறுமலர் தந்தபல் லிதழில்
ஓரித ழதனி லோர்சா ருதித்த
நான்முகச் சிலந்தி நாற்றிய சிறுவலை.
என்மிக! நாமிங் கோதிய மாலும்
ஒருபெருங் கடலி னுறுதுரும் பென்ப.
அப்பெருங் கடலும் மெய்ப்பொருட் கெதிரில்
எப்படிப் பார்க்கினும் மிசையாப் பேய்த்தேர்.
இங்கிவை யுண்மையேல், எங்குநா முள்ளோம்?
நீர் யார்? நான் யார்! ஊரெது? பேரெது!
பேரெனப் பொறுக்கலீர்! ஓ! ஓ! பாரும்!
மருவறு மாயா மகோததி யதனிற்
புற்புத மனைய பற்பல அண்டம்
வெடித்தடங் கிடுமிங் கடிக்கடி. அதனைத்
தடுப்பவர் யாவர்? தாங்குநர் யாவர்?
விடுத்திடும், விடுத்திடும். வீணிவ் விசனம்.
இந்திர ஜாலமிவ் எந்திர விசேடம்.
தன்றொழில் சலிப்பற இயற்றும். மற் றதனுள்
படுபவர் திரிகையுட் படுசிறு பயறே.
விடுபவர் யாவர்பின்! விம்மி விம்மிநீர்
அழுதீர், தொழுதீர், ஆடினீர், பாடினீர்,
யாரென் செய்வர்! யாரென் செயலாம்!
அடுத்திடி னும்மையும் பிடிக்குமிம் மாயை.
பிடித்திடிற் பின்றும் படிப்பும் ஞான்முங்

குருட்டா சனுக்குக் கொளுத்திய விளக்கும்
இருட்டறை யிருந்துகண் சிமிட்டலு மென்ன
ஆர்க்குமிங் குமக்கும் பிறர்க்குமென் பயக்கும்?
பார்க்கப் பார்க்கவிப் படியே துயரம்
மீக்கொளும். அதனால் விடுமுல கென்னல்.
சுட்டதோர் சட்டியை விட்டிட லென்னத்
துறப்பதிவ் வுலகம் மறப்பதற் கன்றே!
மறக்கிற் சுயமே மறைபடும். மறைய
இறக்கும் நம்முளம். இறக்குமக் கணமே
பிறக்கும் பிரத்தியக் பிரபோ தோதயம்!
நீரு முலகமும் நிகழ்த்திய போரும்
யாருமங் கில்லை. அகண்டசித் தனமாய்
எதிரது கழிந்ததே யின்பமே திகழும்!
உரையுணர் விறந்தவிந் நிருபா திகம்யான்
உரைதரல், பிறவிக் குருடற் கொருவன்
பால்நிறங் கொக்குப் போலெனப் பகர்ந்த
கதையாய் முடியும்! அதனாற் சற்றே
பதையா திருந்துநீர் பாருஞ்
சுதமா மிவ்வநு பூதியின் சுகமே. (1)

கருணாகரர்: சுகம்யான் வேண்டிலேன் சுவாமி! எனக்குமந்
நிகம்பர மிரண்டு மிலையெனி லேகுக.
யானென வொருபொரு ளுளதா மளவும்,
ஞான தயாநிதி நங்குரு நாதன்
ஈனனு மென்னையு மிழுத்துச் சேர்த்த
வானநற் கருணையே வாழ்த்தியிங் கென்னால்
ஆனதோர் சிறுபணி யாற்றலே யெனக்கு
மோனநற் சித்தியும் முத்தியும் பாவும்.
ஐயோ! உலகெலாம், பொய்யா யினுமென்!
பொய்யோ பாரும்! புரையறு குரவன்
பரிந்துநந் தமக்கே சுரந்தவிக் கருணை!
இப்பெருந் தன்மையு மிங்குமக் கேது?
செப்பிய நிட்டையுஞ் சித்தநற் சுத்தியும்
எப்படி நீரிங் கெய்தினீர்? எல்லாம்
ஒப்பறு நந்திற மென்றோ வுன்னினீர்?

அந்தோ ! அந்தோ ! அயர்ப்பிது வியப்பே !
சுந்தரர் கடைக்கண் தந்திடு முன்னம்
பட்டபா டெங்ஙனம் மறந்தீர் ? பதைப்புறு
நீட்டையா யினுமென் ? நிமலவீ டாயினென் ?
ஆவா ! யாம்முன் அல்லும் பகலும்
ஓவாப் பாவமே யுஞற்றியெப் போதும்
ஒருசாண் வயிறே பெரிதாக் கருதியும்,
பிறர்புக ழதுவே யறமெனப் பேணியும் ;
மகிழ்கினும் துயருழந் தழுகினுஞ் சினகரந்
தொழுகினும் நன்னெறி யொழுகினும் வழுவினும்
எத்தொழில் புரியினு மெத்திசை திரியினும்
“நாமே யுலகின் நடுநா யகம்நம்
க்ஷேமமே ஜகசிருஷ் டியினோர் பெரும்பயன்”
என்னவிங் கெண்ணி யெமக்கெமக் கென்னுந்
தந்நய மன்றிப் பின்நினை வின்றி
முடிவிலா ஆசைக் கடலிடைப் பட்டும் ;
தடைசிறி தடையிற் சகிப்பறு கோபத்
தீயிடைத் துடித்தும் ; ஐயஞ்சிறி தடையில்
வாய்மண் ணிறைய மதக்குழி யதனுள்
குதித்துக் குதித்துக் குப்புற விழுந்தும் ;
பிறர்புகழ் காணப் பெரிதக முடைந்தும் ;
பிறர்பழி காணப் பெரிதக மகிழ்ந்தும் ;
சிறியரைக் காணிற் செருக்கியும் ; பெரியரைக்
காணிற் பொறாமையுட் கலங்கி நாணியும் ;
எனைத்தென என்னுகேன் ! நினைக்கினு முடலம்
நடுங்குவ தந்தோ ! நம்மை யிங்ஙனம்
கொடும்பே யாயிரங் கூத்தாட் டியவழி,
விடும்பரி சின்றிநாம் வேதனைப் படுநாள்
“ஏ ! ஏ ! கெடுவாய் ! இதுவல உன்நெறி
வா ! வா ! இங்ஙனம்.” எனமன மிரங்கிக்
கூவிய தார்கொல் ? குடிகொண் டிருந்த
காமமா திகளுடன் கடும்போர் விளைக்க
ஏவிய தார்கொல் ? இடைவிடா தவைகள்
மேவிய காலை மெலிந்துகை யறுநம்
ஆவியுள் தைரிய மளித்தவர் யார்கொல் ?

சுந்தரர் கருணையோ தந்திர மோவிவை ?
உளமெனப் படுவதோ அளவிலாப் பெருவெளி :
கோட்டையு மில்லை, பூட்டுதா ழகற்கிலை :
நஞ்சே யனைய வஞ்சகர் திரியும்,
அஞ்சோ வாயில் ! ஆயிரம் : ஆயிரம் :
அவைதொறு மதனுள் நடைகொள நம்புவாட்
மாற்றிடக் கனைந்தொறும் வருந்தி நினைவோ
சாற்றிடக் கனிதரக் கேதுமே யிலை.
இப்பெரும் விபத்தி லெப்படிப் பிழைப்பீர் ?
அருளா தரவால் யாதோ நீக்கனம்
இருள்தீர்ந் திருந்தீர்; இலையெனி னிலையெது?
விட்டதுந் தொட்டதும் வெளிப்பட லின்றி
கிட்டையும் நெருங் கெட்டலைந் திடுவீர் !
கட்டம் ! கட்டம் ! கரதலா மலகமாய்க்
கண்டுமோ அருளிற் கொண்டீ ரையம் !
"யார்கேட் கின்றார் ? யார்காக் கின்றார் ?"
என்றீர் நன்றாய். நண்பரே ! நம்நிலை
கண்டுள மிரங்கிக் காத்தருள் புரிந்து
தொண்டுகொண் டாண்ட சுந்தரன் கருணை
நமக்கென உரித்தோ ? நானா வுயிர்கள்
எவர்க்கும் அதுபொது வன்றோ ? இயம்பீர்.
எங்கிலை யவனருள் ? எல்லையி லண்டந்
தங்குவ தனைத்து மவனருட் சார்பில்.
அண்டகோ டிகளிங் கொன்றோ டொன்று
விண்டிடா வண்ணம் விக்கிய பாசம்,
அறியி லருளலாற் பிறிதெது ஆகருஷணம் ?
ஒன்றோ டொன்றியாப் புற்றுய ரன்பில்
நின்றஇவ் வுலகம், நிகழ்த்திய கருணை
பயிற்றிடு பள்ளியே யன்றிப் பயனறக்
குயிற்றிய பொல்லாக் கொடியயந் திரமோ ?
பாரும் ! பாரும் ! நீரே கூறிய
சிலந்தியின் பரிவே யிலங்கிடு முறைமை !
பூரிய உயிரிஃ தாயினும், தனது
சிறிய வலையிற் சிக்குண் டிறந்த

ஈயினை யீதோ இனியதன் குஞ்சுகள்
ஆயிர மருந்த அருகிருந் தூட்டி
மிக்கநல் லன்பெனும் விரிந்தநூல் தெளிய
அக்கரம் பயில்வ ததிசயம்! அதிசயம்!
இப்படி முதற்படி, இதுமுத லாகம்
ஒப்பறும் யாக்கையா முயர்படி வரையுங்
கற்பதிங் கிந்நூற் கருத்தே. அதனால்
இத்தனி யுலகி லெத்துயர் காணினும்
அத்தனை துயரும், நம் மழுக்கெலா மெரித்துச்
சுத்தநற் சுவர்ணமாச் சோதித் தெடுக்க
வைத்தஅக் கினியென மதித்தலே, உயிர்கட்கு
உத்தம பக்தியென் றுள்ளுவர். ஒருகாற்
காரண காரியங் காண்குவ மல்லேம்.
யாரிவை யனைத்தும் ஆய்ந்திட வல்லார்?
பாரிசா தாதிப் பனிமல ரந்தியின்
அலர்தலே யன்னவை விளர்நிறங் கிளர
நறுமணங் கமழ்தற் குறுகா ரணமென
நேற்றிரா நடேசர் சாற்றிடும் முன்னர்
நினைத்தோங் கொல்லோ? உரைத்தபின் மற்றதன்
உசிதம்யா ருணரார்? நிசியலர் மலர்க்கு
வெண்மையு நன்மண முண்மையு மிலவேல்
எவ்வண மவற்றி னிஷ்டநா யகராம்
ஈயின மறிந்துவந் தெய்திடும்? அங்ஙனம்
மேவிடி லன்றோ காய்தருங் கருவாம்?
இவ்விதம் நோக்கிடி லெவ்வித தோற்றமுஞ்
செவ்விதிற் பற்பல காரணச் செறிவால்
அவ்வவற் றுள்நிறை யன்பே யாக்கும்.
சிற்றறி வாதலான் முற்றுநா முணரோம்.
அந்தியி லிம்மல ரலர்வதே னென்பதிங்
கறிகிலோ மாயினு மதற்குமோர் காரணம்
உளதென நம்பலே யூகம். அதனால்
உலகிடைத் தோன்றும் உறுகணுக் கேது
நலமுற நமக்கிங் கிலகா ததினாற்
பலமுறை நம்மையே பரிந்திழுத் தாண்டவர்

இலையுல கிடையென என்றுரை தெங்ஙனம்?
யாரிங் குலகெலா மறிந்திட வல்லார்?
பாருமிங் கிதோ! பரம தயாநிதி
நங்குரு நாத னென்பதா ரொவ்வார்?
நம்டவந் திரும் நாளுமிங் கொருப்போல்.
ஆயினும் பாரும்! அம்மணி மனோன்மணி,
ஏதோ ஊழ்வினை வசவாற் றனது
காதாற் கேட்டதுங் கண்ணாற் காணவும்
இல்லா வொருவனை யெண்ணி மயங்கினள்.
அல்ல லிதுவே போதும், அதனுடன்.
அப்பரு டன்று முறைமன ஆயின்
ஒப்புறு புருடோத் தமனே யென்ன
எப்படி நோக்கினு மிசையும். அப்படியே
செப்பினர் யாவுந் தெரிந்தநங் குருவும்.
ஏதோ வொருவன் சூதா லேவிய
தூதால் வந்ததே யீதோ பெரும்போர்!
போர்புரிந் திடவரு புருடோத் தமனும்
வார்குழன் மனோன்மணி மாதும், நோக்கில்
நம்மிரு மெத்தினை நம்பிய அன்பர்!
இம்மென வொருமொழி யிசைத்திவர் தம்மை
ஒருவரை யொருவ ருணர்த்திடப் பண்ணில்,
வெருவிய போரும் வினைதுய ரனைத்தும்
இருவர்தந் துக்கமு மெல்லா மேகும்.
இப்படிச் சுலபசாத் தியமா யிருக்க
அப்படி யொன்றும் அருகலொன் றுமல்
சுருங்கைதொட் டிடவே துலக்கித் தன்திரு
அருங்கை வருத்தவும் ஆற்றுமப் பணியே.
சுருங்கை யிதற்குஞ் சொல்லிய துயர்க்கும்
நெருங்கிய பந்தம் நினைத்தற் கென்னை?
ஒன்றுந் தோற்றுவ தன்றென் றனக்கே,
என்றுநா னெண்ணி யெங்குரு நாதன்
திருமொழி மறுத்தென் சிற்றறி வினையே
பெரிதெனக் கருதலோ, அலதவர் பேணிய
இவ்வழி நம்மதிக் கெட்டா விடினுந்

செவ்வி திதுவெனத் தெளிதலோ தகுதி?
இப்படி யேயாம் இவ்வுல கின்னிலை,
அற்பமா மதியிலை ஐயம். நமதுயற்
றெய்ப்பினில் வைப்பா யிருந்தபே ரருளைக்
கைப்படு கனியெனக் கண்டபின், உலகில்
எப்பொரு ளாயினிப் படியே யிவ்வருள்
தாங்கிடு மென்பதிற் சமுசய மென்னை?
இல்லா மாயை யென்செய வல்லதாம்?
எல்லா மவனரு ளல்லா தில்லை.
என்னனு பவமிது. மன்னிய இவ்வருள்
தன்னிடை மூழ்கித் தானெனல் மறந்து,
நெருப்பிடை யிழுதென நெக்குநெக் குருகி
இருப்பவர் பிறக்கா யிராப்பக லுழைப்பர்
ஒருபயன் கருதார். அருள்கரு துவதென்?
அகிலமுந் தாங்கு மருளிலோ ரங்கமாச்
சகலமுஞ் செய்வர். அஃதவர் சமாதி.
எங்கெலாந் துக்கங் காணினும் அங்கெலாம்
அங்கம் கரையநின் றாற்றி "ஐயோ!
எம்மையுங் காத்த இன்னரு ளிவரையுஞ்
செம்மையிற் காக்க" எனமொழி குளறி
அழுதுவேண் டுவதே யன்றி
விழுமிய முத்தியும் வேண்டார் தமக்கே. (2)

(சுந்தரமுனிவரும் நடராஜரும் வர; கருணாகரர், நிஷ்டாபரர் இருவரும் எழுந்து வணங்க)

சுந்தர: எல்லாம் நடேசரே! உமதுபே ரருளே!
அல்லா தென்னா லாகுமோ? சுருங்கை
இத்தின மெப்படி முடியும்நீ ரிலரேல்?
எத்தனை கருணை? என்னைகைம் மாறு?

நட: நல்லது! நல்லது! சொல்லிய முகமன்!
வேலை யெனதோ? உமதோ? விநோதம்;
ஏவிய வழியான் போவதே யல்லால்
ஆவதென் என்னால்? ஆ! ஆ! நன்றே!

சுந்தர: கருணா கரரே! களைப்பற நீரிங்கு
ஒருவா றுறங்கவென் றுன்னி யன்றோ

## கலித்துறை

சாற்றரும் ஆபதந் தான்தவிர்த் தின்பந் தரமுயன்று
தோற்றருங் கற்படை யேதோ அமைத்தனன் சுந்தரனே
வேற்றுரு வாயகம் வேதித்து நம்மை விளக்குமவன்
மாற்ற மனுபவம் வந்தபின் னன்றி மதிப்பரிதே.

மூன்றும் அங்கம்

முற்றிற்று.

---

| | | | |
|---|---|---|---|
| ஆசிரியப்பா | 6-க்கு | அடி | 819 |
| வஞ்சித்தாழிசை | 3-க்கு | ,, | 12 |
| குறள் வெண் செந்துறை | 50-க்கு | ,, | 100 |
| கலித்துறை | 1-க்கு | ,, | 4 |
| ஆக அங்கம் 1-க்கு பா. | 60-க்கு | ,, | 935 |

---

# நான்காம் அங்கம்

## மூன்றாங் களம்

இடம்: படை பயில் களம் : காலம் : காலை.

பலதேவன் படையணி வகுக்க,

குடிலன் அரசனை எதிர்பார்த் தொருபுறம் நிற்க,

(நேரிசை ஆசிரியப்பா)

**குடிலன்.** பருதியு மெழுந்தது: பொருதலும் வந்தது—

(பெருமூச்செறிந்து)

(தனிமொழி) கருதுதற் கென்றுள. காணுதும் ஆ! ஆ!
ஒருவன தாசைப் பெருக்கா லுலகில்
வருதுயர் கடலிற் பெரிதே! வானின்
எழுந்தவிவ் இரவி விழுந்திடு முன்னர்
ஈண்டணி வகுத்துமிக் காண்டகு மிளைஞரில்
மாண்டுறு மவர்தொகை மதிப்பார் யாரே!
மாண்டிட லன்றே வலிது. மடிவுள்
இட்டகல் லாலெழும் வட்டமாம் விரிதிரை
வரவரப் பெரிதாய்க் கரைவரை வரல்போல்,
நின்றவிவ் வீரரை யொன்றிய மனைவியர்
உற்றார் பெற்றார் நட்டா ரென்றிப்
படிபே பரவுமே படியெலாந் துயரம் !—(சற்று நிற்க)
என்னை யென்மதி யிங்கன மயக்கடி
யென்னைய பெடுத்தெறிந் தேதருகல்? சிச்சீ!
மன்னவர்க் காக மாள்வ திவர்கடன்
மன்னவ னென்போன் மதியில் வலியோன்.
அன்றியும் பலநா ளாகம் அன்னந்
தின்றிக் கிருந்திவர் செய்ததென்? அவர்தம்
உடன்பா டிதுவே. உடன்பா டாற்றுங்
காலம் விடுவதார்? வேறு மியல்பாய்
பலபெயர் தங்கள் பட்டா லன்றி
உலகி லெவரே பொருதக மீள்வார்?

இயல்பிது வாயி னிரங்க லென்பயன்?
வயலுழு முழவோர் வருத்தமுங் குனிந்திருந்து
ஆடை நெய்வோர் பீடையும் வாகனந்
தாங்குவோர் தமக்குள தீங்கும் நோக்கி
யுலகிடை வாழா தோடுவ ரோபிறர்?
அலகிலா மானிடர் யாவரு மவரவர்
நலமே யாண்டும் நாடுவர். மதிவலோர்
களத்தொடு காலமுங் கண்டுமீ னுண்ணக்
குளக்கரை யிருக்குங் கொக்கென அடங்கிச்
சம்பவஞ் சங்கதி யென்பவை நோக்கி
யிருப்பர்: நலம்வரிற் பொருக்கெனக் கொள்வர்.
நண்ணா ரிதுபோல் நலமிலா ஐயம்.
எண்ணார் துணிந்தபின்; பண்ணார் தாமதம்.
ஏழைய ரலரோ இரங்குவ ரிங்ஙனம்?
கோழையர்! எங்ஙனங் கூடுவார் இன்பம்?
வந்தன னஃதோ மன்னனும்.—

(ஜீவகன் வர)

வந்தனம் வந்தன முன்றிரு வடிக்கே, (க)

(நிலைமண்டில ஆசிரியப்பா)

ஜீவகன். குடிலா! நமது குறைவிலாப் படைக
ளடையவு மணிவகுத் தானவோ?

குடில, அடியேன்.
நாரணர்க் கன்றோ நீளரண் காப்பு?
சொன்னதப் படியென வுன்னினன்.

ஜீவ, ஆமாம்!
அதற்கே னையம்?

குடில, அவர்க்கது முற்றும்
இதக்கே டென்றனர். ஆயினும் போயினர்.

(படைகள் வணங்கி)

படைகள். ஜயஜய! ஜீவக வேந்த! விஜயே

குடில, அதிர்கழல் வீரரு மரசரு மீதோ
எதிர்பார்த் திருந்தன ரிறைவ! நின் வரவே.
நாற்றிசை தோறும் பாற்றினஞ் சுழல

நிணப்புலால் நாறிப் பிணத்தொளி பரப்பும்
நெய்வழி பருதி வைவே லேந்திக்
கூற்றின்நா வென்னக் குருதிகொப் புளித்து
மாற்றலர்ப் பருகியும் ஆற்றா தலையும்
உறையுறு குறுவா ளொருபுற மசைத்துக்
காற்றினு மிகவுங் கடுகிக் கூற்றின்
பல்லினுங் கூரிய பகழி மல்கிய
தூணி தோளில் தூக்கி,நாண் நின்று
எழுமொலி யுருமுபோன் றெழுப்பி யார்த்தவர்
கடிபுரி காக்குநின் காற்படை யாளர்.
இருப்புக் கலினம் நெரித்துச் சுவைத்துக்
கருத்தும் விரைவு கற்குங் குரத்தாற்
பொடியெழப் புடைக்கும் புரவிகள், போர்க்கு
விடைகேட் டுதடு துடித்தலும் வியப்பே.
நிணங்கமழ் கூன்பிறைத் துணைமருப் பசைத்து
மம்மர் வண்டின மாற்ற மும்மதம்
பொழியும் வாரணப் புயலினம் தத்தம்
நிழலொடு கறுவி நிற்பது மழகே.
முன்னொரு வழுதிக்கு வெந்நிட் டோடிய
புரந்தரன் கைப்படாப் பொருப்புகள் போன்ற
கொடிஞ்சி நெடுந்தே ரிருஞ்சிறை விரித்து
"வம்மின்! வம்மின்! வீரரே! நாமினி
யிம்மெனு முன்னமவ் விந்திர லோகமுஞ்
செல்லுவம்! ஏறுமின்! வெல்லுவம்!" எனப்பல
கொடிக்கரங் காட்டி யழைப்பதுங் காண்டி.—

ஜீவ, கண்டோம், கண்டோம். களித்தோம் மிகவும்.
உண்டோ இவர்க்கெதிர்? உனக்கெதிர்? ஓ! ஓ!

(படைகளை நோக்கி)

வேற்படைத் தலைவரே! நாற்படை யாளரே!
கேட்பீ ரொருசொல்! கிளர்போர்க் கோலம்
நோக்கியாம் மகிழ்ந்தோம். நுமதுபாக் கியமே
பாக்கியம். ஆ! ஆ! யார்க்கிது வாய்க்கும்?
யாக்கையி னரும்பயன் வாய்த்ததிங் குமக்கே!

தாயினுஞ் சிறந்த தயைபூண் டிருந்தநம்
தேயமாந் தேவிக்குத் தீவினை யிழைக்கத்
துணிந்தவிவ் வஞ்சரை யெணுந்தொறு மெணுந்தொறும்
அகந்தனி லடக்கியும் அடங்கா தெழுந்து,
புகைந்துயிர்ப் பெறியப் பொறிகண் பொரிய
நெடுந்திரட் புருவங் கொடுந்தொழில் குறிப்ப
வளங்கெழு மீசையுங் கிளர்ந்தெழுந் தாடக்
களங்கமில் நும்முகங் காட்டுமிச் சினத்தீ
கண்டுஅப் பாண்டியே கொண்டன ளுவகை.
அலையெறிந் தீதோ ஆர்த்தனள். கேண்மின்!
மூலைகரந் தூட்டிய முதுநதி மாதா!

**படைகள்.** தாம்பிர பன்னிக்கு ஜே! ஜே!

**ஜீவ,** ஒருதுளி யேனுநீ ருண்டுளீ ராயின்
கருதுவீர் தாம்பிர பன்னியின் கட்டுரை.
"மக்காள்! அருந்தி வளர்மின்! நுமக்கு
மிக்கோ ரில்லா வீரமாய்ப் பரந்து
முதுசுதந் தரத்தின் முத்திரை யாகி,
இதுபரி ணமித்துஉம் இதயத் துறைக!
அன்னியன் கைப்படா விந்நீர் கற்பிற்கு
இழிவுறின் மார்பினின் றிதுவே சோரியாய்ப்
பொழிகநீர் பொன்றிடு மளவும்!" என் றன்றோ
வாழ்த்தி நுந்தமை வளர்த்தினள்? அவளுரை
தாழ்த்தா திவணீர் போர்த்தபோர்க் கோலம்
பார்த்தா லார்த்தவள் வாழ்த்தா தென்செய்வள்!

**படைகள்.** ஜே! ஜே!

**ஜீவ,** விந்தம் அடக்கினோன் தந்தநந் தமிழ்மொழி
தற்சுதந் தரமறும் அற்பர்வாய்ப் படுமோ?

**படைகள்.** தமிழ்மொழிக்கு ஜே! ஜே!

**ஜீவ,** பழையோர் பெருமையுங் கிழமையுங் கீர்த்தியும்
மன்னிய அன்பின் நும் அன்னையர் பாடி
நித்திரை வரும்வகை யொத்தறுத் துமது

தொட்டில்தா லாட்ட, அவ்·இட்டமாம் முன்னோர்
தீரமுஞ் செய்கையும் வீரமும் பரிவும்
எண்ணி யிருகணுங் கண்ணீர் நிறையக்
கண்டுயி லாதுநீர் கனிவுடன் கேட்ட
வண்டமிழ் மொழியால் மறித்திக் காலம்
"ஆற்றிலம்; ஆண்மையு முரிமையு மொருங்கே
தோற்றனம்" எனச்சொலத் துணிபவர் யாவர்?

**படைகள்.** சிச்சீ!

**ஜீவ,** பொதியமா மலையிற் புறப்பட் டிங்குதன்
படியே யுலாவுமிச் சிறுகால், பணிந்துமற்று
"அடியேம்" எனத்திரி பவர்க்கோ உயிர்ப்பு!

**படைகள்.** ஹே! ஹே!

**ஜீவ,** கோட்டமி லுயிர்ப்போ கூறீர்; அன்ன
நாட்டபி மானமில் நடைப்பிண மூச்சும்?

**படைகள்.** சிச்சீ! சிச்சீ!

**ஜீவ,** சேனையோ டிவ்வழி திரிந்துநேற் றிரவினுந்
திருவனை யார்களுஞ் சேய்களுங் கொண்ட
வெருவரு நித்திரைக் குறுகண் விளைத்துநும்
பாசாபி மானமும், தேசாபி மானமும்
பொருளெனக் கருதா தருணிறை நுமது
தாய்முலைப் பாலுடன் வாய்மடுத் துண்டநல்
ஆண்மையும் சுதந்தரக் கேண்மையு மொருங்கே
நிந்தைவஞ் சியர்செய வந்தநுங் கோபம்
முற்று மியல்பே. மற்றுதன் குகையுள்
உற்றறி முகமயிர் பற்றிடி னதற்குக்
குறும்பா லெழுஞ்சின மிறும்பூ தன்றே!
உரிமையே லாண்மையா ராட்டார் சாந்தம்,
பெருமையில் பிணத்திற் பிறந்ததோர் சீதம்
அந்தணர் வளர்க்குஞ் செந்தழல் தன்னினும்
நாட்டபி மானமுள் மூட்டிய சினத்தீ
யன்றோ வானோர்க் கென்றுமே யுவப்பு!

வந்தவிக் கயவர்தாஞ் சிந்தையிற் கொளுத்திய
வெந்தழற் கவரே யிந்தன மாகுக!

படைகள். ஆகுக! ஆகுக!

ஜீவ, இன்றுநீர் சிந்து மிரத்தமோர் துளியும்,
நின்றுகம் பலவு நிகழ்த்துமே "இந்தப்
பாண்டிய ருரிமை பாராட்டும் பண்பினர்;
தீண்டன்மின் திருந்தலீர்! அவர்தஞ் செருக்கு.
சுதந்தர மவர்க்குயிர்; சுவாசமற் றன்று.
இனியுமின் னன்றாய்க் கனவினு மிதனை."—
எனமுர சறையுமே யெத்திசை யார்க்கும்.
இத்தனிப் போரினீ ரேற்றிடுங் காயஞ்
சித்தங் களித்து, சயமா துமக்கு
முத்தமிட் டளித்த முத்திரை யாகி
யெத்தனை தலைமுறைக் கிலக்காய் நிற்கும்!

படைகள். ஜே! ஜே!

ஜீவ, போர்க்குறிக் காயமே புகழின் காயம்.
யார்க்கது வாய்க்கும்! ஆ! ஆ! நோக்குமின்!
அனந்தந் தலைமுறை வருந்தனி மாக்கள்,
தினந்தினந் தாமனு பவிக்குஞ் சுதந்தரந்
தந்ததம் முன்னோர் நொந்தபுண் ணெண்ணிச்
சிந்தையன் புருகிச் சிந்துவர் கண்ணீர்,
என்றா லப்புண் 'இறந்துகோட் டக்கது'
அன்றோ? அறைவீர். ஐயோ! அதுவும்
புண்ணோ? புகழின் கண்ணே. எவரே
புண்படா துலகிற் புகழுடம் படைந்தார்?
புகழுடம் பன்றியிவ் விகழுடம் போமெய்?
கணங்கணந் தோன்றிக் கணங்கணம் மறையும்
பிணம்பல. இவரெலாம் பிறந்தா ரென்பவோ!
உதும்பர தருவி லொருகனி யதனுட்
பிறந்திறு மசக மிவரினுங் கோடி.
பிறந்தா ரென்போர் புகழுடன் சிறந்தோர்.
அப்பெரும் புகழுடம் பிப்படி யின்றிதோ!

சலபமாய் நமக்கெதி ரணுகலால், துதித்துப்
பலமுறை நமது பாக்கியம் வியந்தோம்.
ஒழுக்கமற் றன்றது வெனினும், உம்மேல்
அழுக்கா றுஞ்சிறி தடைந்தோம். நும்மொடு
இத்தினம் அடையு மிணையிலாப் பெரும்புகழ்
எத்தனை யாயிர மாயிரங் கூறிட்
டொத்ததோர் பங்கே யுறுமெனக் கெனவே
யோடுமோர் நினைவின் கதனால், வீரர்காள்!
நீடுபோர் குறித்திவண் நின்றோர் தம்முள்
யாரே யாயினுஞ் சீராங் தங்கள்
உயிருடம் பாதிகட் குறுமயர் வுன்னிச்
சஞ்சல மெய்துவோ ருண்டெனிற் சாற்றுமின்.
வஞ்சக மில்லை. என் வார்த்தையி துண்மை.
மானமோ டவரையிம் மாநக ரதனுட்
சேமமா யின்றிருத் திடுவம். திண்ணம்.
உத்தம மாதர்க ளுண்டுமற் றங்கே
யெத்தனை யோபேர். இவர்க்கவர் துணையாம்.

**படைகள்.** இல்லை! இல்லையிங் கத்தகைப் புல்லியர்!

**ஜீவ,** குறைவெனக் கருதன்மின். எம்புகழ்க் கூறு
சிறிதா மெனவுனிச் செப்பினேம். அதனாற்
பிறிதுநீர் நினையீர். பேசுமின் உண்மை.

**படைத்தலைவர்.** இல்லையெம் மிறைவ! இந்நா டதனுள்
இல்லையத் தகையர்.

**யாவரும்.** இலையிலை! இலையே!

**ஜீவ,** நல்லதப் படியேல், நாமே நுஞ்சுய
நாட்டினல் லுரிமையா ராட்டும் பெரிய
மேன்மையு மதனால் விளைபுக ழுதவும்
மறுக்கிலம். பொறுக்குமின். வம்மின்! விஜய
இலக்குமி காத்திருக் கின்றாள்! அன்றியும்
ஒலிக்குறும் ஜயபே ரிகைகேட் டலதுமற்று
ஓய்கிலள் நோன்புநந் தாய்மனோன் மணியே. (2)

படைவீரர். மனோன்மணிக்கு ஜே! ஜே! ஜே!

யாவரும். இளவரசிக்கு ஜே! ஜே! ஜே!

(குறளடி வஞ்சிப்பா)

ஜீவ,

நந்தாய்தமர் நங்காதலர்
நஞ்சேய்பிறர் நந்தாவுறை
நந்தேயமேல் வந்தேநனி
நொந்தாழ்துயர் தந்தே இவண்
நிந்தாநெறி நின்றாரிவர்
தந்தாவளி சிந்தாவிழ,
அடிப்போமடல் கெடுப்போமுகத்
திடிப்போங்குட லெடுப்போமிடுப்
பொடிப்போஞ்சிர முடைப்போம்பொடி
பொடிப்போம்வசை துடைப்போமுயிர்
குடிப்போம்வழி தடுப்போம்பழி
முடிப்போமினி நடப்போம்கொடி,
எனவாங்கு,

பெருமுரசதிரப் பெயருமின்
கருமுகி லீர்த்தெழு முருமென வார்த்தே.

(படைகள் முரசடித்து நடக்க, படைப்பாணர் பாட)

(கலித்தாழிசை.)

படைப்பாணர்.

தந்நகர மேகாக்கச் சமைந்தெழுவோ ருதுமிந்தச்
சின்னமதி சயிக்குமெமன் செருக்கொழிமின் தெவ்வீர்காள்!
சின்னமதி! சயிக்குமெம னெனச்செருக்கி நிற்பீரேல்,
இன்னுணவிங் குமக்கினிமே லெண்ணீரே யெண்ணீரே யிசைத்துளோமே.

படைகள். ஜே! ஜே!

பாணர்.

மறங்குறுதம் மூர்காக்கும் வயவர்புய மேவிசயை
யுறைவிடமா விவர்வாளென் றோடுடுமின் தெவ்வீர்காள்!
உறைவிடமா? விவர்வாளென் றோடுடா ராயினினி
மறவிதிசை யொருபோதும் மறவீரே மறவீரே வழங்கினோமே. (2)

**படைகள்.** ஜே! ஜே!

**பாணர் :**

ஒல்லுமனை தான்காக்க வுருவிபகை வாளதற்குச்
செல்லுமுறை பின்னரிலை திரும்பிடுமின் தெவ்வீர்காள்!
செல்லுமுறை பின்னரிலை யெனத்திருப்பீ ராயினுங்கள்
இல்லவர்க்கு மங்கலநா ணிற்றதுவே யிற்றதுவே யியம்பினோமே. ()

**படைகள்.** ஜே! ஜே!

(படைகளும் ஜீவகன் முதலியோரும் போர்க்களம் நோக்கிப் போக.)

நான்காம் அங்கம் : முதற்களம் முற்றிற்று.

---

# நான்காம் அங்கம்

## ௨-வது களம்.

இடம்: கோட்டைவாசல், காலம்: காலை.

நடர்: கோட்டைகாக்கும் படைஞர்.

(நேரிசை ஆசிரியப்பா)

முதற்படைஞன். இப்படை தோற்கி னெப்படை ஜயிக்கும்?
எப்படி யிருந்த திராஜன் பேச்சு!
கல்லு முருகிக் கண்ணீர் விடும். இப்
புல்லுங் கேட்கிற் புறப்படும் போர்க்கு.

௨-ம் படை. முற்றுங் கேட்டை கொல்?

முதற்படை. முற்றுங் கேட்டேன்.
சற்றும் மனமிலை திரும்புதற் கெனக்கு.
சரியல வாணையில் தவறுத லென்றே,
வெருவிநான் மீண்டேன். இலையே லுடன்சென்
றொருகை பார்ப்பேன். ஓகோ! சும்மா
விடுவனோ? பார்க்கலாம் விளையாட் டப்போது.
என்செய! என்செய! எத்தனை பேரையான்
பஞ்சாய்ப் பறத்துவன்! துரத்துவன்! பாண்டியில்
வஞ்சவிவ் வஞ்சிய ரென்செய வந்தார்?
நெஞ்சகம் பிளந்திந் நெடுவாள் தனக்குக்
கொஞ்சமோ வூட்டுவன் குருதி! என்செய!
நினைதொறு முடலெலாந் தின்பது தினவே!
பாக்கிய மில்லையென் கைக்கும் வாட்கும்!

௨-ம் படை. பாக்கிய மன்றது. பறைப்பயல் பாவி
குடிலனோ டிலாவுங் கோணவாய்க் கொடியன்,
சடையன், தலைவனோ டதுவோ சாற்றித்
தடுத்தே நமையெலாம் விடுத்தா னிப்பால்.

௩-ம் படை. கெடுத்தா னவனே யென்னையும். அன்றேல்
முடித்தே விடுவனென் சபதம் முற்றும்,

சண்டி அச் சங்கரன் வந்துளான் சமர்க்கு.
கண்டேன். கையிற் கிடைக்கிற் பண்டென்
தாயையு மென்னையுஞ் சந்தையிற் பழித்த
வாயினை வகிர்ந்து மார்பினைப் பிளந்து—

(வாய்மடித்துப் பற்கடிக்க)

௪-ம் படை. வஞ்சிய ரனைவரு மானமில் மாக்கள்.
பிஞ்சிற் பழுத்த பேச்சினர். யானெலாம்
நன்றா யறிவன். ஒன்றா ரென்னுடன்.
சென்றுளேன் ஜனார்த்தனம். கண்டுளேன் வைக்கம்

௫-ம் படை. விடுவே னல்லேன். அடுபோர் முடியினும்
நடுநிசி யாயினும் அடுகள முழுதுந்
தேடுவன் : சங்கரன் செத்தா னாயினும்
நாடி யவன்றலை நசுக்கி மிதித்து
வாயிடை நெடுவேல் விறக்கி—

முதற்படை. சீ! சீ!
சேவக னாநீ! செப்பிய தென்னை!
யாவரோ பிணத்தோ டாண்மைபா ராட்டுவர்?
பிணமோ பிணத்தோ டெதிர்க்க!

௫-ம் படை. போ! போ!
பெருமைநீ பேசேல். பெற்றவுன் தாயேல்
அருமைநீ யறிகுவை.

முதற்படை. யாரா யினுமென்?
பிணத்தொடு பிணக்கெது? சீ! சீ! அன்றியும்
ஒருவன் தனக்கா உண்டாங் குரோதங்
கருதியிங் கெவன்வா னுருவினன்? நமக்கெலாம்
மாதா விவ்வயின் மகாநா டிதுவே.
ஏதோ அவனையு நம்மையு மிகழ்ந்திவ்
வஞ்சியர் வஞ்சமாய் வந்தனர். அதனால்
நெஞ்சகங் கொதித்து நெடியநஞ் சுதந்தரந்
தனக்கா யுயிரையு முவப்போ டளிக்கத்
துணிந்தே நம்மையு மறந்தே நின்றோம்,
என்னி லவரவ ரிழுக்குஆர் கருதுவர்?

உன்னுதி நன்றாய். ஒருவன் தனக்கா
வந்தபோ ரன்றிலை தூர்ப்போர். அதனால்
இதோஅங் கெய்தினோர் யாரே யாயினுஞ்
சுதேசா நு ராகத் தொடர்பா லன்றிப்
பலவாந் தமது பழம்பழி மீட்போர்
கொலைபா தகஞ்செயுங் கொடுமைய ரேயாம்.

(நாராயணன் படைக்கோலமாகிக் குதிரையின்மேல் வர)

உ-ம் படை. பாரும்! பாரும்! நாரா யணரிதோ—

நாராயணன். உன்பெயர் முருக னன்றோ?

முதற்படை. அடியேன்.

ச-ம் படை. என்பெயர் சாத்தன். சுவாமி!

நாரா, ஓகோ!
எத்தனை பேருள ரிவ்வாயி லின்கண்?

முதற் படை. பத்தைந் தூறுளர், மெத்தவும் உத்தமர்.
மிகுதிறத் தார்போர் விரும்பினர். இவர்தந்
தகுதிக் கேற்ப தன்றிக் காவல்.

நாரா, பொறு! பொறு! முருகா! புரையற் றோர்க்குமற்
றுறுபணி, இன்னதென் றுண்டோ? எதிலும்
சிறமையும் பெருமையுஞ் செய்பவர்க் கன்றிச்
செய்வினை தனக்கெது? மெய்ம்மையில் யாவுந்
திருத்தமாச் செய்தலே பொருத்தமுந் தமர்க்கு.

உ-ம்படை. வேணுமென் றாயினு மெங்களை விடுத்தல்
நாணமு நோவுமாம் நாரா யணரே!

நாரா வேண்டுமென் றேரே விடுப்பர். சிச்சீ
அப்படி யேதா னாயினு நமக்குக்
கைப்படு கடமையே கடமை—
முருகா
எத்தனை பேரா லேலுமிக் காவல்?

முதற்படை. நாலிலொன் றாயின் சாலவு மிகுதி.

நாரா, அத்தனை வல்லவர் கொல்லோ? ஆயின்
இத்தனை பேர்க்குள தொழிலெலாந் தம்மேல்

ஏற்றிட வல்லரை மாற்றிநீ நிறுத்திக்
காட்டுதி யெனக்கு.

முதற்படை. காட்டுவன் ஈதோ!
(அணிவகுத்துக் காட்ட)

நாரா, (தன்னுள்) நல்லணித் தலைவன். வல்லவ ரிவரும்.

முதற்படை. ஈதோ நின்றனர்!
(காவற்படைகளை விலக்கி நிறுத்திக் காட்ட)

நாரா, போதுமோ இவர்கள்?

முதற்படை. போதும்! போதும்!

காவற்படைகள் போதுமே யாங்கள்—.

நாரா, எண்ணுமின் நன்றா யேற்குமுன்! பின்புநீர்
பண்ணுந் தவறுநம் பாலாய் முடியும்

காவற்படை. தவிர்கிலங் கடமையில். சத்தியம். தலைவ!

நாரா, தகுதியன் றெனச்சிலர் சாற்றிய தொக்க
மிகுபழி நீவிரும் மொழிவிரோ என்மேல்?

காவற்படை. மொழியோ மொன்றும். மொழியோ நும்மேல்.

நாரா, சரி! சரி! ஆயின் தாங்குமின் காவல்.
பரிமற் றையர்க்கெலா முளவோ?

௩-ம் படை. ஓகோ!

௪-ம் படை. பெரியதென் பரிபோற் பிறிதிலை.

நாரா, காணுதும்.
அணிவகுத் திவ்வயி னமர்மின்! முருகா!
மற்றை வாயிலினும் மாற்றியிவ் விதம்யான்
வைத்துள படையும் அழைத்திப் புறநீ
நொடியினில் வருதி.

முதற்படை. அடியேன், அடியேன்.
(முதற்படைஞன் போக)

நாரா, ஆம்பொழு தழைப்போம். வாம்பரி யமர்மின்:
(கோட்டைமே லுலாவி நின்று)

(தனதுள்) அரும்படை யிரண்டு மதோ! கை கலந்தன.
வரும்பழி யாதோ? மன்னவர்க் கேதோ?
ஆவதிங் கறியேன்! ஜீவக! ஜீவகா!

முற்றுநா னறிவன்நின் குற்றமுங் குணமும்.
குற்றமற் றென்னுள கூறற் குன்வயின்?
வித்தையு முன்பெருஞ் சத்திய விருப்பமும்
உத்தம வொழுக்கமு மெத்துணைத் தைபோ!
வறிதாக் கினையே வாளா அனைத்தும்
அறியா தொருவனை யமைச்சா நம்பி!
இன்னதொன் றன்றிமற் றென்பிழை யுன்னுழை?
மன்னவன் நல்லனா வாய்க்குதல் போல
என்னுள தரியவற் றரியதிவ் வுலகில்?
வாய்த்துமிங் கினைப்போல் வாணாள் வறிதாத்
தீத்திற லொருவன் சேர்க்கையால் வீதல்
மண்ணுளோர் பண்ணிய புண்ணியக் குறைவே!
சுதந்தர மறுவோர்க் கிதந்தீங் குண்டோ?
கூறுவோ ரறிவின் குறைவே; வேறென்?
அன்றியு முன்மிசை நின்றிடும் பெரும்பிழை
ஆயிர மாயினுந் தாய்மனோன் மணிநிலை
கருதுவ ருன்னலங் கருதா தென்செய்வர்?
வருவது வருக! புரிகுவம் நன்மை.

[உ-ம் படைஞனை நோக்கி] முருகன் வரவிலை?

உ-ம் படை. வருவன் விரைவில்.

நாரா, அதுவென் ஆ! ஆ!

உ-ம் படை. ஆ! ஆ! அறியேம்!

நாரா, பலதே வன்படை யலவோ?

உ-ம் படை. ஆம்! ஆம்!

நாரா, மன்னவன்?

உ-ம் படை. நடுவே.

நாரா, வலப்புறம்?

உ-ம் படை. குடிலன்.

நாரா, என்னையிக் குழப்ப மிடப்புறம்?

உ-ம் படை. ஏதோ!

நாரா, வருவது முருகன் போலும். முருகா! (முருகன் வர)

(படை வீரரை நோக்கி) வயப்பரி வீரரே! மன்னவர்க் கபஜயம்,
இமைப்பள வின்க ணெய்தினு மெய்தும்.
இம்மெனு முன்னநா மெய்துவோம் வம்மின்!

முதற்படை. வந்தன னீதோ மற்றைய வீரரும்.

நாரா, தந்தன முனக்கவர் தலைமை. நொடியில்
வலப்புறஞ் செலுத்துதி. மன்னவன் பத்திரம்.
இருபுறங் காக்குதும். வருகவென் னருகே!
(முருகன் காதில்) குடிலனை நம்பலை.

முதற்படை. அடியே னறிவேன்.

நாரா, அறிந்தவா றுற்றுதி! மறந்திடேல் மெய்ம்மை!
வம்மின் வீரரே! வம்மின்!
உம்வயி னுளதுநஞ் செம்மல தயிரே.

[யாவரும் விரைவாய்க் குதிரைமேற் செல்ல]

நான்காம் அங்கம்: உ-ம் களம் முற்றிற்று.

---

# நான்காம் அங்கம்

## ௧-வது களம்

இடம்: அரண்மனையி லொருசார். காலம்: நண்பகல்.

ஜீவகன் தனியாய்ச் சோர்ந்து கிடக்க: சேவகர் வாயில்காக்க.

(நேரிசை ஆசிரியப்பா)

**முதற்சேவகன்,** செய்வதென்? செப்பீர். கைதவற் கியாமோ
ஆறுதல் கூறுவம்?

**௨-ம் சேவகன்.** கூறலும் வீணே!
பெருத்த துயரிற் பேசுந் தேற்றம்
நெருப்பிடை நெய்சொரிந் தற்றே யென்பர்.

**௩-ம் சேவ,** பணிந்தியா மருகே நிற்போ மன்றித்
துணிந்துமற் றதுதான் சொல்லுவர் யாவர்?

**௪-ம் சேவ,** நாரா யணரேல் தீரமாய் மொழிவர்.

**௩-ம் சேவ,** மெய்ம்மை! மெய்ம்மை! விளம்புவர் செம்மையாய்!

**முதற்சேவ,** எங்குமற் றவர்தா மேகினர்? உணர்வைகொல்?

**௪-ம் சேவ,** மங்கைவாழ் மனைக்குநே ரோடுதல் கண்டேன்.

**௨-ம் சேவ,** சகிப்பளோ கேட்கில் தமியள்—

**௩-ம் சேவ,** ஆயினும்,
மகளா லன்றி மன்னவன் தேறான்.
அதற்கே சென்றனர் போலும். ஆ! ஆ!

**௨-ம் சேவ,** நாரா யணரே நன்மதி யுடையோர்.

**௪-ம் சேவ,** பாரீர்! இன்றவர் பண்ணிய சாகசம்.
இன்றியாம் பிழைத்ததிங் கிவரால். அன்றேல்—

(ஜீவகன் எழுந்து நடக்க)

**௩-ம் சேவ,** அரச னஃதோ வெழுந்தான் காணீர்.

**முதற்சேவ,** உரைதரு கின்றான் யாதோ? ஒதுங்குமின்.
அடுத்திவ ணிற்பீர். அமைதி! அமைதி!

ஜீவகன். கெடுத்தே னையோ! கெடுத்தேன்! நாணம்
விடுத்துயி ரின்னும் வீணில் தரித்தேன்.
ஆ! ஆ! என்போல் யாருளர் வீணர்!
யாருளர் வீணர்! யாருளர்! யாருளர்!
பாண்டியன் றொல்குலம் பட்டபா டின்றுமற்
றிதுவோ! இதுவோ! மதிவரு குலமே!
மறுவறு நறவே! மாசறு மணியே!
அழியாப் பழிப்புனக் காக்கவோ வுனது
வழியா யுதித்தேன் மதியிலா யானும்!
அந்தோ! இந்து முதலா வந்த
முன்னோர் தம்மு ளின்னார்க் கிரிந்து
மாண்டவ ரன்றி மீண்டவ ருளரோ!
யாதினிச் செய்குவன்! ஐயோ பொல்லாப்
பாதகன் மக்களுள் வெட்கமில் பதடி. (பற்கடித்து)
போர்முகத் தோடிப் புறங்கொடுத் தேற்குக்
கார்முக மென்செய! கடிவா ளென்செய!

(வில்லும் வாளு மெறிந்து)

ஓ! ஓ! இதனா லுண்டோர் பெரும்பயன்.

(மறுபடியும் வாளை எடுத்து நோக்கி நிற்க. சேவக ரோடிவர)

போ! போ! வெளியே போரிடைப் பொலியாது
வாளா விருந்த வாளுக் கீதோ (நாராயணன் வர)
எனதுயி ரீவேன். வினவுவர் யாவர்?

நாரா, மனோன்மணி தன்னை மறந்தாய் போலும்!

ஜீவ, குழந்தாய்! குழந்தாய்!— (விழுந்து மூர்ச்சிக்க)

சேவகர். கொற்றவா! கொற்றவா!

நாரா, பேசன்மின்! (அரசனை மடியிற் றாங்கி)

முதற்சேவ, பேசன்மின்!

நாரா, வீசுமின்! அகன்மின்!

முதற்சேவ, வெளியே!

௨-ம் சேவ, பனிநீர்—

நாரா, தெளிநீ சிறிது !

ஜீவ, குழந்தாய் ! குழந்தாய் ! கொன்றேன் நின்சீர் !

(எழுந்து சோர்வாயிருக்க)

நாரா, இழந்தா விருப்பளோ ? என்செயத் துணிந்தாய் ?

ஜீவ, நஞ்சே யெனக்கியான் ! என்செய் வேனினி !
இருதலைக் கொள்ளியி லெறும்பா னேனே !
செருமுகத்து இரிந்தென் மானஞ் செகுத்தும்
உயிரினை யோம்பவோ வுற்றது ? ஓர்சிறு
மயிரினை யிழக்கினு மாயுமே கவரிமா.
பெருந்தகை பிரிந்தும்ஊன் சுமக்கும் பெற்றி
மருந்தா யெனக்கே யிருந்ததே நாரணா !

நாரா, மன்னவ ! யார்க்குந் தன்னுடல் மாய்த்தல்
அரிதோ ? பெரிதாம் அஞர்வந் துற்றுழிக்
கருதிய தமரைக் காட்டிவிட் டோடி
யொளிப்பதோ வீரமென் றுன்னினை ?

ஜீவ, ஓ ! ஓ!
போரிடை யோடுவோன் வீரம்நா டுவனோ ?

நாரா, காலமுங் களமுங் கண்டு திரும்புதல்
சாலவும் வீரமே. தக்கவை யுணருந்
தன்மையில் சௌரியம் மடமே. சூழ்ச்சிசேர்
வன்மையே வீரத் துயிராம் மன்னவ !

ஜீவ, போதும் ! போதுநின் போலி நியாயம் !
சாதலுக் கஞ்சியோர் தனயனுக் காகச்
சூதக வுடம்பைச் சுமக்கத் துணிந்தேன்.
மன்னனு மல்லன். வழுதியு மல்லன் !
(சேவகரை நோக்கி) என்னுட னிருமின் ! ஏன்நிற் கின்றீர் ?

முதற்சேவ, இறைவ ! ஈதென்னை !

ஜீவ, இறைவனென் றென்னை
யிசைப்பது வசையே. இஃதோ காண்மின் !
அசைந்த தொருநிழல். அஃதோ யானெனப்
பாருமின். பாண்டியன் போரிடைப் பட்டான்.

வாரும்! வாரும்! இருமின் யாவரும்.

நாரா, வீணாய் வெற்றுரை விளம்பலை வேந்த!
காணா யலைதோ! அவர்விடுங் கண்ணீர்.

(சேவகர் அழுதலை நோக்கி)

ஜீவ, வம்மின்! வம்மின்! எம்மனீர்! ஏனிது?

முதற்சேவ, பருதிகண் டன்றோ பங்கயம் அலரும்?
அரச நீ துயருறி லழுங்கார் யாரே?

ஜீவ, பிரியசே வகரே! பேடையேன்! துயரேன்!
இழந்தன முற்று மென்றோ வெண்ணினீர்!
அழிந்ததோ நம்மாண்? ஒழிந்ததோ நம்படை?
மும்மையி னிம்மியு முண்மையி னிழந்திலம்.
வெல்லுவ மினியும்: மீட்போம் நம்புகழ்
அல்லையேற் காண்மின்!

நாரா, அதற்கென் ஐயம்?
இறைவ! இப் போதுநீ இசைத்தவை சற்றுங்
குறைவிலை. தகுதியே. கூறிய படியே
ஆவது காண்குவம். அழகா ரம்புயப்
பூவின துயர்வு பொய்கையி னாழத்
தளவா வதுபோல், உளமது கலங்கா
ஊக்க மொருவன தாக்கத் தளவெனத்
துணிவார்க் குறுதுயர் தொடுமுன் எவ்வும்
அணியார் பந்துறு மடிபோல், முயற்சியில்
இயக்கி யின்பம் பயக்குமென் றிசைக்குஞ்
சான்றோர் சொல்லுஞ் சான்றே யன்றோ?
ஆதலி னிறைவநீ யோதிய படியே
உள்ளத் தெழுச்சியு முவகையோ டூக்கமும்
தள்ளா முயற்சியுந் தக்கோர் சார்பும்,

(குடிலனும் பலதேவனும் வர)

உண்டே லூழையும் வெல்லுவம். மண்டமர்
அடுவதோ வரிது வடிவே லரசே!

குடில, (தனதுள்) இப்பரி சாயா சிருப்பது வியப்பே!

தக்கோ ரென்றனன் சாற்றிய தென்னே!
(அழுவதாகப் பாவித்து ஒருபுறம் ஒதுங்கி முகமறைந்து நிற்க.)

ஜீவ, ஏனிது குடில! என்பல தேவ!
ஆனதென்? அமைச்ச! ஆ! ஆ!

குடில, அடியேன்.

ஜீவ, வருதி யிப்புறம்! வருதியென் னருகே!

குடில, (அழுது) திருவடிச் சேவையில்—

ஜீவ, செய்தவை யறிவோம்.

குடில, (ஏங்கி) ஜனித்தநாள் முதலா—

ஜீவ, உழைத்தனை! உண்மை!

குடில, உடல்பொரு ளாவி மூன்றையு மொருங்கே—

ஜீவ, விடுத்தனை உண்மை. விளம்பலென்?

குடில, உண்மையிற்
பிசகில னென்பது—

ஜீவ, நிசம்! நிசம்! அறிவோம்!

குடில, (விம்மி) எல்லா மறியு மீசனே சான்றெனக்கு
அல்லா லில்லை—

ஜீவ, அனைவரு மறிவர்.

குடில, அருமை மகனிவ னொருவன்—

ஜீவ, அறிகுவம்.

குடில, பாராய் இறைவ-(பலதேவன் மார்பினைச் சுட்டிக்காட்டி)

ஜீவ, (பலதேவனை நோக்கி.) வாராய்.

குடில, இப்புண்
ஆறுமா றென்னை? தேறுமா றென்னை?
உன்னரு ளன்றிமற் றென்னுள தெமக்கே—

ஜீவ, அம்பின் குறியன் று, யாதிது?

குடில, அடியேம்,
அன்பின் குறியிது!

ஜீவ, ஆ! ஆ!

குடில, ஆயினும்
பொல்லாப் பகைவர் — பொய்யர் — அவர்பலர் —
இல்லா தாக்குவ ரிறைவ! என் மெய்ம்மை— (அழ.)

ஜீவ, வெல்வோம் நாளை! விடு விடு துயரம்,

குடில, (தனதுள்) அறிந்திலன் போலும் யாதும்! (சிறிதுளந் தெளிந்து)

ஜீவ, அழுங்கலை.
வெறுந்துய ரேனிது? விடு! விடு! உலகில்
வெற்றியுந் தோல்வியும் உற்றிட லியல்பே:
அழுவதோ அதற்கா விழுமிய மதியோய்!

குடில, (தனதுள்) சற்று மறிந்திலன்! என்னையென் சமுசயம்!

ஜீவ, முற்றிலும் வெல்லுதும் நாளை. அதற்கா
ஐயுறேல்! அஞ்சலை! ஆயிரம் வஞ்சியர்
நணுகினும் நாளை—

குடில; நாயேற் கதனில்
அணுவள வேனு மிலையிலை யயிர்ப்பு.
நெடுநா ளாக நின்பணி விடைக்கே
யுடலோ டாவியா னொப்பித் திருந்தும்,
கெடுவேன், அவையிக் கிளர்போ ரதனில்
விடுமா றறியா வெட்கமில் பதடியாய்க்
கொடியார் சிலர்செய் கொடுஞ்சூ ததனால்
தடுமா றடைந்தென் தகைமையும் புகழுங்
கெடுமா றுகுத்த கெடுமதி யொன்றே
கருத்திடை நினைதொறுங் கண்ணிடு மணல்போல்,
உறுத்துவ திறைவ! ஒவ்வொரு கணமும்.
பகைவர்தம் படைமேற் படுகிலா வுடலங்
கெடுவேற் கென்னோ கிடைத்ததிங் கறியேன்!
அடுபோர்க் களத்தியாண் டடைந்திலன்! ஐயோ!
வடிவே லொன்றென் மார்பிடை யிதுபோற்
(பலதேவனைக் காட்டி)
படுமா றில்லாப் பாவியே னெங்ஙனம்
நோக்குவன் நின்முகம்? காக்குதி! ஐயோ!
தாக்குறு பகைவர் தம்படை யென்னுயிர்

போக்கில. நீயே போக்குதி! காக்குதி!
இரக்கமுற் றன்றிருக் கரத்துறை வாளிவ்
உரத்திடை யூன்றிடி லுய்குவன். அன்றேல்--(அழுது)

**ஜீவ,** உத்தம பத்தியி லுனைப்போல் யாரே!

**நாரா,** மெத்தவு நன்றிந் நாடகம். வியப்பே!
மற்றக் கோழைக் குற்றமெப் படிப்புண்?
போரிடை யுளதன் றியார்செய் தனர்பின்?
உணர்குவம். இப்பேச் சோய்விலாப் பழங்கதை.

(நாராயணன் போக)

**குடில,** சித்தமற் றவ்வகை தேர்ந்துள தென்னில்,
இத்தனை கருணையு மெனக்கென அரஙகி.
பாதநற் பணிவிடை படைத்தநாள் முதலா
யாதுமொன் றெனக்கா விரந்திலன். உணர்வை.
ஓதிய படியென் னுரங்கிழித் துய்ப்பையேற்
போதுமிங் கெனக்(கு)அப் போதலோ காண்குவர்
மன்னுல குள்ளா ரென்னுள நிலைமை!
உன்பெயர்க் குரிய வொவ்வோ ரெழுத்தும்
என்னுரத் தழியா எழுத்தினி லெழுதி
யிருப்பது முண்மையோ இலையோ என்பது
பொருக்கெனக் கிழித்திங் குணர்த்துதி புவிக்கே.

(முழந்தாளூன்றி நின்றழ)

**ஜீவ,** அழுவதேன்? எழு! எழு! யாரறி யார்கள்!
உன்னுளம் படும்பா டென்னுள மறியும்.
என்னநு பவங்கேள். குடிலா! ஈதோ
சற்றுமுன் யானே தற்கொலை புரியத்
துணிந்துவா ளுருவினேன். துண்ணென நாரணன்,
அணைந்தில னயினக் காலை—

**குடில,** ஐயோ!

**ஜீவ,** தடுத்தான்; விடுத்தேன்!

**குடில,** (தனதுள்) கெடுத்தா னிங்கும்!

**ஜீவ,** அரியே றன்ன அமைச்ச! பெரியோர்

தரியார் ; சகியார் சிறிதொரு சழக்கும்.
ஆயினு மத்தனை நோவதற் கென்னே ?
வாளுறை சேர்த்திலம் ! நாளையும் போர்செயக்
கருதினோம் ! உறுதி ! வெருவியோ மீண்டோம் ?

குடில, வஞ்சியர் நெஞ்சமே சான்றுமற் றதற்கு.
மீண்டதிற் குறைவென் ? ஆ ! ஆ ! யாரே
வெருவினார் ? சீ ! சீ ! வீணவ் வெண்ணம் !
இருதினம் பொருதனர் சிறுவனை வெலற்கென்
றொருமொழி கூறநம் உழையுளார் சிலர்செய்

(நாராயணன் நின்றவிடம் நோக்கி)

சதியே யெனக்குத் தாங்காத் தளர்ச்சி !
அதுவலா லென்குறை மதிகுல மருந்தே !
சென்றுநா மின்று திரும்பிய செயலே
நன்றெனப் போர்முறை நாடுவோர் நவில்வர்.
செவ்விதி லோடிநாய் கௌவிடும்: சிறந்த
மடங்கலோ வெதற்கும் மடங்கியே குதிக்கும்.
குதித்தலும் பகையினை வதைத்தலு மொருகணம்.
நாளை நீ பாராய் ! நாந்தூ தனுப்பும்
வேளையே யன்றி விரிதலை யனந்தை
யூரா ரிவ்வயி னுற்றதொன் றறியாச்
சீராய் முடியுநஞ் சிங்கச் செருத்திறம் !
மீண்டோ மென்(று)உனித் துண்டிலின் மீனென
ஈண்டவ னிருக்குக: இருக்குக. வைகறை
வரும்வரை யிருக்கில் வந்தவிவ் வஞ்சியர்,
ஒருவரும் மீள்கிலர். ஓர்கால் இக்குறி
தனக்கே தட்டிடில் தப்புவ னென்பதே
யெனக்குள துயரம். அதற்கென் செய்வோம் !
ஆதலி னிறைவ ! அஞ்சினே மென்றொரு
போதுமே நினையார் போர்முறை யறிந்தோர்.

ஜீவ, எவ்வித மாயினு மாகுக. வைகறை,
இதுவரை நிகழ்ந்தவற் றெதுகுறை யெனினும்
அதுவெலா மகலநின் றரும்போ ராற்றுதும்.

குடில, வஞ்சியா னிரவே யஞ்சிமற் றெழிந்திடில்

அதுவுமாம் விதமெது?

(சேவகன் வர.)

சேவகன். உதியன் தூதுவன்
உற்றுமற் றுன்றன் அற்றம்நோக் கினனே.

குடில, சரி! சமா தானஞ் சாற்றவே சார்ந்தான்.

ஜீவ, பெரிதே நின்மதி! ஆ! ஆ! வரச்சொல்.

(வஞ்சித்தூதன் வர!)

தூதன். தொழுதனன், தொழுதனன், வழுதி மன்னவா!

(வணங்கி)

அருளே யகமாத் தெருளே மதியா
அடலே யுடலாத் தொடைபுக ழேயா
நின்றவென் னிறைவ னிகழ்த்திய மாற்றம்
ஒன்றுள துன்வயி னுரைக்க வென்றே
விடுத்தன னென்னை யடுத்ததூ துவனு.
இன்றுநீ ரிருவரு மெதிர்த்ததில் யாவர்
வென்றன ரென்பது விளங்கிடு முனக்கே.
பொருதிட இனியுங் கருதிடில் வருவதும்
அறிகுவை! அதனை லறிகுறி யுட்கொண்
டுறுவது முன்னுணர்ந் துறவா வதற்கே
யுன்னிடில் தாம்பிர பன்னியி னின்றொரு
கும்ப நீருமோர் நிம்ப மாலையும்
ஈந்தவ னாணையில் தாழ்ந்திடில் வாழ்வை!
மதிற்றிற மதித்திறு மாப்பையேல் நதியிடை
மட்பரி நடாத்தினோர்க் கொப்பா குவையே.
ஆதலி னெங்கோ னோதிய மாற்றம்
யாதெனிற் கைதவா! வைகறை வருமுன்
தாரு நீருநீ தருவையேற் போரை
நிறுத்துவன். அல்லையேல் நின்புரம் முடிய
ஒறுத்திட உழிஞையுஞ் சூடுவன். இரண்டில்,
எப்படி யுன்கருத் தப்படி யவற்கே.

ஜீவ, நன்று! நன்று! நீ நவின்றனை. சிறுவன்
வென்றதை நினைத்தோ அலதுமேல் விளைவதைக்
கருதித் தன்னுளே வெருவியோ வுன்னை

விடுத்தன னென்பதிங் கெடுத்துரை யாதே
யடுத்திவ னுள்ளா ரறிகுவர் ஆயினும்,
மற்றவன் தந்தசொற் குற்ற நம்விடை
சாற்றுதுங் கேட்டி. தன்பொரு ளாயின்
ஏற்றிரந் தவர்க்கியாம் யாதுமீந் திடுவோம்.
அருந்திடச் சேர னவாவிய புனலும்
விரும்பிய சுரும்பார் வேம்பும் விதுகுலம்
வரும்பரம் பரைக்கா மல்லா லெனக்கே
யுளவல ; அதனா லொருவனீந் திடுதல்
களவெனக் காணுதி. மற்றுநீ கழறிய
வுழிஞையங் குளதெனில் வழுதிபாற் பழுதில்
தொச்சியு முளதென நிச்சயங் கூறே.

தூது, ஐயோ! கைதவா! ஆய்ந்திலை உன்றன்
மெய்பா மியல்பு. மிகுமுன் சேனையின்
தீரமுந் திறமும் உனதரும் வீரமுங்
கண்முற் படுமுன் கவர்ந்தசே ரற்கிம்
மண்வலி கவர்தலோ வலிதென் றுன்னினை ?
என்மதி குறித்தாய்! எடுத்தகைப் பிள்ளாய்!

குடில, நில்லாய் தூதுவ! நின்தொழி லுன்னிறை
சொல்லிய வண்ணஞ் சொல்லி யாங்கள்
தரும்விடை கொடுபோய்ச் சாற்றலே யன்றி
விரவிய பழிப்புரை விளம்புத லன்றே.
அதனா லுன்னுயி ரவாவினை யாயின்
விரைவா யேகுதி விடுத்தவ னிடத்தே.

தூது, குடிலா! உன்மனப் படியே! வந்தனம்.
மருவிய போரினி வைகறை வரையிலை.
இரவினில் வாழுமின் இவ்வா ணகத்தே.

(தூதுவன் போக)

குடில, தூதிது சூதே, சொன்னேன் அன்றே ?

ஜீவ, ஏதமில் மெய்ம்மையே யாயினு மென்னை ?
நீருந் தாரும் யாரே யளிப்பர் ?
எனவோ வவைதாம் ? யாதே வரினும்

மனவலி யொல்கலே. மானமே பெரிது.
சிதைவிடத் துரவோர் பதையார் சிறிதும்.
புதைபடுங் கணைக்குப் புறங்கொடா தும்பல்.
மதிகுல மிதுகா றொருவரை வணங்கித்
தாழ்ந்துபின் னின்று வாழ்ந்தது மன்று!
மாற்றார் தமக்கு மதிகுல மாலையும்
ஆற்றினீ ருடன்நம் மாண்மையு மளித்து
நாணு துலக மாளல்போல் நடித்தல்
நாணற் பாவை யுயிர்மருட் டுதலே
ஒட்டார் பின்சென் றுயிர்வாழ் தலினுங்
கெட்டா னெனப்பட லன்றே கீர்த்தி!
அதனாற் குடிலா! அறிகுதி துணிபாய்,
எதுவா யினும்வரில் வருக. ஒருவனை
வணங்கியா னிணங்குவ னெனநீ மதியேல்.

(எழுந்து)

வருவோம் கொடியில். மனோன் மணிநங்குலத்
திருவினைக் கண்டுளந் தேற்றி மீள்குவம்.
கருதுவ பலவுள. காணுதும்.
நீ யதுகா றிவ்வயி னினிதே

(ஜீவகன் போக)

குடில, கருதுதற் கென்னே! வருவது கேடே.
தப்பினை யிருமுறை. தப்பிலி நாரணன்
கெடுத்தான் பலவிதம். மடப்பயல் நீயே

(பலதேவனை நோக்கி)

ஆதற்கெலாங் காரணம்.

பலதே, அறிகுவை, ஒருவன்
இதுபோல் வேலுன் னெஞ்சிடை யிறக்கிடில்.

குடில, உன் நடக் கையினால்.

பலதே, உன்நடக் கையினால்!
மன்னனைக் குத்திட உன்னினை: ஊழ்வினை
யென்னையே குத்திட இசைந்தது: யார்பிழை?

குடில, பாழ்வாய் திறக்கலே. ஊழ்வினை! ஊழ்வினை!
பகைக்கலே யெனநான் பலகாற் பகர்ந்துளேன்.

பலதே, பகையோ? பிரியப் படுகையோ? பாவி
குடில, பிரியமும் நீயும்! பேய்ப்பயல்! பேய்ப்பயல்!
எரிவதென் னுளமுனை யெண்ணுந் தோறும்.
அரியவென் பணமெலா மழித்துமற் றின்று—
பலதே, பணம்பண மென்றேன் பதைக்கிறாய் பிணமே!
நிணம்படு நெஞ்சுடன் நின்றேன். மனத்திற்
கண்டுநீ பேசுதி! மிண்டலை வறிதே!

(பலதேவன் போக)

குடில, விதி யிது! இவனுடன் விளம்பி யென்பயன்?
இதுவரை நினைத்தவை யெல்லாம் போயின!
புதுவழி கருதுவம்! போயின போகுக! (மௌனம்)
எதுவுமிந் நாரண னிருக்கில்,
அபாயம். ஆ! ஆ! உபாயமிங் கிதுவே. (2)

(குடிலன் போக)

நான்காம் அங்கம்: ௩-ம் களம்

முற்றிற்று.

# நான்காம் அங்கம்

## ௧-வது களம்

இடம்: அரண்மனையி லொருசார். காலம்: மாலை.

ஜீவகனுங் குடிலனும் மந்திராலோசனை : பலதேவன் ஒருபுறம் நிற்க.

(நேரிசை ஆசிரியப்பா)

ஜீவகன் ஆதி யின்னதென் றோதுதற் கரிய
வழுதியின் தொழுகுல வாணு ளோரிரா
எனமதிப் பதற்கு மிருந்ததே! குடில!
இத்தனை கே(டு)இன்(று) எங்ஙனம் விளைந்தது?
சற்று மறிந்திலேன் தையலர் புகலுமுன்.
மாற்றார் நமது மதிற்புறத் தகழைத்
தூர்த்தா ரெனப்பலர் சொல்லுவ துண்மைகொல்!

குடிலன் ஓரிட மன்றே. உணர்ந்திலை போலும்.
(தனதுள்) வேரறக் களைகுதும். இதுவே வேளை.

ஜீவ, என்னை! என்னை!

குடில, மன்னவா! யானிங்
கென்னென வோதுவன் இன்றையச் சூது?

ஜீவ, மருவரு மதிலுள கருவியென் செய்தன?

குடில, கருவிக ளென்செயுங் கருத்தா இன்றியே!

ஜீவ, காவ லில்லைகொல்? சேவகர் யாவர்?

குடில, ஏவலின் படியா மெண்ணூ யிரவர்
ஆதியர் காவலா ஆக்கியே யகன்றோம்.

ஜீவ, ஏதிது பின்னிவ ரிருந்துமற் றிங்ஙனம்?

குடில, இருந்திடி லிங்ஙனம் பொருந்துமோ இறைவ!

ஜீவ, செவ்விது! செய்ததென்?

குடில, எவ்விதஞ் செப்புகேன்!
நாரணர் காவலின் நாயக ராக்கினும்.
போரிடைக் கண்டனை நாரணர் தம்மை.

ஜீவ, மெய்ம்மை! கண்டனம். விட்டதென் காவல்?

குடில, ஐய ! யா னறிகிலன. அவரிலும் நமக்கு
மெய்ம்மையர் யாவர் ? வேலியே தின்னில்
தெய்வமே காவல் செய்பயிர்க் கென்பர்.

ஜீவ, துரோகம் ! துரோகம் !

குடில, துரோகமற் றன்று !
விரோதம் ! அடியேன் மேலுள விரோதம்.
திருவடி தனக்கவர் கருதலர் துரோகம்.

ஜீவ, கெடுபயல் ! துரோகம் ! விடுகிலன் சிறிதில்.

குடில, மடையன் ! ஐயோ ! மடையன் ! சுவாமீ
எலிப்பகை தொலைக்க இருந்ததன் வீட்டில்
நெருப்பினை யிடல்போ லன்றோ நேர்ந்தது.
விருப்பமற் றவர்க்குன் வெகுமதி யாயின்,
திருத்தமா யொருமொழி திருச்செவி சேர்க்கில்
அளிப்பையே களிப்புட னமைச்சுந் தலைமையும் !
அத்தனை யன்புநீ வைத்துளை ! (அழுது)

ஜீவ, ஆ ! ஆ !
எத்தனை துட்டன் ! எண்ணிலன் சற்றும் !

குடில, ஐயோ ! எனக்கிவ் வமைச்சோ பெரிது ?
தெய்வமே யறியுமென் சித்த நிலைமை !
வெளிப்பட வொருமொழி விளம்பிடில் யானே
களிப்புட னளிப்பனக் கணமே யனைத்தும்.
விடுவேம் அதற்கா வேண்டிலெம் முயிரும் !
போர்முகத் திங்ஙனம் புரிதலோ தகுதி ?
(பலதேவன் மார்பைக் காட்டி.)

ஜீவ, யார் ? யார் ? நாரணன் ? (பலதேவனை நோக்கி.)

பலதே, ஆம் ! அவ னேவலில்
வம்பனங் கொருவன்—

ஜீவ, நம்பகை யன்றுபின் !

குடில, நின்பகை யன்றுமற் றென்பகை யிறைவ !

ஜீவ, உன்பகை யென்பகை ! ஓ ! ஓ ! கொடியவன் !
செய்குவ னிப்போ தேசிரச் சேதம் !

இடங்குழம் பியதிங் கிதனாற் போலும் ?

குடில, அடங்கலு மிதனா லைய! அன்றேல்,
இடப்புறம் வலப்புறம் யாதே குழம்பும் ?
மடப்பயல [illegible] ான! மன்ன! நம மானம
ஒருமொழி யல்லா திருமொழி வாயின்
வெருவர வெம்படை வெல்லுவ தெங்ஙனம் !

ஜீவ, அழைநா ரணனை. (முதற்சேவகனை நோக்கி)

முதற்சேவ, அடியேன்

ஜீவ, நொடியில். (சேவகன் போக)
பழமையும் பண்புநாம் பார்க்கிலம்: பாவி!
இத்தனை துட்டனோ? ஏனிது செய்தான் ?

குடில, சுத்தமே மடையன்! சுவாமீ! பொறுத்தருள்.
என்னதே யப்பிழை. மன்ன நீ! காக்குதி!
வருபவை யுன்றிரு வருளால், வருமுன்
தெரிவுறு மறிவெனக் கிருந்தும், திருவுளம்
நிலவிய படியே பலதே வனைப்படைத்
தலைவனா யாக்கிடச் சம்மதித் திருந்தேன்.
எனதே யப்பிழை, இலதே லிவ்விதம்
நினையா னிவனுயிர் நீங்கிடப் பாவி!
அதன்பின் னுயினு மையோ! சும்மா
இதமுற விராதுபோர்க் களமெலாந் திரிந்து
கடிபுரிக் காவற் படைகளுந் தானுமாய்
இடம்வல மென்றிலை: இவுளிதே ரென்றிலை:
கடகய மென்றிலை: அடையவுங் கலைத்து,
கைக்குட் கனியாய்ச் சிக்கிய வெற்றியை— (விம்மி)

ஜீவ, கண்டனம் யாமே.

குடில, காலம! காலம!

ஜீவ, கொண்டுவா நொடியில் (உ-ம் சேவகனை நோக்கி)

உ-ம் சேவ, அடியேன்! அடியேன்-
(உ-ம் சேவகன் போக)

குடில, சென்றது செல்லுக. ஜயிப்போம் நாளை.
ஒன்றுநீ கேட்கி லுளறுவ னுயிரம்.

கெடுநா வுடையான். கேட்டினி யென்பயன்?

ஜீவ, விடுவே மல்லேம். வெளிப்படை கேட்பதென்?
எழுமுன் னவன்கழு வேறிடல் காண்குதும்.

குடில, தொழுதன னிறைவ! பழமையன்! பாவம்!
சிறிதுசெய் கருணை. அறியான்! ஏழை!

ஜீவ, எதுவெலாம் பொறுக்கினு மிதுயாம் பொறுக்கிலம்.
எத்தனை சூதுளான்! எத்தனை கொடியன்!

குடில, சுத்தன்!

ஜீவ, சுத்தனோ? துரோகி! துட்டன்!

(நாராயணன் உள்ளே வர)

இட்டநங் கட்டளை யென்னையின் றுனக்கே?

(முருகன் முதலியோர் வாயிலில் நிற்க)

நாராயணன். எப்போ திறைவ!

ஜீவ, இன்றுபோர்க் கேகுமுன்!

நாரா, அப்போ தாஞ்ஞையா யறைந்ததொன் றில்லை.
கடிபுரி காக்கவென் றேவினன் குடிலன்.

ஜீவ, குடிலனை யாரெனக் கொண்டனை, கொடியாய்!

நாரா, குடிலனைக் குடிலனென் றேயுட் கொண்டுளேன்.

ஜீவ, கெடுவாய்! இனிமேல் விடுவாய் பகடி!
குடிலனென் னமைச்சன்.

நாரா, கெடுநா ளறிவன்!

ஜீவ, நானே யவனிங் கவனே யானும்

நாரா, ஆனால் நன்றே, அரசமைச் சென்றிலை.

ஜீவ, கேட்டது கூறுதி.

நாரா, கேட்டிலை போனும்!

ஜீவ, கடிபுரி காத்தைகொல்?

நாரா, காத்தேன் நன்றாய்.

ஜீவ, காத்தையே லகழ்க்கணந் தூர்த்ததென் பகைவர்?

நாரா, தூர்த்தநுன் பகையல. துரத்திய படைப்பிணம்.
பார்த்துமேற் பகருதி.

ஜீவ, பார்த்தனம் உன்னை
ஆர்த்தபோர்க் களத்திடை. அதுவோ காவல்?

நாரா, உன்னையுங் காத்திட வுற்றனன் களத்தில்.

ஜீவ, என்னையுன் கபட நாடகம்? இனிதே!
அவனுரம் நோக்குதி. அறிவைகொல்?

(பலதேவனைக் காட்டி.)

நாரா, அறிவேன்.

ஜீவ, எவனது செய்தவன்?

நாரா, அவனே யறிகுவன்.

ஜீவ, ஒன்றும்நீ யுணர்கிலை?

நாரா, உணர்வேன் )வன்பால்
நின்றதோர் வீரன்: இப் பொற்றொடி யுடையான்:
"என்தங் கையினிழி விப்படி யெனக்கே"
என்றுதன் கைவே லிவனுரத் தெற்றிப்
பொன்றின னெனப்பலர் புகல்வது கேட்டேன்.

ஜீவ, நன்றுநன் றுன்கதை!

குடில, நன்றிது நன்றே!

(பொற்றொடி காட்டி)

பூணிது நினதே! அரண்மனைப் பொற்றொடி.
காணுதி முத்திரை! வாணியுஞ் சேர்ந்துளாள்.
இச்செயற் கிதுவே நிச்சயங் கூலி.
அடியேந் தமக்கினி விடையளி. அகலுதும்.
அஞ்சிலே முடனுயிர்க் கஞ்சுவம் மானம்.
வஞ்சகர் கெடுப்பர். வந்தனம்.

(தன்முத்திரைமோதிரங் கழற்றி நீட்ட)

ஜீவ, நில்! நில்!

(நாராயணனை நோக்கி) இத்தனை சூதெலா மெங்குவைத் திருந்தாய்?
உத்தமன் போலமற் றெத்தனை நடித்துளாய்
சோரா! துட்டா! சுவாமித் துரோகி!

வாரா யமைச்ச! வாரீர் படைகாள்!

(முருகன் முதலிய தலைவரும் படைஞரும் வர)

நாரா யணனிந் நன்றிகொல் பாதகன்,
இன்றியா மிவனுக் கிட்டகட் டளையும்
நன்றியு மறந்து நன்னகர் வாயிற்
காவல் கைவிடுத்துக் கடமையிற் பிறழ்ந்தும்,
மேவருந் தொடியிதெங் கோவிலில் திருடியும்,
ஏவலர்க் கதனையிந் தேபல தேவன்
ஓவலி லுயிரினை யுண்டிடத் தூண்டியும்,
அநுமதி யின்றியின் றமர்க்களத் தெய்திக்
கனைகழற் படைபரி கரிரதங் கலைத்துச்
சுலபமா யிருந்தநம் வெற்றியுந் தொலைத்துப்
பலவழி யிராசத் துரோகமே பண்ணியும்
நின்றுளான். அதனால் நீதியா யவனை
யின்றே கொடுங்கழு வேற்றிட விதித்தோம்!
அறிமின் யாவரும்! அறிமின்! அறிமின்!
சிறிதன் றெமக்கிச் செயலால் துயரம்.
இன்றுநேற் றன்றெனக் கிவனுடன் நட்பு.

நாரா — வெருவிலேன் சிறிதும் வேந்தநின் விதிக்கே!
அறியா யாயி னிதுகா றுயும்
வறிதே மொழிகுதல்! வாழ்க நின்குலம்!

ஜீவ, — நட்பல : மக்களே யாயினென்? நடுநிலை
யற்பமு மகலோம். ஆதலி லிவனை

(படைத்தலைவரை நோக்கி)

நொடியினிற் கொடுபோ யிடுமின் கழுவில்!

முருகன். — அடியேம். நொடியினி லாற்றுது மாஞ்ஞை.
குடிலரே வாரும்!

ஜீவ, — மடைய னிவன்யார்?

முருகன். — கூறிய பலவும், குடிலரோ டொவ்வும்.
வேறியார் பிழைத்தனர் வேந்தமற் றின்றே?

குடில, — கேட்டனை யிறைவ! கெடுபயல் கொடுமொழி.

(காதில்) மூட்டின னுட்பகை!

நாரா, .. முருகா! சீ! சீ!

(முருகனை அருகிழுத்து)

ஜீவ, மாட்டுதிர் இவனையும் வன்கழு வதனில்

(சேவகனை நோக்கி)

முருக, ஆயிற் கழுப்பதி னாயிரம் வேண்டும்.

(வாயிற் சேவகன் வர)

சேவ, சுந்தர முனிவர் வந்தன ரவ்வறை.
சிந்தனை விரைவிற் செய்தற் குளதாம்.

ஜீவ, வந்ததெவ் வழியிவர்! வந்தனங் குடிலா!
நடத்துதி யதற்குள் விதிப்படி விரைவில்.

குடில, மடத்தனத் தாலிவர் கெடுத்தெனைப் புகல்வர்;
விடுத்திட வருளாய்!

ஜீவ, விடுகிலம்.

குடில, ஆயின்,
அடுத்துநின் றிதுநீ நடத்தலே யழகாம்.

ஜீவ, (தன் சேவகனை நோக்கி) அடைத்திடு சிறையினில், அணுகுதும் நொடியில்.

[ஜீவகன் போக]

குடில, சடையா! கொடுபோ யடையாய் சிறையில்.

[சடையன் அருகே செல்ல]

முருக, அணுகலை! விலகிநில்! அறிவோம் வழியாம்.

[சடையன் பின்னும் நெருங்க]

வேணுமோ கோணவாய் விக்கா!

சடையன். கொக் கொக்! [விக்கி]

முருக, கூவலை! விடியுமுன் கூவலை!

சடையன், கொக் கொக்-

சேவகர் யாவரும். சேவலோ! சேவலோ! சேவலோ! சேவலோ!

[கைதட்டிச் சிரித்து]

குடில, ஏதிது? இங்ஙனம் யாவரு மெழுந்தார்!
வீதியிற் செல்லலை. வீணர்! அபாயம்!
ஒழிகுவ மிவ்வழி! வழியிது! வா! வா!

[குடிலனும் பலதேவனும் மறைய]

சேவகரிற்சிலர். பிடிமின் சடையனை!

[சடையனும் குடிலன் சேவகரும் ஓடிட, சில படைஞர் துரத்திட, சில ரார்த்திட]

மற்றைய சேவகர். பிடிமின்! பிடிமின்!

சேவகரிற்சிலர். குடிலனெங் குற்றான்?

குடிலன், கொல்வரே! ஐயோ!

[நன்றாய் மூலையில் மறைய]

சேவகரிற்சிலர். விடுகிலங் கள்வரை!

மற்றைய சேவ, பிடிமின்! பிடிமின்!

[கூக்குரல் நிரம்பிக் குழப்பமாக]

நாரா, முருகா! நிகழ்பவை சரியல சிறிதும்.

[ஒரு திண்ணையி லேறிநின்று] அருகு நில். சீ! சீ! அன்பரே அமைதி!

[குழப்பங் குறைந்து அமைதி சிறிது பிறக்க]

முருக, அமைதி! கேண்மின்!

முதற்சேவகன். அமைதி! அமைதி!

நாரா, நல்லுயிர்த் துணைவரே! நண்பரே! ஒருமொழி
சொல்லிட, வாசை! சொல்லவோ! [குழப்பந் தீர]

சேவகரிற்சிலர். சொல்லுதி.

[சிறிது சிறிதாய்ப் படைஞர் நெருங்கிச் சூழ]

சேவகர் யாவ, சொல்லாய்! சொல்லாய்! பல்லா யிரந்தரம்!

நாரா, நல்லீர் மிகவும் அல்லா திங்ஙனம்
முன்பி னறியா வென்போ லிகள்மேல்
அன்புபா ராட்டினர். அநேக வந்தனம்! [கை கூப்பி]

சேவகர். அறியா ருனையார்? அறிவார் யாரும்.

[முற்றிலும் அமைதி பிறக்க]

நாரா, அறிவீ ராயினும் யானென் செய்குவேன்?
என்செய வல்லவன்! என்கைம் மாறு!
பாத்திர மோநும் பரிவிற் கித்தனை?

சேவகர். காத்தனை! காத்தனை! காவற் கடவுள்நீ!

நாரா, கெட்டார்க் குலகி னட்டா ரில்லை!
ஆயினும், வீரர்நீ ராதலின், நும்முடன்
ஈண்டொரு வேண்டுகோ ளியம்பிட வாசை
அளிப்பிரோ வடியேன்? [படைஞர் நெருங்கிச் சூழ]

சேவகர். அளிப்போ முயிரும்,

குடில, (பல தேவன் காதில்] ஒளித்ததிங் குணர்வனோ? ஓ! பல தேவ!

நாரா, ஒருதின மேனும் பொருதுளே னும்முடன்
கருதுமி னென்னவ மானமுஞ் சிறிதே.

சேவகர்: உரியதே யெமக்கது. பெரிதன் றுயிரும்!

(யாவரும் கவனமாய்க் கேட்க)

குடில, [தனதுள்]எரியிடு வானோ இல்லிடை? ஐயோ!

நாரா, அத்தனை யன்புநீர் வைத்துளீ ராயின்
என்மொழி தனக்குநீ ரிசைமின். எனக்காத்
தீதே யாயினுஞ் செமித்தருள் புரிமின்!

சேவ, யாதே யாயினுஞ் சொல்லுக!

நாரா, சொல்லுதும்!
போர்க்களத் துற்றவை யார்க்கும் வெளிப்படை.
ஊர்ப்புறத் தின்ன முறைந்தனர் பகைவர்.
நாற்புற நெருப்பு: நடுமயிர்த் தூக்கின்
மதிகுலக் கொழுந்தாம் மனோன்மணி நிலைமை.
இதனினு மபாயமிங் கெய்துதற் கில்லை.
நுந்தமிழ் மொழியு மந்தமில் புகழுஞ்
சிந்திடும்: சிந்திடும் நுஞ்சுதந் தரமும்.
இத்தகை நிலைமையி லென்னைநுங் கடமை?
மெய்த்தகை வீரரே! உத்தம நண்பரே!
எண்ணுமின் சிறிதே! என்னைநந் நிலைமை!
களிக்கவுங் கூவவுங் காலமிங் கிதுவோ?
வெளிக்களத் துளபகை, வீண்கூக் குரலிதைக்
கேட்டிடிற் சிறிதுங் கேலியென் றெண்ணார்;
கோட்டையுட் படைவெட் டேயெனக் கொள்வர்.
பெரிதுநம் மபாயம்! பேணி யதற்குநீர்
உரியதோர் கௌரவ முடையராய் நடமின்.
விடுமின் வெகுளியும் வீண்விளை யாட்டும்.
படையெனப் படுவது கரையிலாக் கருங்கடல்.
அடலோ தடையதற்கு? ஆணையே யணையாம்.
உடைபடி னுலகெலாங் கெடுமொரு கணத்தில்.

கருமருந் தறையிற் சிறுபொறி சிதறினும்
பெருநெருப் பன்றோ? பின்பார் தடுப்பார்.
அதனா லன்பரே! ஆணைக் கடங்குமின்,

குடில, (மூச்சுவிட்டு) ஆ!

நாரா, இதுபோ லில்லை யெனக்குப காரம்
இரங்கேன். அடங்குமின்! இரங்குமி னெமக்கா!

க-ம் சேவ, நாரா யணரே! நவின்றவை மெய்யே!
ஆரே யாயினுஞ் சகிப்ப ரநீதி!

நாரா ஏதுநீ ரநீதியென் றெண்ணினீர்? நண்பரே!
ஓதிய வரச னாணையை மீறி
யெனதுளப் படிபோர்க் கேகிய வதற்கா
மனுமுறைப் படிநம் மன்னவன் விதித்த
தண்டனை யோவநி யாயம்? அலதியான்
உண்டசோற் றுரிமையு மொருங்கே மறந்துமற்
றண்டிய வரச குலத்திற் கபாயம்
உற்றதோர் காலை யுட்பகை பெருக்கிக்
குற்றமில் பாண்டிக் கற்றமில் கேடு
பண்ணினே னென்னப் பலதலை முறையோர்
எண்ணிடும் பெரும்பழிக் கென்பெய ரதனை
யாளாக் கிடநீர் வாளா முயலலோ
யாதே யநீதி? ஓதுமின். அதனால்
என்புகழ் விரும்புவி ராயின், நண்பரே!
ஏகுமி னவரவ ரிடத்திற் கொருங்கே!

க-ம் சேவ, எங்கினி யேகுவ மிங்குனை யிழந்தே?

உ-ம் சேவ, உன்கருத் திருப்பிற் குரியதோ விவ்விதி?

நாரா, கருத்தெலாங் காண்போன் கடவுள், விரித்த
கருமமே யுலகங் காணற் குரிய.
ஒருவனே அலதிவ் வுலகமோ பெரிது?
கருதுமின் நன்றாய். காக்குமின் னரசனை.
செல்லுமின். நில்லீர்! செல்லிலென் றனக்கு
நல்லீர் மிகவும்!

சேவகர். நாராயணரே!

உமக்காங் கொடிய கழுமர மெமக்கும்
நன்றே யென்றே நின்றே மன்றிக்
கெடுதியொன் றெண்ணிலம். கொடுமதற் கறுமதி.

நாரா, தென்னவன் சிறைசெயச் செப்பினன்: அதனால்
இன்னம் பிழைப்பே னிக்கழு, உமக்கியான்
சொன்னவா றடங்கித் துண்ணென வேகில்.
இல்லையே லெனக்கினி பெய்துவ தறியேன்.
வல்லைநீர்! செல்லுமின்! செல்லுமின்! வந்தனம்.
செல்லுமின்! சத்தியம் செயிக்கும்! செயிக்கும்!
நல்லது! நல்லது! (படைஞர் விடைபெற்றுப் போக)

முருக, நாரா யணரே!
நுஞ்சொ லென்சிரம். ஆயினும் நுஞ்செயல்
சரியோ வென்றெனக் குறுவதோ ரையம்.
சத்தியம் செயிக்கு மென்றீர். எத்திறம்?
குடிலன் றனக்கநு கூலமா யனைத்தும்
முடிவது கண்டும் மொழிந்தீர் முறைமை!

நாரா, பொறு! பொறு! முடிவி லறிகுவை.

முருக, முடியுந்
தருணம் யாதோ? மரணமோ என்றால்,
மரண மன்றது: மறுபிறப் பென்பீர்.
யாதோ வுண்மை?

நாரா, (இருவரும் நடந்து) ஓதுவம், வாவா!
நன்றிது தீதிது வென்றிரு பான்மையாய்த்
தோற்றுதல் துணிபே. அதனால்
தேற்ற மிதேயெனச் செய்கநல் வினையே. (1)

(நாராயணனும் முருகனும் சிறைச்சாலைக்குப் போக)

பலதே, என்னையுன் பீதி? எழுவெழு. இவர்க்குன்
பொன்னே பொருட்டு?

(பலதேவனுங் குடிலனும் வெளியே வந்து)

குடிலன். போ! போ! மடையா
உன்னினம். சூதே.

பலதே, உன்குணம். நாரணன்
சொன்னது கேட்டிலை?

குடில, சொல்லிற் கென்குறை?
முன்னினும் பன்னிரு பங்கவன் துட்டன்.

(சேவகன் போக)

சேவகன். மன்னவ னழைத்தா னுன்னைமற் றப்புறம்.

குடில, வந்தன மீதோ! சுந்தரர் போயினர்?

சேவ, போயினர்.

குடில, ஓ! ஓ! போ - இதோ வந்தோம்.

(சேவகன் வர)

(தனதுள்) ஆயின தென்னையோ வறிகிலம். ஆயினுஞ்
சேயினு மெளியேன் திரும்பவும் நொடியே. (2)

(குடிலனும் பலதேவனும் போக)

நான்காம் அங்கம்: ௪-ம் களம்

முற்றிற்று.

# நான்காம் அங்கம்

## ௫-ம் களம்.

**இடம் :** *அரண்மனையி லொருசார்.* **காலம் :** *மாலை.*

*ஜீவகனும் சுந்தரமுனிவரும் மந்திராலோசனை.*

(நேரிசை ஆசிரியப்பா)

**சுந்தரர்.** வளையும்வேய் நிமிரும் ; வளையா நெடுமரங்
கிளையுடன் கெடுமே கிளர்காற் றதனில் !

**ஜீவகன்.** முளையுமோர் மரமோ? முனிவ! புல்லினம்!
களைகுவர், களைகிலர் காழ்பெறுந் தருக்கள்.
சேணுயர் தேக்கு திசையெறி சூறையில்
ஆணிவே ருடனெழுந் ததிர்ந்தசைந் திறினும்
பேணுவ ரதனைப் பெரியோர்! யாரே
காணுவர் காழறு நாணமில் நாணலை?
ஒருயிர்ப் பேறு முண்டே லடிகாள்!
போரிடைப் போக்குவன் ; புகழெனக் கதுவே!

**சுந்தர,** பொறு பொறு! ஜீவக! வெறுமொழி புகலேல்!
அரியது செய்வதே யாண்மையும் புகழும்!
அரிதுயிர் தரித்தலோ மரித்தலோ அறைதி.
வேட்டையா ரோட்டிட வெருவுதீக் குருவி*
நீட்டிய தன்சிர நீள்மணற் புதைத்துத்
தனதுகண் காணாத் தன்மையர் பிறருந்
தனதுடல் காணா ரெனநினை வதுபோல்
என்னையிம் மயக்க மன்னவ! உனக்கும்!
சிறுபசி தாங்காச் சிறுமையர் பற்பலர் ;
அறவழி யிதுவென அறியாக் கயவர் ;
பிறர்பொருள் வெளவியும் பிறவுயிர் கவர்ந்தும்
அலையுந் தீமைய ரநேகர், அகப்படின்
மலைவற மரணமும் வெருவார் மான,

*Ostrich.

கலக்கமொன் றின்றிக் கழுவே றிடுதல்
புலப்படக் கண்டுளா யிலக்கமின் முறையே.
தூரத்திடுந் துயர்க்கணம் வருத்திடுங் காலை
மரித்தலோ வவையெலாஞ் சகித்தலோ தகுதி?
தன்னுயி ரீவர் தக்கோர் சார்ந்த
மன்னுயிர் காத்திடு மார்க்கமற் றகைதல்
வார்கடன் முகட்டில், மாநிதி வழிஞர்
ஆர்கலன், அலையெறி புயல்கா லாதியாற்
சேர்திசை திரிந்து தியங்குமேல், மீகான்
களமுங் காலமுங் கருதித் தனக்குறு
தளர்வுபா ராட்டுதல் தவிர்த்து, சாய்ந்து,மற்
றெதிருறு காற்றிற் கிசைவுற வதிர்ந்து,
தன்றிசை செல்லத் தக்ககால் வரும்வரை
சென்றொரு கரைசேர்த் தொன்றுவ னல்லால்,
உவப்புறு நிதிகெட வுழைபுளார் களும்பரி
தவித்திட மரக்கலந் துறப்பனோ சாற்றாய்.
தக்கோர் செயலெலாந் தமக்கா வலவே!
முக்கியம் புகழோ தக்கவுன் கடமையோ?
அதனால் ஜீவக! அகற்றநின் னினைப்பு.
மதிகுலம் வந்த மதிவலோர் பலரும்
செலாவழி நின்றிமிற் செலுத்தினர்; நீங்காய்
உலர்விய சுழல்காற் றொடொரு சுழியிடைப்
பட்டனை; நம்பிய பாய்மரம் பழுது.
விட்டிடக் கோட்டைபாம் வெளிக்கட லோட்டம்.
மண்டிய பெருங்காற் றடங்கும் வரையும்
அண்டையி லானதோர் கைவழி யதனில்
ஒண்டுநீ பொறுத்தி யுன்றொன் னகராந்
துவாரக சாந்தத் துறைபோய்
நிவர்தமா நிலைபெற லேநெறி முறையே. (1)

ஜீவ. என்குல முனிவ! இயம்பிய மாற்றம்
நன்கே. உன்ற னியைபிற் கென்செய!
கழுமரக் கதையதைக் கண்டேன் இன்றே.
பழுதுபாய் மரமெனப் பகர்ந்தது முண்மை!
வழுவெனக் கண்டது மாற்றினர். அநேக

வந்தனம் வந்தனம்! ஆயினு மொருசொற்
சிந்தையிற் சேர்த்தெனைத் தெருட்டிட வேண்டும்
வேற்றுமை யுருவாய் விளங்கிய காலங்
காற்றினுங் கடுகிய கடுநடை யுடைய
தன்றோ? அதிலகப் பட்டார் மூழ்கிச்
சென்றொழி கின்றார்! சிறிதுசிந் தித்து
நிற்பரேற் பெரிதும் பிற்பட் டொழிவர்.
ஆதலா லடிகாள் பூதலத் துயர்ந்த
மேதையின் மிகுத்த மானிடர்க் கரசராய்
வந்தவர், தந்தமக் குற்ற மதித்திற
மெட்டிய மட்டுங் குற்றம் விடுத்துக்
கால கதிக்கனு கூலமாய் நவீன
சீர்பல திருத்தி யோரியல் புதிதா
நாட்டித் தமது நாட்டுளோர் சுகம்பா
ராட்டில ரேலவ ராண்டநாட் கெல்லை
காட்டுமோ கொடிய காலக் கரப்பே!
இவ்வழி தனக்கெனத் துணிந்ததோ ரியல்பே
யவ்வா சனுக்காம் யாக்கை. அஃதின்
அழிவே யவன தொழிவாம். அதனால்
எல்லா மறிந்த விறைவ! இவ் விடத்தியான்
பல்லா யிரநாட் பரிவுட னுழைத்தே
அமைத்தவிப் புரியுஞ் சமைத்தவிவ் வரணும்
நன்றே யாயினு மாகுக: அன்றிப்
பொன்றினும் பொன்றுக: பொறித்தவென் னரசிய
மற்றவை தம்மொடு மாண்டிடும்: மாண்டபின்
அற்றதோர் கவந்தம் அமர்க்களத் தாடும்
பெற்றிபோல் மூச்செறி பிணமா யானும்
நடித்தலோ வன்றிரு வடித்தா மரையைப்
பிடித்ததற் கழகாம் பேசாய் விடுத்தே!

சுந்தர,

எடுத்ததன் முயற்சி யாதே யாகுக!
முடித்திடு முன்ன ரடுத்ததன் மதியாற்
றீங்கெனத் தேர்ந்திடி னங்கவற் றட்பின்
வாங்கலே யார்க்கு மாம்பணி யென்ப.
தீமையை விடற்கு வேளைசிந் திப்போர்

செய்மை புணிமனை திரும்பா ரொப்பர்.
ஆதலால் ஜீவக! நீ நினைவ வருதற்
கியாதோ ரையமு மில்லை தொடரியல்
எனவின் றெய்திய வற்று லுனது
மனத்திடை மயக்கற மதித்துளை யாயின்,
ஒழுங்கா மிவையெலா மொழித்தியான் குறித்த
மருங்கே யணைந்து வாழலே கருமம்.
வேறிலை தேறு மார்க்கம்.
கூறுதி யதனு னுன்மனக் கோளே. (2)

ஜீவ, ஐய! யா னுரைப்பதென்? அடுத்தவை இவையெலாம்
கைவிடி லென்னுயிர் கழியும். அதனில்
இன்றியான் பட்ட விகழ்ச்சி முழுதும்
பொன்றிடப் பொருதுபின் பொன்றுத லன்றோ
சிறப்பது செப்புதி! சிறியே னொருசொல்
மறுத்தது பொறுத்தருள் மாதவக் கொழுந்தே!

சுந்தர, சங்கரா! சற்றோ தாதான் மியபலம்!
வெங்கரா பிடித்தவை விடினும் விடுமே!
நல்லது ஜீவக! நண்டெனும் புல்லிய
அற்பமாஞ் சிற்றுயி ரரியதன் னுடலையும்
பிற்கிளைக் கிரையென வீந்தவை பேணல்
கண்டும் புகழிற் கொண்டனை பிராந்தி.
இவ்வுயி ரியலுல கியற்கையென் றெண்ணினேன்.
செவ்விதின் நின்னிலை தேர்ந்தபின் னையம்
வருவது. அதனால், மதிகுலம் வந்த
ஒருமலர் நின்னுழை யுள்ளது: தமிழர்
ஆடவோர் யார்க்கு மஃதுரித் தாம்: நீ
காவல னாகிற் காப்பதெங் கடனே.

ஜீவ, இதுபோ லில்லை யடிகள் செய்யு
முதவி. தமியேற் குளதுய ரிதுவே.
கண்மணி தனைபெணிப் புண்படு முள்ளம்
அருளுதி காக்கு முபாயம்,
இருணிறை யிடுக்கணுக் கிசைந்திடு மருந்தே. (3)

சுந்தர, நல்லது! கேட்டி! சொல்லுதும், உரியநீர்

விட்டான் முதலையும், விரும்பிய திலகப்
பட்டாற் களிறும் பலமில வாகி
விடுமென வறிந்த கெடுவினை யாளர்
தொடர்பினால், அவரிடு தூண்டிலிற் சிக்கி
யிடமற பெயர்ந்தழி, எடுத்தவெவ் வினைக்குங்
கேடுமுன் கருதிக் கோடலே முறையெனும்,

அறிவோர் மொழியயர்க் திறமாப் பகத்துட்
கொண்டுநீ நின்றதைக் கண்டிக் கடிபுரி
தொட்டென் னுறையுள் மட்டுமோர் சுருங்கை
அதிரக சியமா யமைத்துளேன். அவ்வழி,
சதமென நம்புமிச் சாலி புரமும்,

அதன்புற மூன்றிய அடர்புலப் படையும்,
அறிந்திடா வகையவை கடந்துசென் றுன்னை
மறந்திடா மாபதி யடைந்திடச் செயுமே.

ஜீவ, தேவரீர் செய்யுந் திருவரு ளுக்குமா
றுவது முளதோ? ஆ! ஆ! அடிகாள்!

வழுதியர் பலர்பலர் வழிவழி காக்கும்
முழுமதித் தொழுகுலத் தெய்வநீ போலும்.
பழுதற நீயிவண் பகர்ந்ததோர் வழியிது
திருத்திட எடுத்த வருத்தமெத் தகைத்தே!

சுந்தர, நல்லது! முகம னவின்றனை. நிற்க

சொல்லிய சுருங்கை யுனக்குமிவ் விடுக்கணி
லுதவுமோ வன்றோ உரைக்குதி விரைந்தே.

ஜீவ, அடியே னுனை திருவடி யறியும்.
கடிபுரி விடினுயிர் நொடியுமிங் கிராது.
பாண்டியர் குலமெனும் பாற்கட லுதித்த

காண்டகு கன்னியை யிவ்வழி யுன்திரு
உளப்படி கொடுபோ யளித்தரு ளுதியேல்,
இந்துவின் குலமெனு மூர்திய பெயர்போய்ச்
சுந்தரன் குலமெனச் சந்ததம் வழங்கும்.
நீங்கா திதுகா றென்னுளம் நிறைந்த
தாங்காப் பெருஞ்சுமை தவிர்தலாட், யானும்

ஒருமன முடையனாய் மறலியும் வெருவ
ஆற்றுவ னரும்போர். அதனிடை யமபுரம்
ஏற்றுவ னெங்குலந் தூற்றிய சேரனை;
வென்றிடின் மீளுவன் அன்றெனிற் பண்டே
அனையிலாத் தனையனுக் கம்மையு மப்பனுந்
தயாநிதி! நின்றிருச் சரணமே யென்ன
வியாகுல மறவே விடுவனென் னுயிரே.

சுந்தர: விடுகிலை, யாகினும் வெளிக்கட லோட்டம்.
நடுநிசி நாமினி வருகுதும். கொடிய
கடிபுரிக் கனலிடைக் காய்ந்திடு முன்றன்
சிறகொடி மறுவிடம் பெயர்த்துதும் சிறந்த
அந்தமில் செழியனைத் தந்திட வுரித்தே.
(எழுந்து)

ஜீவ, கட்டளைப் படியே? கட்டிய கற்படை
கண்டிட வாசையொன் றுண்டடி யேற்கு.

சுந்தர, காட்டுது மின்றிரா கற்படை சேர்முறை,
ஒருவ ரொருபொரு ளறியின் ரகசியம்;
இருவ ரறிந்திடிற் பரசிய மென்ப.
கைக்கெட் டியதுதன் வாய்க்கெட் டுதற்குள்
வந்துறு மந்தமில் பிரதியந் தங்களே.
(முனிவர் போக)

ஜீவ, (தனிமொழி) வந்தனம். வந்தனம். அடிகாள்! வந்தனம்.
என்னே! என்னே! இந்நா ளியன்றவை!
கொன்னே கழிந்தன் றோரிடைக் கொட்டும்.
குருநாள் மழையொடு மிருகாற் றெறிந்த
பரவையின் பாடெலாம் பட்டதென் னுளமே.
இரவினில் வருபவை யெவையெலாங் கொல்லோ!
தாயே! தாயே! சார்வன சற்றும்
ஆயேன், எங்ஙனம் பிரிந்துயி ராற்றுவேன்?
விடுக்குமா றெவனென் விளக்கே? உன்னைக்
கெடுக்குமா றெவனிக் கிளர்போ ரிடை? அது
தடுக்குமா றெவனினி? சமழ்ப்பற் றுடலம்
பொறுக்குமா றெவனிப்! பொல்லா வல்லுயிர்
துறக்குமா றெவனுனைத் துணையற விடுத்தே?

அந்தோ! அந்தோ! என்றன் தலைவிதி!
காற்புற நெருப்புறி னளியுந் தனது
வாற்புற நஞ்சால் மாய்ந்திடு மென்ப.
நாணலன்; நரேந்திரன்; நானது போற்சுதந்
தரனல னெனிலென் தலைவிதி கொடிதே!
பிரிவென வென்னுளங் கருதிடு முனமே
பிரையுறு பாலென வுறைவதென் னுதிரம்.
நாணு துன்முகங் காணுவ தெவ்விதம்?
நடுநிசிப் பொழுது தொடுகற் படைவழி
முனிவரன் பிறருணைத் தனிவழி விடுத்திவண்
தங்குவன் யானும்! தங்குவை நீயும்!
இங்கதற் கிசையேன் இறக்கினும் நன்றே!
(மௌனம்

கற்படை யிதுதா னெப்புறத் ததுவோ!
உரைத்திலர் முனிவர். ஒளித்தனர். இஃதும்
உளதோ? இலதோ? உணர்பவர் யாவர்?
முனமே முனிவன் மொழிமணம் அன்றே
இனையவிப் போர்க்கெலா மேதுவாய் நின்றது!
கூடிய தன்றது! ஏ! ஏ! குடிலனை [சேவகன் வர
யோடியின் கழையாய்! [சேவகன் போக
உண்மையெப் படியென
நாடுமுன் வாடி நலிவ தென்பயன்?
நம்புத லெல்லாந் துன்பமே தருவது.
நம்பினேம் நாரா யணனை. அதற்கா
வம்பே செய்தான் மாயா தகனவன்.
நட்பே நமக்கின் குட்பகை யானது!
முனிவரோ முதுமகர் வித்தகன் முதலா
களவழி யிதுமுனி கட்டத் [illegible]றே
மனத்திடைக் களங்கம் வைத்துளார். அஃதவர்
விளம்பிய மொழியே விளக்கிடும். நன்றாய்
ஆரா யாமுன மனுப்பல் தவறே. [குடிலன் வர]
வாராய் குடில! மந்திரி யுனக்கு
நேர்தான் ஆரே! நிகழ்ந்தவை யறிவைகொல்?
சுந்தர முனிவரோர் சுருங்கைதொட் டுளராம்;

நந்தமை யழைத்தன ரொளித்திட வவ்வழி;
மறுத்திட, மனோன்மணி யேனுமங் கனுப்பென
ஒறுத்தவர் வேண்டினர் உரியநங் குலமுனி
யாதலி னுமென விசைந்தோம்; அவ்வழி
யாதென வினையதற் கோதா தேகினர்;
பாதிரா வருவராம். பகர்ந்தவிக் கற்படை
மெய்யோ பொய்யோ? மெய்யெனி லெவ்வயின்
உளதென வுணர்தியோ? ஒழுங்குகொல், நமது
இளவர சியையங் கனுப்புதல்?

குடில, இறைவ!
முன்னர்நா மொருநா ளிந்நகர் காண
வழைத்தோம்! அந்நாள் யாதோ பூசை
யிழைத்திட வோரறை யிரந்தனர்

ஜீவ, ஆம்! ஆம்'

குடில, அவ்வறை யெவ்வறை?

ஜீவ, அதுயா னறிவேன்.
செவ்வே வடக்குத் தேம்பொழிற் கிப்புறம்.
மறுமுறி மணவறை,

குடில, அறிவிது வெகுநலம்;

[தனதுள் ஜீவகனைநோக்கி] உறுவதந் தென்னென வுணர்ந்தனை?

ஜீவ, உணர்ந்திலேன்.

குடில, அதுவே கற்படை. அறிந்துளேன். பழுது
செயத்தகு வினைபல வாதலில் திருவுளம்
உணர்த்திலேன் முனிவ ரோதிய திதுவே.
இவ்வரண் முற்று மியற்றிய நமக்குச்
செவ்விதி னிதுவோ செய்தற் கரியது?
சுந்தரர் கமையெலாம் புந்தியற் றவரென
நொந்துநா முழைத்ததை நோக்கிடில் நகைப்பே!

ஜீவ, நந்தொழிற் பழித்தலே சிந்தையெப் பொழுதும்:
பண்டே கண்டுளோம். யாங்கோ வனுப்புதல்?

குடில, பழுதல: யானுனுங் குழவியை யிருப்ப
மல்லுயுத் தஞ்செய வல்லவர் யாரோ?

அனையினை யொருபாற் சேமமா யனுப்பிய
பிணையிலை கவலையும் பீதியும் பிறவும்.
உட்பகை வெளிப்பகை யெப்பகை யாயினென்?
கவலையொன் றிலதே லெவருனை வெல்வர்?
ஆதலான் முனிவ ரோதிய படியே
யனுப்புத லவசியங் குணப்பிர தம்மே.
ஆனா லறியா அரசகன் னியர்கள்,
தேனார் தெரியல் சூடுமுன் னிரவில்
தனிவழி யநியர்பால் தங்குதல் — ?

ஜீவ, தவறே.

குடில, முனிவரே யாயினும், அநியரே. உலகம்
பைத்தியம்; பழித்திடும்; சத்திய முணராது.

ஜீவ, மெய்ம்மை. வதுவைமுன் விதியன் றனுப்புதல்.

குடில, அனுப்பினு மதனா லாம்பய னென்னே?
மனத்துள கவலை மாறுமோ? கவலை
முன்னினும் பன்னிரு பங்காய் முதிரும்.

ஜீவ, அதுவே சரி! சரி! ஐயமொன் றில்லை.
வதுவைக் கிதுவோ தருணம்?

குடில, மன்னவ?
அடியே னறிவிப் பதுவுமிங் கதுவே!
கொடிதே நந்நிலை. குற்றமெப் புறமும்.
அடிக ளறைந்தவா றனுப்பா திருக்கில்
உட்பகைச் சதியா லொருகால் வெற்றி
தப்பிடின் நங்குல மெப்படி யாமோ?
வைப்பிட மெங்குமின்? எய்ப்பிட மெங்கே!
திருமா முனிவரோ கருணா வுடையர்.
நம்பிய தலைவரோ வம்பினர்; துரோகர்.
இத்தனை பொழுதுமங் கெத்தனை கூச்சல்!
எத்தனை கூட்டம்! எத்தனை குழப்பம்!
முருகனு நாரா யணனும் மொழிந்த
அருவருப் புரையிங் கறையேன். அவர்தாஞ்
சேவகர் குழாங்களைத் திரட்டி யென்மேல்

ஏவினர்; அதற்கவ ரிசைந்திலர். பிழைத்தேன்!
வேண்டினர் பின்னையும்; தூண்டினன் முன்னெதிர்.

ஜீவ, காண்டும்! காண்டும்! கடுஞ்சிறை சேர்த்தனை.

குடில, சேரா திவரைமற் றியாரே விடுவர்.
ஆயினுந் தலைவர் நிலைமை யிஃதே
வெல்லுவ தெலாநம் வீரமே யல்லால்
இல்லை யவர்துணை யென்பது தெளிவே.
அல்லொடு பகல்போ லல்லல்செய் கவலையும்
வீரமு மெங்ஙனஞ் சேருமோ அறியேன்.
கவலைதீ ருபாயங் கருதில், துவல்தரு
கல்லறை நன்றே கடிமண முடியின்.—
கடிமண மதற்கோ, முடிபுனை மன்னர்
வேண்டுமென் றன்றோ ஆண்டகை நினைத்துளை?
வருடக் கணக்காய் வேண்டுமற் றதற்கே.
ஒருநலங் காணி னொருநலங் காணோம்.
ஏற்ற குணமெலா மிருப்பினு மிதுபோல்
மாற்றல னுய்விடின் மனோன்மணி யென்படும்?
பிரிதலே யரிதாம் பெற்றியீர்! பிரிந்தபின்
பொருதலே யாய்விடிற் பொறுப்பளோ தனியள்!
பூருவ புண்ணிய மன்றோ மன்றல்
நேருமு னிங்ஙன நெறியிலான் றுர்க்குணம்
வெளியா யினதும்? எளிதோ விறைவ!
வேந்தராப் பிறந்தோர்க் குனைப்போற் சாந்தமும்
பிறர்துயர் பேணும் பெருமையும் ஒழியா
அறம்நிறை யகமு மறிவு மமைதல்;
பாண்டமேல் மாற்றலாங் கொண்டபின்! என்செய!
ஆண்டுகள் பழகியு மறிகிலஞ் சிலரை.
ஐயோ! இனிநா மங்கிய ராயின்
நன்று யுசாவியே நடத்துதல் வேண்டும்.
அன்றேற் பெரும் பிழை!

ஜீவ, ஆ! ஆ! சரியே!

குடில, ஆதலின், இறைவ! ஆய்விடத் தெங்கும்

ஏதமே தோன்றுவ தென்னை யிந்நிலை?

ஜீவ, அரசல வெனினமக் காம்பிழை யென்னை?

குடில, திருவுளப் பிரியம். தீங்கென் னதனில்?
உன்றன் குலத்திற் கூன்றுகோல் போன்று
முடிமன் னவர்பல ரடிதொழ நினது
தோழமை பூண்டுநல் லூழிய மியற்றும்
வீரமும் மேதையுந் தீரமுந் திறமுங்
குலமு நலமுங் குணமுங் கொள்கையும்
நிரம்பிய நெஞ்சுடைப் பரம்பரை யாளராய்
நிற்பவர் தமக்குமற் றொப்பெவ் வரசர்?
அற்பமோ ஐய! நின் னடிச்சே வகமே?

ஜீவ, என்னோ மனோன்மணிக் கிச்சை? அறிகிலேன்!

குடில, மன்னோ மற்றது வெளிப்படை யன்றோ?
அன்னவட் கிச்சை யுன்னுடன் யாண்டும்
இருப்பதே யென்பதற் கென்தடை? அதற்கு
விருத்தமாய் நீகொள் கருத்தினைச் சிந்தையிற்
பேணியே கலுழுநள் போலும். பிறர்பால்
நாணியிங் கோதாள். வாணியேல் நவில்வள்.

ஜீவ, உத்தமம்! உத்தமம்! மெத்தவு முத்தமம்!
பலதே வன்றன் நலமவள் கண்டுளாள்?

குடில, பலகால் கண்டுளாள். கண்டுளா னிவனும்.
ஆர்வமோ டலைதோ மார்பிடைப் பட்டபுண்
'மனோன்மணி மனோன்மணி', எனுமந் திரத்தால்
ஆற்றுவான் போலவே யவ்வறை யிருந்தவன்
சாற்றலுஞ் சற்றுமுன் ஜாடையாய்க் கேட்டேன்.
ஆயினும். அரச! பேயுல கென்குணம்
அறியா ததனால் வறிதே பலவுஞ்
சாற்றும். தன்னையங் கருதல்போற் பிறர்க்குந்
தோற்றும். அதனால் தூற்றுவர். அதுவும்
மாற்றலே மந்திரத் தலைவர்தம் மாட்சி.
, இறைவ! அவைக்களத் தநேக—

ஜீவ, ஓதலை. ஓதலை உனதன் றத்தொழில்.

தனைப் குரியது தந்தையே யுணருவன்.
இனையதே யென்மகட் கிந்நிலைக் கேற்பதும்.
அரசனு மாய்கினுஞ் சரியிம் முடிபு.
மிகைதெரிந் தவற்றுள் மிக்கது கொளலெனுந்
தகைமையில் தகுவது மிதுவே. அதனல்,
குடிலா! மறுக்கலை.

குடில, அடியேன். அடியேன்.

ஜீவ, இந்நிசி யிரண்டாஞ் சாம மன்றோ
முன்னாம் வைத்த முகூர்த்தம்?

குடில, ஆம்! ஆம்!

ஜீவ, செவ்விது செவ்விது! தெய்வசம் மதமே
ஆவா! எவ்வள வாறின் தென்னுளம்!
ஓவா என்றுயர்க் குறுமருந் திதுவே!
பிரிந்திட லொன்றே பெருந்துயர்.

குடில, பிரிந்துநீர்
இருந்திட லெல்லா மொருநாள். அதற்குள்
வெல்லுதும், காண்டி! மீட்குதும் உடனே.

ஜீவ, நல்லது! வேறிலை நமக்காம் மார்க்கம்.
ஒருமொழி மனோன்மணி யுடன்கேட் டிங்கேதோ
வருகுதும் அதற்குள் வதுவைக்
கமைக்குதி யவ்வா றமைச்ச ரேறே! (4)

(ஜீவகன்போக)

குடில, தப்பிலன் நாரணன். சாற்றற் கிடமிலை.
(தனிமொழி) இப்படி நேருமென் றெண்ணினர் யாவர்?
முனிவரன் வந்ததும், நணிநல நமக்கே!
மறுப்பளோ மனோன்மணி? சீசீ! மனதுள்
வெறுப்புள ளேனும் விடுத்தவ ளொன்றும்
மொழியாள். சம்மதக் குறியே மௌனம்.
அழுவாள்: அதுவும் பிரிவாற் றுமையே
யாய்விடும், அரச னுய்விலா வுளத்துள்.
நடுநிசி வருமுன் கடிமண மிவண்நாம்
முடிக்கின் முனிவன் தடுப்பது மெவ்விதம்?
ஏய்த்திட வெண்ணின னென்னையும்! பேய்ப்பயல்!

வாய்த்ததிங் கெனக்கே மற்றவன் கற்படை.
(மௌனம்)
ஊகஞ் சென்றவா றுரைத்தோம். உறுதி
யாகமற் றதனிலை யறிவதார்? உளதல
துரைப்பரோ முனிவர்? உள்ளதெனி னுரைத்தவா
றிருத்தலே யியல்பாம். எதற்கு மீதுதவும். (மௌனம்)
சென்றுகண் டிடுவம். திறவுகோ லிரண்டு
செய்த தெதற்கெலா முய்வகை யானதே!
எத்தனை திரவிய மெடுத்துளேம்! கொடுத்துளேம்
அத்தனை கொடுத்து மறிவிலாப் படைஞர்,
நன்றியில் நாய்க ளின்றஃ தொன்றும்
உன்னு தென்னையே யோட்டிடத் துணிந்தன.
என்னே நாரணன் தனக்குமிங் கிவர்க்கும்?
எளியனென் றெண்ணினேன். வழிபல தடுத்தான்
கெடுபயல் பாக்கியம், கடிமண மிங்ஙனம்
நடுவழி வந்ததும்! விடுகிலம்.
கொடியனை யினிமேல் விடுகிலம் வழிதே. (

நான்காம் அங்கம்: ௫-ம் களம்

முற்றிற்று.

---

கலித்துறை.

அரிதா நினைத்ததன் னங்கங்கள் யாவு மழிந்தபின்னும்
புரியே பொருளெனப் போற்றிய ஜீவகன் புந்தியென்னே!
பிரியாத சார்பு பெயர்ந்து விராகம் பிறந்திடினுந்
தெரியாது தன்னிலை யாணவஞ் செய்யுந் திறஞ்சிறிதே!

நான்காம் அங்கம்

முற்றிற்று.

---

| | | | |
|---|---|---|---|
| ஆசிரியப்பா | 12-க்கு | அடி | 1297 |
| வஞ்சிப்பா | 1-க்கு | ,, | 14 |
| கலித்தாழிசை | 3-க்கு | ,, | 12 |
| கலித்துறை | 1-க்கு | ,, | 4 |
| ஆக அங்கம் 1-க்குப் பா 17-க்கு | | ,, | 1327 |

# ஐந்தாம் அங்கம்

## முதற் களம்

**இடம்:** கோட்டைக்கும் வஞ்சியர் பாசறைக்கும் நடுவிலுள்ள வெளி.

**காலம்:** யாமம்.

குடிலன் தனியே நடக்க

(நேரிசை ஆசிரியப்பா)

**குடிலன்.** (தனிமொழி)

திருமணங் கெடினுந் தீங்கிலை யீங்கினி.
இருசர மின்றி யெப்போ ரிடையும்
ஏகார் மதியோர். இதில்வரு கேடென்?
ஆகா வழியு மன்றிது. சேரனை
அணைந்தவன் மனக்கோ ளுணர்ந்ததன் பின்னர்
சுருங்கையின் தன்மை சொல்லுது மொருங்கே.
இசைவனேற் காட்டுதும். இன்றேல் மீள்குதும்.
பசையிலா மனத்தன்! பணிதலே விரும்புவன்.
பாண்டிநா டாளவோ படையெடுத் தானிவன்!
தூண்டிடு சினத்தன்; தொழுதிடின் மீள்வன்.
வேண்டிய நீரும் விளைமுந்தோர் தாரும்
பாண்டில் பாண்டிலா யாண்டுகள் தோறும்
அனுப்புதும். குறையென் னதனில்? இதுவே
மனக்குறை நீக்கு மார்க்கம்—வதுவை
போயினென்? ஆயினென்? பேயன் நம்மகன்
எடுத்தெறிந் திடுவனிப் போதே நம்மொழி.
அடுத்தநம் படைஞரோ பகைவர்: அவர்நமைக்
கெடுத்தநா ரணற்கே கேளொடு கிளைஞர்.
ஆதலி னிஃதே தீதறு முறுதி.—
என்னைநம் ஊகம்! என்னைநம் ஊக்கம்!
முன்னர்யாம் அறியா இன்னநற் சுருங்கையில்
துன்னிருள் வழிதனி தொடர்ந்திவண் சேர்ந்தோம்.
ஊக்கமே பாக்கியம். உணர்விலார் வேறு
பாக்கிய மூழெனப் பகர்வதெல் லாம்பாழ்.

சாக்கியம் வேறென் ? சாத்தியா சாத்தியம்
அறிகுறி பலவா லாய்ந்தறிந் தாற்றுந்
திறமுள ஊகமே யோகம்: அன்றி
(நட்சத்திரங்களை நோக்கி) வான்கா டதனில் வழிதே சுழலும்
மீன்காள் ! வேறு முளதோ விளம்பீர் ?
மதியிலா மாக்கள் விதியென நும்மேற்
சுமத்துஞ் சுமையுந் தூற்றுஞ் சும்மையும்
உமக்கிடு பெயரு முருவமுந் தொழிலும்
அமைக்குங் குணமும் அதில்வரு வாதமும்,
யுக்திய மூகமும் பக்தியும் பகைமையும்,
ஒன்றையும் நீவி ருணரீர் !—அஃதென் ?
வென்றவர் பரசறை விளங்குவ தஃதோ !
இங்குமற் றுலாவுவன் யாவன் ? பொங்குகால்
வருந்தொறுஞ் சிலமொழி வருவ. அஃதோ
திரும்பினன்!ஒதுங்குவம். தெரிந்துமேற்செல்குவம்
(புருடோத்தமன் தனியா யுலாவி r)

(குறள்வெண் செந்துறை)

புரு,(பாட) உண்ணினைவி லொருபோது மோய்வின்றிக் கலந்திரு
முயிரே யென்றன்
கண்ணிணைக ளொருபோதுங் கண்டிலவே நின்னுருவ
காட்டாய் காட்டாய். ( )

அவத்தைபல வடையுமன மனவரதம் புசித்திடினு
மயிர்தே யென்றன்
செவித்துளைக ளறிந்திலவே தித்திக்கு நின்னுமஞ்
செப்பாய் செப்பாய். ( )

பொறிகளறி யாதுள்ளே புகும்பொருள்க ளிலையென்ப
பொருளே யுன்னை
யறியவவா வியகரணம் அலமாக்க வகத்திருந்தா
யச்சோ வச்சோ. (

(புருடோத்தமன் சற்றே யக

குடில, (தனிமொழி) மனித னலனிவன் ! புனிதகந் தருவன் !
தேவரு முளரோ ? யாதோ ? அறியேன்.
இருளிலா மொளிவிட இலங்கிய வுருவம்

மருள்தரு மதனன் வடிவே! மதனற்கு
உருவிலை யென்பர்.—ஓசையு முருவும்!—
பாடிய பாட்டின் பயனென்! அஃதோ!
நாடி யறிகுதும். நன்று நன்று.

(புருடோத்தமன் திரும்பி வர)

புரு, (பாட) புலனைக் காண்பதுவே பொருளென்னும் போதமிலாப்
புன்மை யோர்க்கிங்
குலவாதென் னுளநிறையு முனதுண்மை யுணர்த்தும்வகை
யுண்டே யுண்டே. (4)

பெத்தமனக் கற்பிதமே பிறங்குநிலை யெனப்பிதற்றும்
பேதை யோர்க்கோர்
யத்தனமற் றிருக்கவென்னு ளெழுமுனது நிலையுரைப்ப
தென்னே யென்னே. (5)

தேர்விடத்தென் னுள்ளநிறை தெள்ளமுதே யுன்னிலைமை
தேரா திங்ஙன்
ஊர்விடுத்தும் போர்தொடுத்தும் உனையகல நினைத்ததுமென்
னூழே யூழே. (6)

குடில, சேரனை யாமிது செப்பினோம்.—போரினில்
ஒருபுற மொதுங்கி யரசனை யகற்றி
நின்றதாற் கண்டிலேன். நிறைந்த காமுகன்.
ஒன்றனு கூல முரைத்தான். நன்றே
ஊரிவண் விடுத்ததும் போரிவண் தொடுத்ததும்.
எண்ணிய கொள்கைக் கிசையும் புகன்றவை.
நண்ணுதும் நெருங்கி. நல்லது! திரும்பினன்.

(புருடோத்தமன் திரும்பிவர)

புரு, (தனிமொழி) என்றுங் கண்டில மின்றுகண் டதுபோல்.
எத்தனை முகத்திடைத் தத்துறு துயரம்!
இவ்வயின் யான்வந் திறுத்தநாள் முதலாக்
கௌவையி னாழ்ந்தனை போலும்.—ஐயோ!

(குடிலன் எதிர்வர)

(குடிலனைநோக்கி) ஜடிதி! பெயரென்! சாற்றுதி! தத்க்ஷணம்!

குடில, அடியேன்! அடியேன்! குடிலன்! அடிமை

புரு. வந்ததென் இருள்வயின்? வாளிடென் னடியில்!

குடில. வெந்திறல் வேந்தநின் வென்றிகொள் பாசறை
சேர்ந்துன் னமையந் தேர்ந்து தொழுதோர்
வார்த்தைநின் திருச்செவி சேர்த்திடக் கருதி
வந்தன னடியேன்: தந்தது தெய்வம்
உன்றன் திருவடி தரிசன முடனே!
சிந்தையெப் படியோ வப்படி யென்செயல்!

புரு. செப்புதி விரைவில். செப்புதி வந்தமை!

குடில. ஒப்பிலா வீர! எப்புவ னமுநின்
மெய்ப்புகழ் போர்த்துள ததனல், இப்புவி
நீவரு முனமே நின்வசப் பட்டுத்
தாவரு மின்பந் தலையறத் துய்ப்பப்
பாக்கியம் பெற்றிலம் பண்டே யென்றுனி
யேக்கமுற் றிருந்தமை யானெடு நாளா
யறிந்துளன். இன்றுநீ யாற்றிய போரிற்
செறிந்திரு படையுஞ் சேர்தரு முனமே
முறிந்தியா மோடிய முறைமையுஞ் சிந்தையிற்
களிப்படை யாமலே கைகலந் தமையும்
வெளிப்படை யன்றோ? வேந்த! இப் புவியோர்
வெல்லிட மும்வெலா இடமும் யாவும்
நல்லவா றறிவர். நாயினேன் சொல்வதென்?
வேசையர் தங்க ளாசையில் முயக்கம்
அன்றோ இன்றவ ராற்றிய போர்முறை?
என்செய் வாரவர்? என்செய்வார்? ஏழைகள்!
நின்புகழ் மயக்கா மன்பதை யுலகம்
யாண்டு மின்றெனில், அணிதா மிந்தப்
பாண்டியு நின்பாற் பகைகொளத் தகுமே!
ஒருவா றறமே யாயினும், மருவாக்
கொற்றவர் பிழைக்காக் குற்றமில் மாக்களை
மற்றவர் மனநிலை முற்ற வறிந்தபின்
கருணையோ காய்தல்? தருமமல் லுருவே!

புரு. (தனதுள்) யாதோ சூதொன் றெண்ணினன். அறிகுவம்.
(குடிலனை நோக்கி) வேண்டிய தென்னை யதனல்? விளம்புதி.

குடில,
ஆண்டகை யறியா ததுவென்? இன்று
மாண்டவர் போக மீண்டவ ரேனும்
மாளா வழிநீ யாளா யென்னக்
கைகுவிப் பதேயலாற் செய்வகை யறியா
அடியே னென்சொல! ஆ! ஆ! விடியில்
வாளா மாளும் மனிதர் தொகுதி
யெண்ணி யெண்ணி யெரிகிற தென்னுளம்.
எண்ணுதி கருணை! இவர்க்குள் தாய்க்கொரு
புதல்வராய் வந்த பொருநரெத் தனையோ?
வதுவை முற்றுறு வயவரெத் தனையோ?
புதுமணம் புரிந்த புருடரெத் தனையோ?
நொந்த சூலினர் நோவுபா ராது
வந்திவ ணடைந்த மள்ளரெத் தனையோ?
தாய்முகம் வருந்தல் கண்டழூஉந் தன்சிறு
சேய்முக மறவாச் செருநரெத் தனையோ?
செயிருற முழந்தாள் சேர்ந்தழூஉ பாலரைத்
துயிலிடைத் துறந்த சூரரெத் தனையோ?

புரு,
சரி, சரி! இவையுன் னரசர்க் காங்கு
சாற்று தொழிற் ததென்?

குடில,
சாற்றிலென்?
போற்றான் யார்சொலும் புந்தியுஞ் சற்றும்.
அன்பிலன்: பிறர்படுந் துன்பஞ் சிறிதும்
அறியா வெறியன். அன்பொ டிம்மாலை
குறியா நீவிடு தூதையுங் கொண்டிலன்.
அண்டிய ஜீவ ராசிக ளனைத்தையும்
மண்டம ரிதில்நின் வைவாள் தனக்கே
யிரையிட லொன்றே விரதமாக் கொண்டனன்.
பித்த னொருவன் தன்னா லித்தமிழ்
நாடெலாம் வெறுஞ்சுடு காடாய் விடுமே.
ஆவ! இப்பெரும் பாவமும் பழியும்
அஞ்சினேன்; அஞ்சினேன்! எஞ்சலில் கருணை
யுருவே! அடியேற் கொருமொழி தருவையேல்
ஒருவர்க் கேனு முறுதுய ரின்றி

அரசனும் புரிசையு மரைநொடிப் போதினுன்
காதல மாமொரு கௌசலம்,
காட்டுகே னடியேன் கேட்டரு ளரசே! ( .)
(நிலைமண்டில ஆசிரியப்பா)

புரு, (தனதுள்) பாதகா! விசுவாச காதகா!
ஆ! ஹா! (சிரித்து)

குடில, அரசன் கைப்படி லாங்குளார் யாருமென்
உரைதவ றாதுன் குடைக்கீ ழொதுங்குவர்.
மங்கல மதுரையு மிங்கிவர் வழியே
யுன்னா ணைக்கீ ழொதுங்குதல் திண்ணம்.
தொல்புவி தோற்றியது தொட்டர சுரிமை
மல்கிய புவியிதி னதனால், "மன்னவன்"
என்றபே ரொன்றுநீ யீவையே யென்றும்,
நின்னாணை யின்கீழ் நின்றுநீ முன்னர்
வேண்டிய தாரொடு நேருமே யன்றிமற்
றீண்டுள எவையே யாயினும் வேண்டிடில்,
சிரமேற் சுமந்துன் றூரசா ரனந்தைக்
கோயில் வாயிலிற் கொணர்ந்துன் திருவடி
கண்டுமீள் வதுவே கதியடி யேற்காம்
பண்டிரா கவன்றன் பழம்பகை செற்று
வென்றதோ ரிலங்கை விபீஷணன் காத்தவா
றின்றுநீ வென்றநா டினிதுகாத் திடுவேன்.

புரு, சமர்த்தன் மெத்தவும்! அமைச்சதந் திரமென்?

குடில, அரசன தந்தப் புரமது சேர
யாவரு மறியா மேவருஞ் சுருங்கை
ஒன்றுள தவ்வழி சென்றிடி லக்கணங்
கைதவன் கைதியா யெய்துவ னுன்னடி.

புரு, உண்மை?
(சேவகரை நோக்கி) யாரது!

குடில, உதியன் கண்முன்
மெய்ம்மை யலாதெவர் விளம்புவர்?

(அருள்வரதன் வ )

அருள், அடியேன்!

புரு, கைத்தளை காற்றளை கொடுவா நொடியில்.

(அருள்வரதன் போக)

(குடிலனைநோக்கி) எத்திசை யுளதுநீ யியம்பிய சுருங்கை?

குடில, அணிதே! அஃதோ! சரணம் புகுந்த
எளியேற் கபய மியம்புதி யிறைவ!

புரு, அவ்வழி யோநீ யணைந்தனை?

குடில, ஆம்! ஆம்!
செவ்விதி னொருமொழி செப்பிடி னுடனே
காட்டுவ னடியேன்.

(அருள்வரதனுஞ் சேவகரும் விலங்கு கொண்டுவர

புரு, (குடிலனைச்சுட்டி) பூட்டுமின்! நன்றாய்!

குடில, ஐயோ! ஐயோ! ஓஹோ! செய்ததென்?
மெய்யே முற்றும். பொய்யிலை! பொய்யிலை!

(அருள்வரதன் விலங்கு பூட்ட)

புரு, எத்திசை யுளதச் சுருங்கை? ஏகாய்!
சித்திர வதையே செய்வேன் பிழைப்பில்!

குடில, (அழுது) தேடியே வந்து செப்பிய வடியேன்
ஓடியோ போவேன்? ஓஹோ! உறுதி
முந்தியே தந்திடில்—

புரு, மூடநின் பாழ்வாய்.
சேரன் விஜயமுந் திருடான், அறிகுதி.
(சேவகரை நோக்கி)சூரர் பதின்மர் சூழுக விருபுறம்!
(குடிலனை நோக்கி)நடவா யுயிர்நீ நச்சிடில். கெடுவாய்!

எத்திறம் பிழைப்பினுஞ் சித்திர வதையே! (2)

(யாவருஞ் சுருங்கை நோக்கிப் போக)

ஐந்தாம் அங்கம் : முதற்களம்

முற்றிற்று.

# ஐந்தாம் அங்கம்

## இரண்டாம் களம்

இடம்: கன்னிமாடத் தொருசார். காலம்: யாமம்.

சில தோழிப்பெண்களும் ஒரு கிழவியும் அளவளாவி யிருக்க.

(நிலைமண்டில ஆசிரியப்பா)

**கிழவி.** எதுக்குமிவ் விளக்கு மிச்சிறு செம்பும்
ஒதுக்கிவை அம்மா! உதவும் வழியில்.

**முதற்றோழி.** என்னடி கிழவி! சொன்னா லறிகிலை.
போம்வழி யறியோம்! போமிட மறியோம்!
மந்திரக் குளிகையோ! அந்தர மார்க்கமோ!
மூட்டையேன்? முடிச்சேன்? கேட்டியோ தோ !
காது மில்லை! கண்ணு மில்லை!
ஏது மில்லை! ஏனுயி ரிருப்பதோ!

**கிழவி.** கிழவிபேச் சேற்குமோ கின்னரக் காரிக்கு!
படும்போ தறிவை! இப் படியே பண்டு
முன்னொரு சண்டையி லுன்னைப் பெறுமுன்
ஓடினோம்—

**முதற்றோழி.** போடீ! உன்கதை யறிவோம்.

(கிழவி போ )

சிரிக்கவா? என்செய! சிவனே! சிவனே!

(நகைக் )

**உ-ம் தோழி.** அம்மணி யென்செய்தாள்? அக்காள்! அதன்பி .
'அப்படி யரசன் மீண்டான்.' செப்பாய்!

**முதற்றோழி.** எப்படிச் செப்பயான்? ஏந்திழை பட்டபா
டய்யோ! அத்துயர் தெய்வமே யறியும்!
மன்னவன் வாசல் கடந்தா னெனுமுனந்
தன்னிலை தளர்ந்தாள், சாய்ந்தாள். வாணியும்
அருகுள செவிலியும் யானுமாய் விரைவில்
தாங்கினோம், பாங்குள அமளியிற் சேர்த்தோம்.
மூச்சிலை; பேச்சிலை; முகமெலாம் வெயர்வை.

இட்டகை யிட்டகா விட்டவப் படியே.
இப்படி முடிந்ததே! இனியென் செய்வோம்!
தப்புமோ இவ்வொரு தத்துமென் றெண்ணி
ஏங்கினோம், தியங்கினோம்; பாங்கிருந் தழுதோம்.

உ-ம் தோழி. ஐயோ தெய்வமே! அப்போ தவளுயிர்
பட்டபா டெதுவோ! கட்டம்! கட்டம்!

முதற்றோழி. விதியிது! அலதிது கதையினு முளதோ?
நொந்தபுண் ணதனிலே வந்திடும் நூறிடி.
தந்தை தேறிடத் தன்துயர் மறைத்து
மகிழ்ச்சி காட்டினள், வந்ததித் தளர்ச்சி.
மூடிடில் தீயும் மூளுமும் மடங்காய்.

உ-ம் தோழி. எத்தனை வேதனை! எத்தனை சோதனை!
யாது மறியாட் கேதித் துணிபு?
ஓதிய கட்டுரை யொருமுறை யினியும்
நவிலுதி யக்காள்!

முதற்றோழி. நங்கைநன் மொழியென்
செவியிடை யினியும் மணிபோல் திகழும்!
அரசனை யடிபணிந் தொருசா ரொதுங்கி
நீக்கமி லன்பு மூக்கமுங் களிப்புங்
காட்டிய மதிமுகங் கோட்டியே நின்ற
தோற்றமென் கண்ணின் மாற்றுத லரிதே!
"என்னே இதற்கும் யோசனை யெந்தாய்!
நொன்னே வருந்தலை! கொள்கையிற் பிறழா
நீதிநம் பாலெனில் நேர்வது ஜயமே.
ஏததற் கையம்? இதுவிட் டடிமை
பெயர்வது பெரிதல. பேருல கதற்குத்
துயர்வரு மெல்லைநந் துயர்நோக் குதலோ
பெருமை! அண்ணிதே முனியிடம்! கருதிய
பிரிவோ ஒருதினம்! குருவுந் தந்தையுஞ்
சமமெனிற் சுந்தர விமலன் தன்திருப்
பாதா தாரவே போதா தோதுணை?
ஆயினு மத்தனை யவசிக மாயின்,
ஆகுக வாஞ்ஞைப் படியே! தடையிலை.

அன்னையு நின்னை யன்றிவே றறியேன்.
உன்னதே யிவ்வுடல். உன்றிரு வுள்ளம்
உன்னிய படியெலா முவப்பச் செய்குவன்.
அடிமையின் கவலையா லரசர்க் கியல்பாங்
கடமையிற் பிறழுங் கலக்கம் விலக்குவை !
அன்பாம் உன்பா லைய! உன்மகள்
வேண்டும் வரமெலாம் யாண்டுமிவ் வொன்றே''.

**உ-ம் தோழி.** மொழியோ இதுவும்? ஆஆ! ஆஆ!
இதுவெலாங் காணவோ எழுதினன் பிரமன்?

**முதற்றோழி.** எதுவெலாங் காணவோ இருப்ப திக்கண்?

**உ-ம்தோழி.** என்செய் கின்றன ளிப்போ தேழை?

**முதற்றோழி.** வஞ்சியிவ் அறையே வருவள் வல்லை!
ஏதோ வெழுது கின்றனள். வாணி
கோதிநின் றாற்று கின்றனள் கூந்தல்.

**உ-ம் தோழி.** நீரா டினளோ விந்நிசி?

**முதற்றோழி.** ஆம்! ஆம்!
எழுந்து வாசநீ ராடி முன்சுரத்
தழுந்திய வன்றுதா னணிந்தவெண் பட்டினைக்
கொடுவரப் பணித்தங் கதுவே தரித்து
நெடுநுதல் திலகமும் நேர்படத் தீட்டி,
அன்றிரா வணிந்தமுத் தாரமு மணிந்து,
நின்றுதன் னிலையெலாம் ஆடியில் நோக்கி,
நன்றோ நங்காய்! வாணி! நவிலுதி!
அன்றுபோ லன்றோ வின்றென் னிலைமை!
என்று சிறுமுறு வலித்தனள். என்சொல!
உருவமு முடையு முரையு நடையுஞ்
சருவமும் பாவனை பண்ணியும்—(அழ)

(மனோன்மணியும் வாணியும் வர)

**உ-ம் தோழி.** அஃதோ!
வந்தனள். காணுதி. வாணியும் பின்னுளள்.
மறைகுவ மவ்வறை. வருகவிவ் வழியே!

(தோழிமார் போக)

மனோன், எந்தைபோல் தயாநிதி யெங்கணு மில்லை.
வந்தனம் வழங்கவும் வாய்கூ சுவதே!
ஏதோ வொருவித மெழுதினே னென்க!
வாணி! உன் மணத்திற் கிசைந்தான் மன்னன்.
காணா யீதோ வதற்குள கட்டளை.
(திருமுகங்காட்ட: வாணிவாசிக்க)
சொன்னேன் அன்றே வாணீ! முன்னமே
அன்னை தந்தைய ரன்பறி யார்கிறார்.

வாணி, இத்தரு ணத்தி லேதுவென்? அம்மணி!
சத்தியம். எனக்கிது சம்மத மன்று.
நினைப்பருந் துயரில் நீயிவண் வருந்த
எனக்கிது தகுந்தகும்! ஏகிது தாயே!
உன்மனப் படியெலா முறுங்காற் காண்குவம்.

மனோன், என்மனப் படியெது? எனக்கொரு மனதோ?
எந்தையின் மனப்படி யென்மனப் படியே.
வந்தவிச் சூரத்திடை மாண்டதென் சித்தம்.

வாணி, ஆயினு மம்மா! யாரிஃ தறியார்?
பாயிருள் தொகுதியும் பரிதியுங் கொடிய
வெஞ்சினக் கழுகும் அஞ்சிறைக் கிளியும்
பொருந்தினும் பொருந்தீர். ஐயோ! இத்தகைப்
பெருந்துயர்க் கெங்ஙன மிசைந்தனை யென்க.
என்னையுன் நினைவோ! என்னையுன் துணிபோ!
இன்னன மகிழ்ச்சியி லென்மண மேகுறை! (அழ)

மனோன், வருந்தலை வாணி! வா வா. இன்னுந்
தெரிந்திலை. ஐயோ! சிறுமியோ நீயும்?
உண்மையா னுரைத்தேன். உணருதி. உறுதி.
என்மன மாரவே யிசைந்தேன். மெய்ம்மை.
ஏதென எண்ணினை யிவ்வுயிர் வாழ்க்கை?
தீதற வின்பந் துய்ப்பமீ யெண்ணில்
ஈதல வதற்கா முலகம். இமையவர்
வாழ்க்கையி னுந்துயர் வந்துறு மெனிலிவ்
யாக்கையி லமையுமோ நீக்கமி லின்பம்.
எனக்கெனக் கென்றெழு மிச்சையா திகளெனும்

மனக்களங் கங்களாம் மாசுக ளனைத்துந்
தேய்த்தவை மாற்றித் திகழொளி யேற்றி
மண்ணிய மணியாப் பண்ணிட என்றே
வைத்தவிக் கடிய வாழ்க்கையாஞ் சாணையை
பைத்தபூஞ் சேக்கையாப் பாவித் துறங்க
யத்தனஞ் செய்திடு மேழையர் போல
என்னநீ யெண்ணினை ! வாணி ! இந்தச்
சுகவிருப் பேநமைத் தொழும்புசெய் பந்தம்.
தவமே சுபகரம். தவமென் உணருவை ?
உடுப்பவை யுண்பவை விடுத்தா ணடைந்து
செந்தீ யைந்திடைச் செறிந்தமைந் துறைதல்
ஆதியா வோதுப வல்ல. அவற்றைத்
தீதறு தவமெனச் செப்பிடார் மேலோர்.
இவ்வுயிர் வாழ்க்கையி லியைந்திடுந் துயரம்,
ஐயோ ! போதா தென்றோ அன்னோர்
போனகந் துறந்து கானகம் புகுந்து
தீயிடை நின்று சாவடை கின்றார் ?
தந்தைதா யாதியா வந்ததன் குடும்ப
பந்தபா ரத்தினைப் பேணித் தனது
சொந்தமா மிச்சைகள் துறந்து மற்றவர்க்
கெந்தநா ளுஞ்சுக மியைந்திடக் கடமையின்
முந்துகின் றவரே முதற்றவ முனிவர்.

வாணி, அத்தகைத் தவமிங் கடியேன் தனக்கும்
ஒத்ததே யன்றோ ?

மனோன், மேம்படக் கருதிடி லோம்புதி நீயும்.
அடுத்தவர் துயர்கெடுத் தளித்தலே யானிங்கு
எடுத்தநற் றவத்தி னிலக்கண மாதலின்,
நடேசனை நச்சுநின் நன்மண மதுவும்
விடாதெனை யடுத்த வீரநா ரணன்றன்
கடுஞ்சிறை தவிர்த்தலுங் கடனெனக் கருதி
யெழுதினேன். இஃதோ ! வழுதியு மிசைந்தான்.
என்கட னிதுவரை: இனியுன் னிச்சை.

வாணி, ஆயிடிற் கேட்குதி யம்மணி ! என்குள்.
கண்டவர்க் கெல்லாம் பண்டைய வடிவாய்

நீயிவ ணிருக்க நின்னுளம் வாரி
வெள்ளிலா மெள்ள விழுங்கி யிங்ஙனம்
வேதகஞ் செய்த போதக யூதபம்,
பேரிலா வூரிலாப் பெரியோ னவன்றான்
யாரே யாயினு மாகுக, அவனே நீ
யணையுநா ளடியேன் மணநாள். அன்றேல்,
இணையிலா உன்னடிக் கின்றுபோ லென்றும்
பணிசெயப் பெறுவதே பாக்கிய மெனக்கு
கடமையும் பிறவுங் கற்றறி யேன்விடை
மடமையே யாயினு மறுக்கலை மணியே!

மனோன், பேதைமை யன்றோ வோதிய சபதம்?
ஏதிது வாணி! என்மணந் தனக்கோ,
இனியரை நாழிகை. இதற்கு ளாவதென்?
அன்பின் பெருக்கா லறைந்தனை போலும்.
மன்பதை யுலகம் வாஞ்சா வசமே.

வாணி. உடலலா லுயிரும் விழியலா லுணர்வுங்
கடபட சடமலாற் கடவுளு மிலையேல்
வேண்டிய விளைக! விசனமென்? அன்றேற்
காண்டியவ் வேளை கருணையி னியல்பே. (1)

[இருவரும் போக]

ஐந்தாம் அங்கம்: இரண்டாங் களம்

முற்றிற்று.

# ஐந்தாம் அங்கம்

## மூன்றாம் களம்

**இடம் :** அரண்மனையில் மணமண்டபம். **காலம் :** நடுநிசி.

அமைச்சர் படைவீரர் முதலியோர் அரசனை யெதிர்பார்த்து நிற்க.

(நிலைமண்டில ஆசிரியப்பா)

**முதற்படைத் தலைவன்.** அடிகள்பின் போயினர் யாவர்? அறிவீர்

**உ-ம் படை.** நடராசனை நீ ரறியீர் போலும்!

**முதற் படை.** அறிவேன். ஆ! ஆ! அரிவையர் யாரே
வெறிகொளார் காணில்! வீணில் வாணியைக்
கெடுத்தான் கிழவன்.

**௩-ம் படை.** அடுத்ததம் மணமும்!
தெரியீர் போலும்!

**முதற் படை.** தெரியேன். செய்தியென்

**௩-ம் படை.** கோணிலா நாரணன் கொடுஞ்சிறை தவிர்த்தலும்
வாணியின் மனப்படி மன்றல் நடத்தலும்
இவ்வர மிரண்டு மம்மணி வேண்ட
அளித்தன னனுமதி களிப்புட னரசன்.

**முதற்படை.** இருதிரை யிட்டவா றிப்போ தறிந்தேன்.
ஒருதிரை வாணிக் கொருதிரை மணிக்கே.

**௩-ம் படை.** எத்திரை தாய்க்கென் றியம்புதி கேட்போம்.

**முதற்படை.** இத்திரை தாய்க்காம்.

**௩-ம் படை.** சீ! சீ! அத்திரை.

**உ-ம் படை** எத்திரை யாயினென்? ஏனிரை கின்றீர்?

**முதற்படை.** இருதிரை வந்தவா றிதுவே யாயினும்
ஒருதிறைக் கொருதிரை யெத்தனை தூரம்?

**௩-ம் படை.** அதோஅவ னறிகுவன். அறிந்திதோ வருவேன்.

(௩-ம் படைஞன் மற்றோரிடம் போக)

**முதற்படை.** ஐயோ! பொய்யறும் அன்னையம் மணிக்கும்
பொய்யன் பலதே வனுக்குமோ பொருத்தம்?

உ-ம் படை. வருத்தமே னுனக்கு?!மன்னன் திருவுளக்
கருத்தனு சரித்துநாங் காட்டலே கடமை.

(ந-ம் படைஞன் மீண்டுவர)

ந-ம் படை. இப்புறம் வருதி. செப்புவன் ரகசியம்.
(முதற்படை நோக்கி) சத்தியஞ் செய்தபின் சாற்றினன். நீயும்
எதநிறத் தோர்க்கு மியம்பலே. பத்திரம்!
அத்திரை மணத்திற் கன்று.மற் றப்புறம்
நெருங்கிய சுருங்கையொன் றுளதாம். அவ்வழி
செல்லில் வெகுதொலே செலுமாம். இப்போர்
வெல்லும் வரையு மவ்வழி மணந்தோர்
இருவரு மெய்திவாழ்ந் திருப்பராம்.

முதற்படை. சரி! சரி!
பொருவரும் புத்திமான் குடிலன். எத்தனை
விரைவினிற் சமைத்தான்! வெகுதிற முடையான்.

ந-ம் படை. இப்போ தன்றது; நகரா ரம்பம்
எப்போ தப்போ தேவருந் துயரங்
கருதிமுன் செய்தனன்.

முதற்படை. ஒருவரு மறிந்திலம்!

(முருகன் வர)

ந-ம் படை. யாரது? முருகனே? நாரண னெங்கே?

முருகன். நாரண னப்புறம் போயினன்; வருவன்.

ந-ம் படை. பிழைத்தி ரிம்முறை.

முருகன். பிழைத்தில மென்றும்!

ந-ம் படை. அத்திரைச் செய்தி யறிவாய் வைத்ததார்?

முருகன். வைத்ததா ராயினென்? வெந்தது வீடு!

(இருவரும் நகைக்க)

உ-ம் படை. வாயினை மூடுமின். வந்தனன் மணமகன்.

முருகன். ஈயோ வாயி லேறிட நாயே!

முதற்படை. அரசனு முனிவரு மதோவரு கின்றார்!

[ஜீவகன், சுந்தரமுனிவர், கருணாகரர், நிஷ்டாபரர், பலதேவன், நடராஜன், நாராயணன் முதலியோர் வர]

ஜீவகன். இருமி னிருமின்! நமர்காள் யாரும்!

[ஜீவகன் முனிவர் முதலியோர் தத்தம் இடத்திருக்க]

கொலுவோ கொல்லிது! மணவறை! இருமின்,
பலதேவ ரேனும் பிறரிது காறும்
வந்தில ரென்னை?

பலதேவன். மன்னவர் மன்ன!
அந்தியிற் கண்டே னடியேன். அதன்பின்
ஒருவருங் கண்டிலர். தனிபோ யினராம்.

ஜீவ, இருமிரும் நீரும். எங்கே கினுநங்
காரிய மேயவர் கருத்தெப் பொழுதும்.

(நாராயணனை நோக்கி) பாரீ ரவர்படும் பாடு!

நாராயணன். பார்ப்பேன்!
சத்தியஞ் சயிக்குமேற் சாற்றிய படியே!

ஜீவ, இத்தகை யுழைப்போ ரெட்புவ னமுமிலை,
எண்ணிநிச் சயித்த இத்தொழி லினியாம்
பண்ணற் கென்தடை? சுவாமி! அடிகள்
தந்தநன் முகூர்த்தம் வந்ததோ?

சுந்தர, வந்தது!

[புருடோத்தமனும், குடிலனும், அருள்வரதன் முதலிய
மெய்காப்பாளருடன் கற்படைவழி வர.]

புருடோத்தமன். நின்மின்! நின்மின்! பாதகன் பத்திரம்!

[கற்படையில் அருள்
வரதனை நோக்கி] என்பின் னிருவர் வருக.

[தனதுள்] இதுவென்?
இங்கிசி யெத்தனை விளக்கு! ஏதோ
மன்னவை போலும்! மந்திரா லோசனை!
இவர்சுந் தரரே! அவர்நட ராஜர்!
இவர்களிங் குளரோ! எய்திய தெவ்வழி?
இத்திரை யெதற்கோ? அத்திரை யெதற்கோ?
இத்தனை கோலா கலமென் சபைக்கு?
மாலையுங் கோலமுங் காணின் மணவறை
போலாம். அறிந்தினிப் போவதே நன்மை.
மந்திர மாயின் மற்றது மறிவோம்.

இந்நாற் றிரைநமக் கெத்தனை யுதவி!
(திரைக்குப் பின் மறைந்து நிற்க)

ஜீவ,
என்குலங் காக்க வெனவருள் பழுத்துக்
கங்கணங் கட்டிய கருணை நிதிகாள்!
மனத்திறத் தாழ்ந்த மதிமந் திரிகாள்!
எனக்கென வுயிர்வா ழென்படை வீரர்காள்!
ஒருமொழி கூறிட அனுமதி தருமின்.
ஆடையின் சிறப்பெலா மணிவோர் சிறப்பே;
பாடையின் சிறப்பெலாம் பயில்வோர் சிறப்பே;
என்னரு மதிகுலச் சிறப்பெலா மெமர்காள்!
கள்ளமில் நும்முனோர் காப்பின் சிறப்பே,
ஆதலி னுமக்குப சாரம்யா னோதுதல்,
மெய்க்குயிர் கைக்குநா விளம்புதல் மானும்.
ஈண்டுகா திடுவல்யா மெனக்கடன் பூண்டநும்
மதிகுல மருந்தாய் வாய்த்தவென் சிறுமி
விதைபடும் ஆலென விளங்கினள். அவளைக்
காத்திடு முபாயங் கண்டிட விச்சபை
சேர்த்தன னென்பது தெரிவீர் நீவிர்.
இன்றுநாம் பட்டதோ ரிழுக்கில் வைகறை
பொன்றியோ வென்றோ போக்குவந் திண்ணம்.
ஒருகுலத் தொருவ னொருமரத் தோரிலை.
அப்படி யன்றுநங் கற்பகச் சிறுகனி!
தப்பிடின் மதிகுலப் பெயரே தவறும்.
அரியவிச் சந்தியைப் பெரிதுங் கருதுமின்.
இருந்திடச் சிறியள்: அபாயம்! தனியே
பிரிந்திடப் பெரியள்: பிழை! அவை தன்றியுங்
குலமுடி வெண்ணிக் குலையுநம் முளத்திற்
கிலையத னலோ ரியல்சமா தானம்.
ஆதலி லரியதற் காலத் தியல்பை
யாதென நீவி ராய்ந்தியா னிப்போ
தோதிடு முபாயத் தானுறு நன்மையுந்
தீமையு நன்றாய்த் தெரிந்து செப்புமின்!
குடிலனை யறியார் யாரிக் கொற்றவை?

உ-ம் படை.
குடிலனை யறியுமே குவலய மனைத்தும்.

ஜீவ, அறிந்திடி. விறம்பூ தணையார் யாவர்?
மதியுளார் யாரவன் மதியதி சயித்திடார்?
நெஞ்சுளார் யாரவன் வன்திறற் கஞ்சார்?
யார்வையா ரவனிடத் தாரா ஆர்வம் ?
உண்மைக் குறைவிடம்; திண்மைக் கணிகலம்.
சத்திய வித்து: பத்தியுன் மத்தன்.
ஆள்வினை தனக்காள்: கேள்விதன் கேள்வன்.
ஏன்மிக? நமர்காள்! இந்நடு நிசியிலும்
யானறி யாதுழைக் கின்றன னெனக்கா.
நன்றே யிங்கவன் இலாமையும் அன்றேல்
தற்புகழ் கேட்க அற்பமு மிசையான்.

புரு, (தனதுள்), எத்தனை களங்கமில் சுத்தன்! கட்டம்!

ஜீவ, பற்பல பாக்கியம் படைத்துளர் பண்டுளோர்
ஒப்பறு மமைச்சனை யிப்படி யொருவரும்
முன்னுளோர் பெற்றிலர்: பின்னுளார் பெறுவதும்
ஐயமென் றுரைப்பேன், அன்னவன் புதல்வன்
மெய்ம்மையும், வாரமும் வீரவா சாரமும்,
பத்திசேர் புத்தியும், யுத்திசே ரூக்கமும்
உடையனு யடையவுந் தற்பிர திமைபோல்,
இனியொரு தலைமுறை நனிசே வகஞ்செய
இங்குவீற் றிருந்தில னாயின். நமர்காள்!
எங்குநீர் கண்டுளீ ரிச்சிறு வயதிற்
பலதே வனைப்போற் பலிதமாஞ் சிறுதரு ?

உ-ம்படை. இலையிலை யெங்கும்! இவர்போல் யாவர்!

ஜீவ, எனதர சுரிமையு மெனதர சியல்பு
தமதா ருயிர்போல் தாம்நினைந் திதுவரை
யெவ்வள வுழைத்துளா ரிவ்விரு வருமெனச்
செவ்விதி னெனைவிட நீவிரே தெரிவீர்.
இக்குல மவர்க்கு மிக்கதோர் கடன்பா
டுடையதென் றொருவரும் அயிர்ப்புறார். அதனால்
தடையற வக்கடன் றவிர்க்கவு நம்முளங்
கலக்கிடு மபாயம் விலக்கவு மொருமணம்
எண்ணினேன். பண்ணுவே னிசைவேல் நுமக்கும்.

மணவினை முடிந்த மறுகணை மணந்தோர்
இருவரு மிவ்விடம் விடுத்துநம் முனிவரர்
தாபதஞ் சென்று தங்குவர். இத்தகை
ஆபதங் கருதியே யருட்கட லடிகள்
தாமே வருந்திச் சமைத்துளா ரவ்விடம்
போமா றொருசிறு புரையறு சுருங்கை.
அவ்வழி யிருவரு மடைந்தபின், நம்மைக்
கவ்விய கௌவையுங் கவலையும் விடுதலால்,
வஞ்சிய னொருவனே, எஞ்சலி லுலகெலாஞ்
சேரினு நம்முன் றீச்செறி பஞ்சே.
இதுவே யென்னுளம். இதுவே நமது
மதிகுலம் பிழைக்கு மார்க்கமென் றடிகளும்
அருளினா ரன்னை. ஆயினு நமது
தெருளுறு சூழ்ச்சியுந் தெரிந்திட விரும்பே. (1)
(நேரிசை ஆசிரியப்பா)
உரையீர் சகடரே யுமதபிப் பிராயம்.

சகடன். அரசர் குலமன்று. ஆயினென்? சரி சரி!

நாராயணன். (தனதுள்) மருகன் தப்பிய வருத்தம் போலும்.

ஜீவ, குலந்தேர் வதுநற் குணந்தேர் வதுவே.
பெயரா லென்னை? பேயனிவ் வஞ்சியான்
பெயரா லரசன்! செயலாற் புலையன்!

உ-ம்படை. செய! செய! சரிசரி! தெளிந்தோம்! தெளிந்தோம்!

நாரா, மனிதரா லாவதொன் றில்லை. மன்னவா!
இனியெலா மீசன திச்சை.

சகடன். சரி! சரி!

யாவரும். சம்மதம்! சம்மதம்! சர்வசம் மதமே!

ஜீவ, வாராய்! நாரணா! ஆறு லப்புறஞ்
சென்றுநம் மனோன்மணிச் செல்வியை யழைத்து
மன்றல் திரைப்பின் வரச்செய். (நாராயணன் போக)
யார்க்குஞ்
சம்மத மெனிலிச் சடங்கினை முடிப்போம்.
வம்மின்! இனியிது மங்கல மணவறை.

கவலை யகற்றுமின் கட்டுடன்! பனிநீர்த்
திவலை சிதறுமின்! சிரிமின்! களிமின்!
இன்றுநாம் வென்றே மென்றே யெண்ணுமின்!
இனிநாம் வெல்லற் கென்தடை? தினமணி
வருமுன் னேகுவம். அரைநா ழிகைத்தொழில்!
ஆற்றுவ மரும்போர் கூற்றுமே யஞ்ச.
நாளைநல் வேளை: நம்மணி பிறந்தநாள்
பாரீர்! பதினா றாண்டுமிந் நாளில்
ஓரோர் மங்கல விசேடம்!

சகடன். ஓ! ஓ!
சரி! சரி! ஒவ்வொரு வருடமு மதிசயம்!

(நாராயணன் திரும்பிவர. மனோன்மணி, வாணி முதலிய தோழியருடன் திரைப்பின் வந்து நிற்க)

நாரா, இட்டநின் கட்டளைப் படியே யெய்தினர்.

ஜீவ, (நாராயணனை நோக்கி) மற்றிவர் கவலை மாற்றிட வொருபா
சற்றிசைத் திடுவளோ வாணி? சாற்றுதி!

வாணி (பாட) (கொச்சகக் கலிப்பா.)

நீர்நிலையின் முதலையின்வாய் நிலைகுலைந்த வொருகரிமுன்
ஓர்முறையுன் பெயர்விளிக்க வுதவினைவந் தெனவுரைப்பர்;
ஆர்துயர வளக்கர்விழு மறிவிலியா னழைப்பதற்குன்
பேர்தெரியே னாயிடினும் பிறகிடல்நின் பெருந்தகையோ. (1)

பாரரசர் துகிலுரியப் பரிதவிக்கு மொருதெரிவை
சீர்துவரை நகர்கருதிச் சிதைவொழிந்தா ளெனவுரைப்பர்;
ஆர்துணையு மறவிருக்கு மறிவிலியா னழைப்பதற்குன்
ஊர்தெரியே னாயிடினு முறுதிதா னுனக்குரித்தே. (2)

மறலிவர மனம்பதறு மார்க்கண்ட னுனதிலிங்கக்
குறிதழுவி யழிவில்வரங் கொண்டான்முன் னெனவுரைப்பர்;
வெறிகழுமிப் பொறியழியும் வெம்பாவி விரவுதற்குன்
நெறியறியே னாயிடினு நேர்நிற்றல் நினதருளே. (3)

சுந்தர, எதுவோ விதனினு மேற்புடைப் பிரார்த்தனை?
மந்திரந் தந்திரம் வழங்கு நற்செபம்
யாவையு மிதுவே. பாவாய்! மனோன்மணீ!

வருதி யிப்புறம். வாங்குதி மாலை.

(மனோன்மணி மணமாலைகொண்டு பலதேவனெதிர் வர)

ஒருதனி முதல்வ னுணர்வ னுன்னுளம்.
உன்னன் புண்மையே யின்னமுங் காப்பன்.

(புருடோத்தமன் திரைவிட்டு வெளிவந்து நிற்க.)

முதற்படை. ஆற்றேன்! ஆற்றேன்! ஐய! இத் தோற்றம்.

௩-ம் படை. ஊற்றிருந் தொழுகி யுள்வறந் ததுகண்.

௪-ம்படை அமையா நோக்கமு மிமையா நாட்டமும்,
ஏங்கிய முகமும் நீங்கிய விதழும்,
உயிரிலா நிலையு முணர்விலா நடையும்
பார்த்திடிற் சூத்திரப் பாவையே. பாவம்!

(மனோன்மணி புருடோத்தமனைக் காண: உடன் அவன் நிற்குமிடமே விரைவில் நடக்க.)

யாவரும், எங்கே போகிறாள்? இதுயார்? இதுயார்?

புரு, இங்கோ நீயுளை! என்னுயி ரமிர்தே!

(புருடோத்தமன் தலைதாழ்க்க: மனோன்மணி மாலைசூட்டி அவன்றோளோடு தளர்ந்து மூர்ச்சிக்க.)

சுந்தர, மங்கலம்! மங்கலம்! மங்கலம்! உமக்கே!

யாவரும். சோரன்! சோரன்! சேரன்! சோரன்!

நிஷ்டாபரர். கண்டேன்! கண்டேன்! கருணா கரரே!

(கருணாகரரைத் தழுவி.)

யாவரும். பற்றுமின்! பற்றுமின்! சுற்றுமின்! எற்றுமின்!

பலதே, கொன்மின்! கொன்மின்!

(யாவரும் புருடோத்தமனைச் சூழ; சுந்தரர் கூட்டம் விலக்க)

சுந்தர, நின்மின்! நின்மின்!

(அருள்வரதனும் மெய்காப்பாளரும் வர.)

அருள்வரதன். அடையி னடைவீர் யமபுரம். அகன்மின்!

(புருடோத்தமனையும் மனோன்மணியையுஞ் சூழ்ந்து நின்று காக்க.)

யாவரும். படையுடன் பாதகன் (பின்னிட)

அருள், [விலங்குடன் குடிலனைக் காட்டி] பாதக னீங்குளான்,

ஜீவ, குடிலா வுனக்குமிக் கெடுதியேன்? ஐயோ!
அடிகாள்! இதுவென்! இதுவென் அநீதி
அறியே னிச்சூ தறியேன்! அறியேன்!

சுந்தர, பொறு! பொறு! ஜீவக! அறிகுதும் விரைவில்!

புரு, வஞ்சியான் வஞ்சியான்! மன்னவ! உன்சொல்
அஞ்சினேன். சூதன் அமைச்சன் செய்கை
சுருங்கையின் தன்மை சொல்லியென் னையிங்
கொருங்கே யழைத்தான் உன்னகர் கவர.
உன்னர சுரிமையும் உன்னகர் நாடும்
என்னிட மிரந்தா னிச்சூ திதற்கா!
ஓதிய சுருங்கையி னுண்மைகண் டிவன்தன்
சூதுந் துரோகமுஞ் சொலியுனைத் தெருட்ட
எண்ணியான் வந்துழி யிவ்வொளி விளக்கும்
பண்ணியல் பாட்டும் பழையபுண் ணியமுந்
தூண்டிட ஈண்டுமற் றடையவும், யாண்டும்
எனதுயி ரவாவிய இவ்வரு மருந்தை
நனவினிற் காணவு நண்ணவும் பெற்றேன்.
பிரிகில னினிமேல். உரியநின் னுரிமை
யாதே யாயினு மாகுக. ஈதோ!
மீள்குவன். விடைகொடு. நாளையும்
வேட்டையேற் காண்போம் ஞாட்பிடை நாட்டே. 2

ஜீவ, உண்மையோ? குடிலா! உரையாய்!——

(குடிலன் முகங்கவிழ்த்து நிற்க.)

நாரா, இதுவுநின்
உண்மையோ! மௌனமேன்?

யாவரும் ஓகோ! பாவி!

நாரா, படபடத் திடுநின் பாழ்வாய் திறவாய்!

சுந்தர, விடு விடு! விசாரணைக் கிதுவன் றமையம்!
நன்மையே யாவு நன்மையாய் முடியின்.
வாராய் ஜீவக! பாரா யுன்மகள்
தாராத் தன்னிரு கைதோட் சூட்டி
யெண்படு மார்பிடைக் கண்படு நிலைமை.

இருமனம் ஏனினி! என்றுமிப் படியே
மருகனு மகளும் வாழ்க! வாழ்த் துதியே.

ஜீவ, கண்மணீ! அதற்குட் கண்வளர்ந் தனையோ!
உன்னையு மறந்துறங் குதியே லினிமேல்
என்னையெங் கெண்ணுவை? இறும்பூ திருவரும்
ஒருவரை யொருவ ருணர்ந்தமை!

(மனோன்மணி; திடுக்கிட்டு விழிக்க.)

வெருவலை! மணியே! பிரியீ ரினியே. (3)

(வாழ்த்து-மருட்பா)

பள்ள வுவர்க்கடலிற் பாய்ந்தோடும் வெள்ளமென
உள்ள முவந்தோடி யொன்றானுய்-விள்ளா
மணியின தொளியும் மலரது மணமும்
அணிபெறு மொழியி னருத்தமும் போல,
இந்நிசி யாகவெஞ் ஞான்றும்,
மன்னிய அன்புடன் வாழ்மதி சிறந்தே!

(யாவரும் வாழ்த்த)

ஐந்தாம் அங்கம் மூன்றாங் களம்

முற்றிற்று.

கலித்துறை.

சிறிதா யினும்பற் றிலாதுகை யற்ற திருமகடன்
குறியாந் தலைவன் குடிலன்பின் னெய்திய கொள்கைகண்டீர்
அறிவா மெனுநம் மகங்கார மாறு மவத்தையினிற்
செறிவா யிருக்குந் திருக்கு வெளிப்படுஞ் சீரிதுவே.

ஐந்தாம் அங்கம்

முற்றிற்று.

| | | | |
|---|---|---|---|
| ஆசிரியப்பா | 6-க்கு | அடி | 569 |
| வெண்செந்துறை | 6-க்கு | ,, | 12 |
| கொச்சகக்கலிப்பா | 3-க்கு | ,, | 12 |
| மருட்பா | 1-க்கு | ,, | 6 |
| ஆகப்பாக்கள் | 16-க்கு | ,, | 599 |

---

| | | |
|---|---|---|
| பாயிரம் | அடி | 57 |
| அங்கம் 5-க்கு | ,, | 4445 |
| ஆக இந்நாடகத்துள் வந்த அடிகள் | | 4502 |

# மனோன்மணீயம்

முற்றிற்று.

# குறிப்புரை

## பாயிரம்

**பாயிரம்** எனினும் முகவுரையெனினும் நூன்முகமெனினும் ஒக்கும். பாயிரம் பொது, சிறப்பு என இருவகைப்படும்.

இவற்றுள் ஒரு நூலுக்கு மட்டுமே உரியதன்றி எல்லா நூன்முகத்தும் உரைக்கத்தக்க கடவுள் வணக்கம் பொதுப்பாயிரத்தின்பாற்படும். ஒரு நூலுக்கே இன்றியமையாமல் உரியதாய் அவ்வொரு நூன்முகத்தே உரைக்கப்படுவது சிறப்புப்பாயிரம்.

## கடவுள் வணக்கம்

வேதசிகை - வேதத்தின் முடிபாகிய உபநிடதம். வேதசிகை என்றது வேதத்தின் பிரிவு இரண்டனுள் முந்தியதான கரும காண்டம் ஒழியப் பிந்தியதாய்ச் சிறந்து நிற்கும் பிரமகாண்டம். விரிகலை - பரந்த சாத்திரம். விரிகலை-வினைத்தொகை. போதம்-அறிவு. சிந்தனை செய்தல் - தியானித்தல், நீளநினைத்தல். கூடுங்கால்-வாராக்கால்: கால் ஈற்று வினையெச்சம். இவ் வெண்பாவின் முதலடியும் ஈற்றடியும் முற்று மோனைகள். மற்றையடிகளில் மேற்கதுவாய் மோனை.

## தமிழ்த்தெய்வ வணக்கம்

பஃறாழிசைக் கொச்சகக் கலிப்பாவாவது பல தாழிசைகள் வந்த கொச்சகக் கலிப்பா. தரவு எனினும் எருத்தம் எனினும் ஒக்கும். தரவாவது தந்து முன்னிற்பது.

தமிழ் - இனிமை. இணையில்லாதது, மற்ற மொழிகளிலில்லாத 'ழ' என்னும் எழுத்தைத் தனியே உடையது. கலைமகள் பெண்பாலாதலின் தமிழை அணங்கென்று கூறினார்.

தரவு க. வதனம் - முகம். பிறைநுதல் - பிறைபோன்ற நுதல், உவமைத்தொகை: வடிவத்துக்கும் ஒளிக்கும் அழகுக்கும் பிறை, உவமை. திலகம் - பொட்டு. அணங்கு - தெய்வம்.

கடல், பூமி, பரதகண்டம், தட்சிணம், திரவிட நாடு, புகழ், தமிழ் என்பவற்றினிடத்து முறையே ஆடை, மகள், முகம், நெற்றி, திலகம், மணம், தெய்வம் என்ற தன்மையை ஏற்றிக் கூறியதனால் உருவகவணி. ருஷப மகாராசனது புத்திரனான பரத மகாராசனால் ஆளப்பட்ட இடமாதல்பற்றி இந்தியா பரத கண்டமெனப்பட்டது. தக்கணம் - தக்ஷணம், தென்னிந்தியா (=சென்னை மாகாணம்). திரவிட நாடு-தமிழ் நாடு,: குணகடல், குமரி, குடகம், வேங்கடம் எனும் நான்கு எல்லைக் குட்பட்ட நாடு. இது தமிழ், தெலுங்கு, மலையாளம், கன்னடம், துளுவம் என்னும் ஐந்து திராவிட மொழிகள் வழங்கும் இடமாதலின் திராவிட நாடு என்று சொல்லப்படும். நறும் - வாசனை, இனிமை.

தரவு உ. அளித்து - காத்து. துடைத்தல் - அழித்தல். எல்லை அறு - வடிவு, குணம், செயல் முத

லியவற்றில் ஒரு எல்லையற்ற. முன் இருந்தபடி - தன் வடிவம் மூப்படையாமல் முன்னிருந்த நிலைப்படியே, களிதெலுங்கு - மகிழ்தற்குக் காரணமாகிய தெலுங்கு. கவின் - அழகு. உதரம் - வயிறு. உலக வழக்கு-உலகத்தவரால் வழங்கப்படுதல். வழங்குதல் - பேசுதல். திறம் - பெருமை. வாழ்த்துதும் - வாழ்த்துவோம்; தும் விகுதிபெற்ற தன்மைப் பன்மை எதிர்கால வினைமுற்று.

கன்னட முதலிய மொழிகளுக்குத் தமிழே தாய்மொழி யென்பது பலமொழியாராய்ச்சியாளர் துணிபு.

ஆரியம்-வடமொழி; விந்திய மலைக்கும் இமய மலைக்கும் இடையிலுள்ள ஆரிய வர்த்தத்தில் வாழ்ந்த ஆரியர்களுக்கு உரித்தா யிருந்த மொழி.

உலக வழக்கு அழிதலாவது, இப்பொழுது எந்த நாட்டிற்குஞ் சொந்த மொழியாக வழங்காமை. இதனாற்றான் தேவபாஷை என வழங்குவதுபோலும்.

கன்னட முதலியன ஒன்று பலவாதல்; பழங்கன்னடம், புதுக் கன்னடம், அச்ச தெலுங்கு, மிசிர தெலுங்கு என்ற பாகுபாட்டுடன் விளங்குதல்.

## தாழிசை

**தாழிசை** எனினும் இடைநிலைப் பாட்டு எனினும் ஒக்கும். நாற்சீரின் மிக்குப் பலசீரான் வந்து அடியிரண்டாய் ஈற்றடி குறைந்து வருவன குறட்டாழிசை யெனப்படும்.

**தாழிசை.** ௧. குடமுனி - குடத்திற்றோன்றிய முனி, அகத்தியர். கரை - எல்லை. தொடு கடல் - சகர புத்திரரால் தோண்டப்பட்ட கடல், சாகரம். புகழாமே - கீர்த்தியாமோ, ஏகாரம் எதிர்மறைப்பொருளது. தமிழ் கடலினும் பெரிதென்றபடி. கடல் குடித்தது:— இந்திரன் வேண்டுகோட்படி அவன் பகைவனாகிய விருத்திராசுரனைக் கடலினின்றும் வெளிப்படுத்தும்பொருட்டுக் கடனீரைத் தம் ஒரு கையால் முற்றும் பருகிப் பின் உமிழ்ந்த வரலாற்றினால் விளங்கும். சகர புத்திரர் கடல் தொடுவதற்குக் காரணம் அசுவமேதயாகம் செய்யலுற்ற சகர சக்கரவர்த்தியின் வேள்விக் குதிரையை இந்திரன் பாதாள உலகத்திற் கொண்டொளித்தமை. குருவாவார் முருகக் கடவுளும், சிவபெருமானும்.

**தாழிசை.** ௨. அரனார் - சிவபெருமான், ஆர் - சிறப்பு விகுதி. உரை இழந்து - பேச்சொழிந்து. விழிப்பாரேல் - விழிப்பவராயினாரென்றால். இலக்கணம் - இலட்சணம். அரியது-அறிதற்கு அருமையானது. ஒரு பிழை - மகளிர் கூந்தலுக்கு இயற்கை மணமில்லை செயற்கை பற்றியே மணம் உண்டென்று ‘கொங்குதேர் வாழ்க்கை’ என்ற செய்யுள் அளவில் நக்கீரர் கூறிய வல்லுரையாகிய பிழை. உரையிழத்தலும் விழித்தலும் பிழை செய்து சமாதானம் சொல்ல அறியாதவர் செயலாகக்கொண்டு சிவபெருமான் தாம் நக்கீரரிடத்தில் இயற்கை மணம் என்று கூறியதாகிய பிழைக்கு அச்சிவபெருமானே உரையிழந்து விழித்தாரென்று சொல்வாருமுளர். இச்செய்யுளில் தமிழின் பொருளிலக்கணம் தேவர்க்கும் தேவரனைய புலவர்க்கும் திகைப்பைத் தருவது என்பது குறிக்கத்தக்கது. முன்- முன்னொரு காலம்; நக்கீரர் முன்னர், அல்லது அரனார் முன்னிலையிலும் ஆம்.

**தாழிசை.** ௩. சதுமறை - சதுர் மறை, சதுர்-நான்கு, மறை-வேதம், மறைவான பொருள்களை உட்கொண்டிருப்பது, காரண இடுகுறிப் பெயர். மக்களில் சில வகுப்பாரும் பெண்பாலரும் ஓதக்கூடாதென்று மறுக்கப்பட்டதென்பது பண்டை

யுரை. சகம் - பூமி. முதுமொழி - முதுமையாகிய மொழி. அநாதி - ஆதியற்றது, தோன்றிய காலம் இன்னதென்று துணியப்பெறாதது.

ஆரியமொழி நன்கு பரவுமுன் தமிழ்போன்ற ஒரு மூலமொழி ஐரோப்பாவிலும் ஆசியாவிலும் பரவியிருந்ததென்பது பல மொழிகளையுங் கற்றுணர்ந்த ஆங்கிலேய பண்டிதர்களின் துணிபு என்பது நூலாசிரியர் குறிப்பது.

தமிழ் முதுமொழி என்றது: இந்தியாவிற்கு ஆரியம் வருமுன் மூலமொழி தமிழேயா மென்பதும் இப்பொழுதும் இமயமலைச் சாரலிலிருக்கும் ஒருவகை வேடர்மொழி தமிழோடொற்றுமையுடைய தென்பதும் நீலகிரியிலும் குடகிலுமுள்ள தோடர் குடகர் மொழிகளும் அன்ன என்பதும்பற்றி. முதுமொழி நீ அநாதி என்பதை நீ முதுமொழி அநாதி எனக் கூட்டுக.

**தாழிசை.** ௨. வேகவதி - வைகையாறு. காலநதி - காலமாகிய வெள்ளம். வினை கரவா காரணத்தின் அறிகுறி - உன்னை அகப்படுத்தாதென்பதைக் காட்டுவதோர் அடையாளம்.

வேகவதி - 'வேகமுடையது' வைகை. வேகவதிக்கு, உருபு மயக்கம். காலத்தைப் பிரவாகம் என்பது ஒரு மரபு. பிரளயப் பெருங்கடல் வெள்ளம் என்றலும் ஒன்று. ஒரு வெள்ளத்திற்கு வயப்படாமல் எதிர்த்துச் சென்றதனால் மற்றொரு வெள்ளத்திற்கும் வயப்படாமல் இழுத்துச் செல்லும் என்ற தன்மை விளங்குவதாம். இதனால் தமிழ்மொழி காலத்திற்கு வயப்படாமல் தோற்றம் அழிவின்றி நிலைபேறுடையதென்பது தேற்றமாம். ஒரு சிற்றேடு:—மதுரையில் கி. பி. ஏழாம் நூற்றாண்டில் கூன்பாண்டியன் காலத்து அவனும் அவனைச் சார்ந்த சமணர்களும் ஞானசம்பந்தரோடு அனல் புனல் வாதம் (சொற்போர்) நிகழ்த்தியபோது ஞானசம்பந்தர் எழுதி நீரிலிட்ட ஏடு எதிர்த்துச் சென்றது. இஃது அடைந்த இடமே திருவேடகம் என்னும் திருப்பதி. இவ் ஏட்டில் எழுதிய செய்யுளே 'வாழ்க அந்தணர் வானவர் ஆனினம்......துயர் தீர்கவே' என்பது. சிற்றேடு - சிறிய ஏடு, நறுக்கு என்க. இப்பொருளில் எண்ணாயிரஞ் சமண முனிவர் எழுதியிட்ட நாலடிச்செய்யுள் கொண்ட ஏடென்று குறிப்பாரு முளர். அவர் ஒரு என்பதற்கு ஒன்றென்னும் பொருளைக் கொள்ளாது ஒப்பற்ற என்னும் பொருளைக்கொண்டார் போலும். கரவா - கரவாத, ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்; கர, பகுதி.

**தாழிசை.** ௩. கடையூழி - ஊழிக்கடை, கற்பாந்தகாலம். தனிமை - தனித்திருக்குந்தன்மை. கழித்தல் - தீர்த்துக் கொள்ளுதல். அம்பலத்துள் உடையார் - பொன்னம்பலத்தில் எழுந்தருளியிருக்கின்ற தலைவரான சிவபிரான். வாசகம் - திருவாசகம்.

வாசகத்தில் ஒரு பிரதி கருதியதாவது:—அந்தணர் வேடம் பூண்டு வந்த அம்பலவாணர், மாணிக்கவாசகர் பாண்டிநாட்டிலிருந்து பாடிய வாசகப் பாடல்களை மீண்டுங் கேட்கும் வேட்கையினால் சிதம்பரத்தில் வைத்துப் பாடக் கேட்டுப் படி (பிரதி) யெடுத்த தன்மை. வாசகம்- வாசகத்தாலாகிய நூலுக்குக் கருவியாகுபெயர். கடையூழி வருந்தனிமை கழித்தல் என்றது - சிவபிரான் தம் திருக்கையால் எழுதியருளிய திருவாசக ஏட்டுப்பிரதி, யாவும் அழியுங் கடையூழிக் காலத்திலும் தான் அழியாது சிவபெருமானுடன் அமர்ந்திருந்து அவர் தனித்திருக்குந் தன்மையை நீக்கித் துணை புரிவது.

**தாழிசை.** ௪. இலகும் - விளங்கும். நலம் - அழகு. வியஞ்சனம்-

அறிகுறி. இச்செய்யுளில் சங்கச் சிறுபலகை தமிழுக்கு உவமம் செய்கையால், சங்கப்பலகை கற்றறிந்தார் தகுதிக்கேற்ப இடங்கொடுத்து விளங்குவதுபோலத் தமிழும் நூலாராய்ச்சியாளர் ஒப்பத்தக்க முறையில் சிறந்த நூல் வடிவில் விரிந்து ஓங்கும். சங்கப்பலகை இரண்டு சாண் சதுர வடிவினது.

**தாழிசை. எ.** இருவிழி-கலைமகளின் இருவிழிகள். இவை வடமொழி தென்மொழி என்பன. இவற்றுள் தென்மொழி வலவிழியோ, வடமொழி வலவிழியோ என்பதுவே சொற்போருக்கு இடமாகுங் கூற்று. இதனுண்மை அடுத்த இரண்டு தாழிசைகளால் முடிவு பெறும். கெடுவழக்கு-கெடுதி பயக்கும் பேச்சு. கெடுவழக்கு-வினைத்தொகையுமாம். கிழக்கொடு மேற்குணரார் (1) கிழக்கு மேற்கு என்ற திசைகளை யறியார் (2) ஒன்று மறியார் (3) கீழ்மை மேன்மை அறியாதார்.

**தாழிசை. அ.** வீறு-வேறு எவர்க்குமில்லாத சிறப்பு, பெருமை. குணதிசை யறியார் - கீழ்த்திசையின் பெருமை யறியாதவர்கள். குணதிசை - நன்மையான வழி என்பது தொனி. கலைமகள் - கல்விக்குரிய பெண் தெய்வம். இச்செய்யுளில் குணதிசை யறியாரே கலைமகளின் இருவிழிகளில் வடமொழியை வலவிழியென்று குறிப்பாரென்று கூறியிருத்தல் காண்க. அத்தகையார் குணதிசை யறியாதவரே. குணதிசை, குணக்கு+திசை. குணக்கு-கிழக்கு.

**தாழிசை. கூ.** பூர்வதிசை - கீழ்த்திசை, பழைய நிலைமை என்பது தொனி. மதியுடையார்-அறிவுடையார். கலைமகள் கிழக்கு முகமாக இருக்கின்றதை அறிந்தவர்கள் தென்மொழியே வலக்கண் என்பதை ஐயுறமாட்டார்கள் என்பதாம்.

**தாழிசை. க0.** பத்துப்பாட்டு ஆதி-திருமுருகாற்றுப்படை முதலிய பத்துப் பாடல்கள் அடங்கிய சங்கத் தமிழ் நூல்கள். மனம் பற்றினோர் - கருத்து ஊன்றியவர். எத்துணையும்-எவ்வளவும். துணை - அளவு. இலக்கணம் இல் - பொருளிலக்கணத்துக்குப் பொருந்தாத. பத்துப்பாட்டு - தமிழுக்கே உரிய ஒழுக்கம் முதலியவற்றை இனிது புலப்படுத்துவதோடு மலை, கடல், நாடு, நகர், சிறுபொழுது பெரும்பொழுது முதலியவற்றை உள்ளவண்ணமே கூறி இன்பம் பயக்கும் நன்னெறியுடையது. இத்தகைய இயற்கை வருணனைகளால் மனத்தை மகிழ்விக்கும் நூல் வடமொழியில் இன்றென்பதே குறை என்ற குறிப்பாகும்.

**தாழிசை. கக.** மறு அற - (ஐயந்திரிபுகளாகிய) குற்றமில்லாத படி. உள்ளுவரோ - எண்ணுவார்களோ, மனு ஆதி-மனு முதலிய வடமொழி நீதிநூல்கள். ஒரு குலத்துக்கு ஒரு நீதி - ஒவ்வொரு வகுப்புக்கு ஒவ்வொரு வகையான ஒழுக்கம்; அதாவது மக்களுள் பல வகுப்புக்களைப் பகுத்து உயர்வு தாழ்வு கற்பித்து உயர்வு தாழ்வுக்குத் தக நடுநிலையின்றி ஏற்றத்தாழ்வான முறைகளை ஒரே வகைக் குற்றத்திற்கு விதித்தல். திருக்குறளில் இத்தகைய வருந்தத்தக்க நடுநிலை பிறழ்ந்த முறைகள் கூறப்பட்டில என்பது தேற்றம்.

**தாழிசை. கஉ.** கரைத்து-உருகச் செய்து. மலம் கெடுக்கும் - மும்மலத்தை யொழிக்கவல்ல. கனம் சடை என்று - கனமென்றும் சடையென்றும் உருவிட்டு.

“ திருவாசகத்திற்கு உருகாதார்
ஒருவாசகத்திற்கும் உருகார் ”

“ வேதம் ஓதின் விழிநீர் பெருக்கி
நெஞ்சநெக் குருகி நிற்பவர்க்
[காண்கிலேந்

திருவா சகமிங் கொருகா லோதிற்
கருங்கல் மனமுங் கரைந்துகக் கண்கள்
தொடுமணற் கேணியிற் சுரந்து நீர்பாய
மெய்ம்மயிர் பொடிப்ப விதிர் விதிர்ப் பெய்தி
யன்ப ராகுந ரன்றி
மன்பதை யுலகில் மற்றைய ரிலரே"

என்ற (நால்வர் நான்மணிமாலை) அடிகளின் கருத்து மனங் கரைத்து என்பதிற் குறிக்கப்பட்டது. மும்மலம் - ஆணவம், மாயை, கன்மம். இவற்றைக்கெடுப்பது திருவாசகம். மாண்டோர்-மாட்சிமைப் பட்டவர்; மாண்-பகுதி. சங்கிதை பதம் கிரமம் சடை, கனம் வருணக்கிரமம் முதலியன வேதத்தின் மூல பாடம் ஒரு சிறிதும் பிறழாதிருத்தலை நோக்கி ஏற்பட்டவை. பொருட்பயன் கருதியமையாதவை. இவற்றுள், கனம், சடை என்பன வேதத்தை மொழி மாற்றி உருவிட்டுக் கூறும் வகை. கனம் - வருந்திப் படிக்க வேண்டுவதாயுள்ள முறை. சடை - சடை போற் பின்னிக் கூறும் முறை.

தனிச்சொல்:-என ஆங்கு-என்று இவ்வாறாக. தனிச்சொல் எனினும், விட்டிசை, கூன், தனிநிலை எனினும் ஒக்கும்.

ஆசிரியச் சுரிதகம்

சுரிதகம் எனினும், மடக்கியல், வாரம், வைப்பு, போக்கியல் எனினும் ஒக்கும். குனிதிரை நீர்ச்சுழி போல நின்று சுரிந்திறுவது சுரிதகம்; அதாவது சுருக்கிக் கூறுவது.

**சுரிதகம்** நிற்புகழ்ந்து - உன்னைப் புகழ்ந்து. நெடுந்தகை - பெருமைக் குணம். பழம்பணி - பழைய அணி. நாற்கவி - ஆசு, மதுரம், சித்திரம், வித்தாரம். மேய-பொருந்திய. மீக்கொள - மேம்பட. வெள்ளியதெனினும் - வெள்ளியாலாகியதாயினும் (சாரமற்ற தாயினும்). ஒள்ளிய-ஒளி பொருந்திய. சிறுவிரல் அணி - சிறுவிரலில் அணியப்படும்ஆழி. கொண்மதி - கொள்வாய்; மதி-முன்னிலையசை. கொடுமலையாளம் - என்றது கொடுந்தமிழ்நாடு பன்னிரண்டனுள் மலாடு என்ற பெயருடன் மலையாளம் ஒன்றாயிருத்தலால், இந்நூலாசிரியர் வாழும் நாடும் செந்தமிழுக்கு உரியது அன்றென்று சாதுரியமாக அவையடக்கம் உரைத்ததாகும். இச்செய்யுளில், தமிழ்த்தெய்வத்தின் மைந்தர், என்றது தமிழ் பயிலுவோரை. தமிழ்த்தெய்வத்துக்கு ஆபரணம் என்றது தமிழ் நூல்களை. பழம் பணி புதுப்பிப்பவர் - பழைய நூல்களைப் பிழையறப் பதிப்பித்து வெளியிடுபவர். புதுப்பணி செய்பவர் - புதிதாக நூல்கள் எழுதுபவர். கடையேன் - பிற்பட்டவன் என்பதோடு தாழ்வுடையவன் என்றும் பொருள் தருவது. கொண்மதி என்றதை மதிகொள் என மாறி இயைத்து அறிவில் ஏற்றுக்கொள் என்றலும் ஆம்.

**நேரிசை வெண்பா.** அமைய-தக. ஆட்டும் - ஆட்டுவிக்கும். நீ சுமை பொறுப்பது எவன் - நீ பாரம் தாங்குவது என்ன காரணத்தால். நயந்தால் - விரும்பினால். ஆடுவம் - ஆடுவோம். நாணம் அவம் - வெட்கம் கொள்ளுதல் வீண்.

இந்நாடகத்தைச் செய்ய நினைத்த மனம் சுமை தாங்கமாட்டாது திகைப்பதை அறிந்து கடவுள் திருவருளால் யாவும் நடைபெறவிருக்கும் அதற்கு, மாறுபடக் கருதி வருந்துதல் வீண் என்று தேற்றிய வாறு.

பாயிரவுரை

முற்றிற்று.

# விளக்கச் சிற்றுரை

## முதல் அங்கம்

## முதல் களம்

[ ] இவ் அடையாளத்துட் காணப்படுபவை ஆசிரியரவர்கள் முதற்பதிப்பில் எழுதிச் சேர்த்

ஜீவக வழுதி மதுரைமாநகரை விட்டுத் திருநெல்வேலியைத் தலைநகராகக்கொண்டு அதிற்கோட்டை முதலியன அமைத்து வீற்றிருக்குங் காலத்து, அவரிடத்து அன்புமிகுந்த சுந்தரமுனிவர் திருநெல்வேலிக்கு எழுந்தருளினர். எழுந்தருளிய சுந்தர முனிவரை வரவேற்குஞ் சிறப்புடன் நாடகந் தொடங்குகின்றது.

1. சிங்காதனம் - சிங்காசனம் (வடசொல்) அரியணை.

2. சேர்மின் - சேர்த்துவையுங்கள். சீரிதே - ஏ, அசை: சீரிது - சீர்மை என்னும் பண்படியாகப் பிறந்த ஒன்றன்பாற் குறிப்பு வினைமுற்று; இச்சொல்லை, சீர் + இது என்றும் பிரிக்கலாம்.

3. இணை - இரண்டு. கடிமலர்: கடி - மணம்; உரிச்சொல்.

7. கழைகறி - கரும்பைக் கடிக்கின்ற. பிளிறு - களிறு இரைதலைப் பிளிறுதல் என்ப.

8. உளை - பிடரி மயிர். குரம் - குதி. ஓதை - ஓசை; ஓசை, ஒலி, முழக்கு என்பன ஒரு பொருள் குறித்த பல சொற்கள்.

18. விஜயீபவ (வடசொல்) - வெற்றி யுண்டாக. ராஜேந்திரா - இராஜ—இந்திர—குண சந்தி.

23. விஜயன் - விசயன், மிகுந்த வெற்றியுடையவன், அர்ச்சுனன்.

25. பவபாசம் - (வடமொழித் தொடர்) பிறப்பைத் தரும் பந்தம்

26. இரிந்திட - முறிந்தோட.

33. பீடு - பெருமை.

35. கடக்கரும் - கடக்க + அரும் - கடத்தற்கருமையான.

36. ஆசி - ஆசீர்வாதம் (வடசொல்) நன்மொழி. நனி - மிகுதி; உரிச்சொல்

37. புரி - கோட்டை, அரண்.

41. ஊன்வரு பெருநோய் - பிறவிப் பிணி.

45. கேண்மோ - கேள் + மோ — மோ, முன்னிலை யசை.

46. தென்பாண்டி - திருநெல்வேலி.

47. வாதவூரர் - திருவாதவூரிற் றோன்றிய மாணிக்கவாசகர்.

48. 51. [இவ்வரிகளின் பொருள் பூகோள படம் நோக்கில் எளிதில் விளங்கும். நிலப்பகுதியை ஒரு பசுவாகவும் அதிற் பரத கண்டமாகிய இந்தியாவை அப்பசுவின் மடியாகவும் பாவிக்கில் தென்பாண்டி நாடு அம்மடியினின்றும் பால் சுரக்கின்ற சுரையாக, தானே தோற்றும்.]

49. சரதம் (வடசொல்) - உண்மை.

50. சுரை - சுரத்தலை உடையது.

54. பனிவரை - இமயமலை.

55. [தலையாக - தலையாகவும்; உம்மை - உயர்வு சிறப்பும்மை.]

56. குறுமுனி - குறுகிய வடிவங் கொண்ட அகத்திய முனிவர். மலை- மலையம், பொதியம்.

58. பொன்வரை - பொன்மலை. இமயமாகிய மேரு. [இங்கு அகத்திய முனிவர்க்குச் சூட்டி வழங்கும் பெருமை மலைய மலைமேல் ஆரோபிக்கப்பட்டிருக்கிறது.]

59. சந்நு - ஓர் முனிவர். இவர் காதின் வழி கங்கை வந்ததால் சாநவி என்னும் பெயர் பெற்றது.

60. வாயசம் (வடசொல்)-காகம். பொன்னி - காவிரி; பொற்றுகள் உடைமையின் பொன்னி. இந்திரன் வேண்டுகோட் கிணங்கிய விநாயகக்கடவுள் சையகிரியிற் றங்கிய குறுமுனிவரின் கரக நீரைக் காக வடிவெடுத்து வந்து கவிழ்த்தினார்: இதனால் பொன்னி காவிரி என்னும் பேரைப்பெற்றது. மேலும் இந்திரன் நந்தனவனமாகிய காவை விரியச் செய்தலால் காவிரி என்றலுமாம் இது.

"சுரகு லாதிபன் தூய்மலர் நந்தனம்
பெருக வார்கடற் பெய்த வயிற்றினோன்
கரக நீரைக் கவிழ்த்த மதகரி
சரண நாளுந் தலைக்கணி யாக்குவாம்."

என்ற பிரபுலிங்கலீலைக் காப்புச் செய்யுளான் உணரப்படும்.

64. வேழம் - யானை. மருப்பு - தந்தம் (வடசொல்). காழகில் - வைரம் பொருந்திய அகிற்கட்டை.

65. சந்தனடவி-சந்தன + அடவி, தீர்க்கசந்தி. அடவி - காடு. சாடி - மோதி.

67. தடம்பணை - பெரிய பள்ளத் தாக்கு; பணை வயல்.

69. வாரம் - ஓரம்.

70. [தாமிரவர்ணி - தாமிரபர்ணி, தாமிரபன்னி. தாம்பிரபூரணி என்ற பலபெயருடன் வழங்கும் பொருனை நதி]; பர்ணம் (வடசொல்) - இலை; இந்நதி நீரில் செம்புத் தாதுக்கள் எடுக்கப்படும்.

70-71. தாம்பிரபரணியாறு கங்கை காவிரி இரண்டினும் மேம்பட்டதென்பது.

73. பொன்னகர் - தேவலோக நகர், அமராவதி. கண்டனை - கண்டாய்.

74. அடையலர் - பகைவர், பொருந்தாதவர்.

74-75. [அகழ், விரிவிற்கும் சத்துருக்களின் பயத்தளவிற்கும் உவமை.]

75. கட்செவி - பாம்பு; கண்ணையே செவியாகவும் கொண்டது, அன்மொழித்தொகை. சுடிகை - உச்சிக்கொண்டை.

76. அகழ் - அகழ்தலுடையது, தோண்டப்பட்டது, கிடங்கு.

77. மஞ்சு - மேகம் (வடசொல்.) துஞ்சு - தங்கு. இஞ்சியுரிஞ்சி - மதிலை யுராய்ந்து (தேய்த்து).

78. உதயன் (வடசொல்) - ஞாயிறு, பகலவன்.

75-78. மேகமண்டலமட்டும் அளாவிய கோட்டை மதிலைச் சூழ்ந்து பாதாளம் வரை ஆழ்ந்திருக்கும் அகழியின் நிலைமையைக் கூறியவாறு.

79. பதாகை (வடசொல்) கொடிச்சீலை. மீனம் - மீன்; மின்னுவது. அம் - சாரியை.

80. உவாமதி - நிறைமதி, முழுநிலா.

79 - 80. மீன்கள் அழுக்குகளை உண்ணுதல் இயற்கை.

81. வெயில் - ஒளி. எயில்-மதில்.

82. எந்திரம் (வடசொல்) - நீப்

83. வெறி மயக்கம். பொறி, கிறி-வஞ்சக வழி.

88. குரவ - ஆசிரிய, பெரும, குரவன் முதல் வேற்றுமை.

89. துன்னலர் - பகைவர்.

90. வெருவுவர் - அஞ்சுவர். பொருது - போர் செய்து.

91. உள்ளற்பாற்றே - கருதுந் தன்மையதோ.

92. புரை - குற்றம்.

98. ஆயற்பாற்றது - ஆராயத்தக்

99. வாயில் - வழி.

107. சேடியர் - தோழிமார்.

110. சிவிகை (வடசொல்) - பல்லக்கு. சின்னம் - குறி, அடையாளம்; (வடசொல்) திருச்சின்னம்.

116. [புராணம் - பழங்கதை.]

117. படிறு - வஞ்சகம்.

119. உவர்த்து - வெறுத்து.

121. விரசமாய் - வி—ரசமாய், சுவையற்றதாய்.

123. துனி - வெறுப்பு.

126. பரிவு - அன்பு, இரக்கம்.

132. கமலை - கமலத்தி லிருப்பவள். கலைமகள் முன்னர்க் குறிக்கப்பட்டிருப்பதால் ஈண்டு இலக்குமி.

129 - 135. மனோன்மணியின் உயிர் உடல் முதலியனவாக அன்பு அழகு முதலியன உருவகிக்கப்பட்டுள்ளன. பாண்டியன் தொல்குலம் மதி (சந்திரன்) ஆகவும், அதிற் றோன்றிய மதி யென்றது மதி தோன்றிய பாற்கடலிற் றோன்றிய மதி என்றார்.

138. வன்னி - நெருப்பு.

139. அவிசு - அவி, அவிழ்.

142. வெய்துயிர்ப்பு - பெருமூச்சு

146. புங்கவர் - உயர்ந்தவர்.

147. மணி - மனோன்மணி.

[காவியங்களுக்குரிய மலை, நதி, அரண் இவற்றின் வருணனை இக்களத்தில் ஒருவாறு வந்தமை காண்க.]

---

## முதல் அங்கம்

### இரண்டாங் களம்

ஆசிரியத் தாழிசையாவது மூன்றடியாய்த் தம்முள் அளவொத்து வருவது.

தாழிசை 1. [சுடுகணை தூர்ப்பவன் - மன்மதன்.] கணை - அம்பு.

தா-2. வடு - மாறுத்தழும்பு.

தா-4. கடுவுண்ட கண்டர்-அமுதமெடுக்கத் திருப்பாற் கடலைக் கடைந்த காலத்து உண்டாய நஞ்சுண்ட கண்டத்தையுடையவர், திருநீலகண்டர். கடு - நஞ்சு, விடம்.

தா-5. பலி (வடசொல்) - பிச்சை. உடைந்தான் - தோற்றான். தெருவிற்பலிகொண்டது என்றது, தாருகாவனத்துச் செருக்குற்ற முனிவர்களின் செருக்கை யழிக்கும்பொருட்டுச் சிவபெருமான் கங்காள நாதராகச் சென்று பிச்சையெடுத்தமையைக் குறிக்கும்.

தா-6. கரத்தல் - மறைதல்.

[2, 4, 6 தாழிசைகள் காம தகனனுடைய (அர்த்தநாரீசத் தன்மையை) பெண்ணொரு பாதியாகுந் தன்மையைக் குறிப்பிக்கின்றன.] இத் தாழிசைகளிலிருந்து வாணியின் காதலனாகிய நடராசன், காதலால் அரையுருவாய் மெலிந்திருக்கின்றானென்றதும், மனோன்மணி காதற்சுவை யறியாதவள் என்பதும் விளங்கும்.

4. [மன்றலு மானதுபோலும் - மணந்த பின்னர் நாயகன் பேர் நவி லாமை வழக்கானதால்.] வார் குழல்- நீண்ட கூந்தல்; அன்மொழித் தொகை. குழல் - கூந்தலைக் கட்டு முறை யைந்தில் ஒன்று.

7. இச்சகத்து-(1) இச்சையுடன், (2) இந்தப் பூமியில்.

12. சிவந்த - நாணத்தால் சிவந்த [C. F. Blushing.] கபோலம் - கன்னம். நுவன்று - சொல்லி. நுவல் - பகுதி.

17. இதில் வரும் பழமொழி இன்மைப் பொருள்தர வழங்குவது. பசுவன்றி எருதீனுமென்க. ஈனுதல் பசுவேயன்றி எருதன்றென்க.

25. இயம்புகோ - இயம்புவேன்.

28 - 29. எட்பூ ஏசிய நாசியாய் - எள் மலரிலும் சிறந்த மூக்குடைய வளே! பெண்கள் நாசிக்கு எட்பூ உவமை.

35. இடும்பை - துன்பம், இன்னல்.

38. இது மூர்க்கனும் முதலையும் கொண்டதுவிடா என்னுங் கருத்தது.

43. கைரவம் - ஆம்பல்.

46. வள்ளை-வள்ளையிலை, காதுக் குவமைப்பொருள்.

47. வெம்மொழி-கொடுஞ்சொல்.

50. ஒருவர் - நடராசர்.

59. [ஒக்குமோ - ஒப்பரோ]

66. பெட்பு - ஆசை.

75. கண்டோ - கற்கண்டோ. காரிகை யணங்கு - காரிகையாகிய அணங்கு, மிகவும் அழகுடையவள், ஒரு பொருட் பன்மொழியுமாம்.

87. வற்கலை - வலியவுடை; மரவுரி.

89. சிந்துரம்(வடசொல்)-சிவப்பு.

90. வாரிசம் (வடசொல்) - தாமரை.

100. கதுவும் - பற்றும்.

107-108. [சக்கரம் இருத்திட - யந்திர ஸ்தாபனஞ் செய்ய.]

110. வடதளவுதரவாணி-ஆலிலை போல் பரந்த வயிற்றையுடைய வாணியே.

112. வாசிட்டாதி-வாசிட்டம் + ஆதி, வாசிட்ட முனி செய்த (நூல்). வைராக்கியம் - இன்ப உலகத்தை வெறுக்கச் செய்வது.

119-120. ஆமையின் புறச் சார்பு அலவனொதுங்குவது ஏயும் - ஆமை புறவடிக்கும் அலவன் முழந்தாளுக் கும் உவமை என்றது குறித்து.

125. நச்சினேன்-விரும்பினேன்.

126. பிச்சி - பித்தி, பைத்தியக் காரி.

132. அயிராவதத்தன்-இந்திரன், அயிராவதமென்னும் வெள்ளை யானை யூர்ந்து செல்பவன்.

133. அனிச்சம் - மெல்லிய பூ. இது பெண்களடி மென்மைக்குவமை. நெரிஞ்சில் - நெரிஞ்சி முள்.

135. அஞ்சனம் (வடசொல்) — மை; கண்ணிடு மை. கஞ்சனக் கதுப்பு - கண்ணடிபோன்ற கன்னம், (வடமொழித்தொடர்.)

139. அணங்குறல் - வருந்தற்க. சுணங்கு - தேமல். பொன் - இலக்குமி, தங்கம்.

141. முகை முகிழ்த்தல் - பூத்தல். [தாமே நட்டு வளர்த்த முல்லை பூக் குங்கால் இராச கன்னியர்க்கு விவா கம்நேரிடுமென்பது காவிய வழக்கு.] வல்லை - விரைவு.

146. துச்சம் - அற்பம், புன்மை, வெறுக்கத்தக்கது.

149. சந்தம் (வடசொல்)-அழகு.

152. துன்று இரா - நெருங்கிய இருள். தோகாய் - உவமை யாகு பெயர், தோகை என்பதின் விளி.

[இக் களத்தில் மன்மதோபாலம் பனமும் கேசாதிபாதவருணனையும் ஒருவாறு வந்தமை காண்க.

# முதல் அங்கம்

## மூன்றாங் களம்

8. நறை - தேன், வாசனை. ஆர் - நிறைந்த. தார் - மாலை.

14. ஓவல்-இடையறுதல். உஞற்றுமின் - செய்யுங்கள்; மின் ஈற்று ஏவற்பன்மை.

17. அழுக்காறு - பொறாமை, அழுக்கறு என்னும் பகுதி நீண்டு தொழிற்பெயராயிற்று.

25. சினகரம் - கோவில். மனோகரம் - மனத்தைக் கவர்தல்.

26. உய்ப்பினும் - செலுத்தினும். உய் - பகுதி.

29. முசிப்பு - முடிப்பு.

32. சிட்ட - கற்றறிவுடைய.

88. புரந்தரன் - இந்திரன் கரந்து - மறைந்து.

36 ஒவ்வும் - பொருந்தும்.

39. கைப்பிள்ளை - சிறு பிள்ளை. கை - சிறுமை.

39. [இதன் பின்வரும் வெண்பா, உண்மைத் துறவியாகிய முனிவர் மேல் குடிலன் அவமே பொருளாசை ஆரோபித்ததைப் பழித்து நாராயணன் செவியறிவுறுத்தும் துறையாகக்கூறும் கூற்று.]

கோற்றொடி - அழகிய வளைய லணிந்த பெண்.

பார்த்திபன் - அரசன், பாரை விளங்கச் செய்பவன்.

51. அறத்தாறு - அறநெறி.

53. அரந்தை - துன்பம்.

56. வதுவை - திருமணம்.

59. சீலம் - ஒழுக்கம்.

60. சாலவும் - மிகவும்.

64. இடியேறு-ஆணிடி, பேரிடி,

65. அடு - கெடு, கொல்.

70. தொழும்பு - அடிமை.

73. வியர்த்தம் (வடசொல் வி+அர்த்தம்)-வீண் - பயனற்றது.

77. நேராள் - உடன்படாள்.

84. திரைத்தது - சுருங்கிற்று.

87. வாழ்தும் இவ்வயின் - இவ்விடம் வாழ்வோம்.

95. [இவ்வரிக்குப் பின் வரும் வெண்பாவில் 'சோற்றதற்கா' என்னும் தனிச்சொல் சகடனைக் குறிக்குங்கால் 'சொற்றதற்கா' என்பதின் நீட்டல் விகாரமாய் அவனது தவறு மொழியையும் சுட்டி நிற்கின்றது.]

104. பொருவரும் - ஒப்பற்ற.

110. பூவை - நாகணவாய்ப்புள்.

117. பரற்கல் - கூழாங்கல்.

129. இதம் - நன்மை, இனிமை.

133. [இராச்சிய தந்திரத்து - இராச்சிய காரியங்களில்.]

149. நளினம் - தாமரை.

152. குமுதவாய் விண்டு - செவ்வாம்பல் மலர்போன்ற வாயைத் திறந்து.

153. குயிலின் மிழற்றி - குயில் போற் பேசி.

156. மந்திரம் - வீடு.

158. கண்படு மெல்லை - துயில் கொள்ளும்போது, தூங்கும்போது.

163. நாலி - முத்து.

165. கட்டழல் - கண்+தழல் - நெருப்பு.

166. ஒல்கும் - தளரும்.

169. அயினி நீர் - ஆலத்தி நீர். பூதி - விபூதி, திருநீறு.

173. இழுது - நெய்.

178. கங்குல் - இருள்.

180. சிரசிரா-சிரசு + இரா - தலையிருக்க மாட்டா, தலைத் தண்டனை வரும்.

182. நிமித்திகர் (வடசொல்) - சோதிடர், குறி கூறுவோர்.

183. பெண்ணையந்தார் சூடிட - பனம்பூ மாலையைச் சூடும்படி.

184. பெண்ணை - மகளை. அம் தார் சூட்டெனை - அழகிய மாலையைச் சூடும்படி செய்யெனை; அதாவது, வஞ்சி யரசனுக்கு மணம் செய்து கொடுமின் என.

203. அங்கணம் (வடசொல்) - முற்றம்.

[இக்களத்தில் கனக்கண்டு, காமங் கொண்ட மனோன்மணியின் காமசுர வருணனை ஒருவாறு வந்தமை காண்க.

---

## முதல் அங்கம்

### நான்காங் களம்

4. அரும்பிய அம்புலி - தோன்றிய சந்திரன்.

6. உறுத்தும்-வருத்தஞ்செய்யும். ஒறுத்து - தண்டித்து.

7. சூல் - கருப்பம்.

12. பஞ்சவனம் - பஞ்ச வர்ணம்; ஐந்து நிறம்.

13. பிசிதம் - வேம்பு.

14. வானவன் - தேவன்.

16. சேயது-சேய்மையிலுள்ளது, தூரத்திலுள்ளது. போந்தை - பனைமரம்.

12-22. [இவ்வரிகளில், பஞ்சவன்-பிசிதம் - வானவன் - போந்தை என்ற மொழிகள் முறையே பாண்டியனையும், அவனது மாலையாகிய வேம்பையும், சேரனையும், அவனது மாலையாகிய பனம்பூவையும் குறிப்பித்து நிற்பதால் பாண்டியன் மகளாகிய மனோன்மணி சேரனது பேரழகு கண்டு மயங்கி இச்சையுறுவதை யுணர்த்த அறிகுறியாக வந்த ஒரு கனக் காட்சி தொகியருந்தமாக் கூறியதாயிற்று.]

27. துப்பு - பவளம்.

30. காம்பு அடு-மூங்கிலைப் பழிக்கின்ற. போன்மே - போலுமே, போலும் என்பது போன்ம் எனத் திரிந்தது, மகரக் குறுக்கம்.

37. பரிதி - சூரியன்.

42. மிசை - துன்பம்.

57. அழல் - அழுதல்.

61. விழுமம் - துன்பம்.

62-63. மின்னேய் மருங்குல் - மின்னலை ஒத்த இடை.

65. உகுத்து-சிந்தி. வம்பு-புதுமை, வீண்.

69. நச்சியது-விரும்பியது, நச்சு-பகுதி.

73. விநயமாய் - பணிவாய்.

82. கற்பனை - கட்டளை.

86. பாலை - பாலைவனம்.

89. தாரு - மரம்.

92. ஆறலை - வழிப்பறி.

115. சாடில் - வீழ்ந்தால்.

121. ['அரிவையர் பிழைப்பர்' என்பதை 'எம்மனம்' என்ற இவைகள் சொல்லோடு சேர்த்துத் தன் மேல் சாட்டப்பட்ட பிழைவாதத்தை அரசன்மேலேற்றி வாணி மறுமொழி கூறினாள் என்க.]

131. மாற்றலர் - பகைவர்.

148. மண்ணுள் - கழுவாள்.

152. பணி - நகை.

169. புளியம் பழமும் தோடும் போலாமென்பது, ஒன்றிற்கொன்று பற்றற்ற தன்மை யுணர்த்துவது.

180. முருகு - தேன், மணம்.

183. நிசிதம் - கூர்மையான.

194. துனி - வருத்தம்.

197. திருவாழ்கோடு - பொன் மகள் வாழுமெல்லை.

187-199. நிலவுலகிலுள்ள மற்ற முடிமன்னரை யெல்லாம் பயனற்ற திருகுகள்ளியும் கருவேல மரத் திரளுமாக வெட்டி யொழித்து, மன்பதை சுகத்தோடு வாழும்படி (தனது வெண்கொற்றக்குடையால்) நிழலளித்து, இன்னு மழியாத பகைவ ரெவரேனும் வந்தெதிர்த் தாலும் அவரது தலையை யறுத்துத் தள்ளும் வீரமே இலைகளாகவிட்டும், புகழென்று சொல்லப்பட்ட எங்கும் மணமெடுத் தோங்குகிற நற்குணங் கள் பல பல பூக்களாகப் பூத்தும், துவக்குண்ட ஆன்மாக்களது துன் பங் களையும்படிக்குத் தனது உள் ளங்கனிகின்ற தண்ணளியே பழங்க ளாகப் பலந் தந்தும், தருமராச்சிய மென்ற தனிப் பேர்கொண்ட செந் திரு வாழு மெல்லையாகிய சேர தேசத்தை யாள்வோனுகிய புரு டோத்தமன் என்னும் தன்னிகரில் லாத் தலைவனையன்றி, நினது கற் பகப் பூங்கொடியாகிய மனோன் மணி மணந்து சுற்றத் தகுந்த கற்பகத்தரு வேறொன்றுமில்லை என்பது.

202. இடுக்கண் - துன்பம்.

[இக்களத்தில் வாணியின் காதல் நிலைமை வாணியின் வாசகத்தால் வருணிக்கப்படுகிறது.]

---

## முதல் அங்கம்
## ஐந்தாங் களம்

1. சக்தி - வலிமை.

3. பெட்பு - விருப்பம்.

9. கற்றை - ஒன்று சேர்ந்தது.

19. அயர்த்தோம் - மறந்தோம்.

39. மாறன் - பாண்டியன்.

40. இறுமாப்பு - செருக்கு.

47. [அரசனைப் போர்க்களத்தில் தானே சூதாகக் கொலைபுரிய உட் கொண்ட குடிலன் கருத்தை அவாய் நிலைப் பொருளால் இவ்வரி உணர்த்துகின்றது.]

50. உற்பவம் (வடசொல்) - தோற்றம்.

52. இந்து இரவி - சந்திரன் சூரி யன், மதி கதிர்.

66. சுவானம் (வடசொல்)-நாய்.

67. குக்கன் (வடசொல்) - நாய்.

75. இணையறு - ஒப்பற்ற.

78. உதாரம் (வடசொல்) - தயா ளத்துவம்.

88. [புண்ணியம்போல - போலிப் புண்ணியமாக.]

88. மேதினி - உலகு.

[இக்களத்தில் குடிலன் தூர்க் குணம் அவனது மொழிகளாலேயே விளக்கப்படுகிறது.]

### கலித்துறை

நிதனம் - அழிவு.

தனு கரணம் - உடம்பு கருவி.

[முதலங்கம் முடிவில் வருங் கலித் துறை அவ்வங்கத்துள் நடந்த கதை யைத் தொகுத்துக்கூறி, ஞானபர மாகப் பொருட்படுத்துகிறது. மது ரையாகிய கூடஸ்தநிலை தவிர்ந்த ஜீவகனுகிய ஜீவன் நெல்வேலி யாகிய அன்னமயாதி பஞ்சகோச சரீராபிமானத்தால் குருவாசகமா கிய அருள்வழி விடுத்துக் குடிலனு கிய மாயா வசத்தனுய்த் துக்கத்திற் காளாகின்றான் என்பது குறிப்பு.]

## இரண்டாம் அங்கம்

### முதற் களம்

2. பொறையன் - சேரன்.

3. மருமான் - மருமகன்.

4. மன்றல் - திருமணம்.

9. மந்திரம்-ஆலோசனை, சூழ்ச்சி.

1-9. இவ்வடிகளில் ஜீவக வழுதி குடிலனுக்குப் பயந்து சுந்தர முனிவர் தன்னிடம் கூறியவற்றைக் குடிலன் தனக்குக் கீழ்ப்பட்ட பதவியில் இருப்பவனுயிருந்தும் தன்னின் மேம்பட்டவனுகக் கருதி அவனிடம் கூறுகின்றான்.

12. பரிசு - தன்மை, விதம்.

14. அற்றம் - சமயம், காலம்.

19. காண்டகும் - பார்க்கத்தக்க (அழகு வாய்ந்த)

20. மாண்ட - மாட்சிமைப்பட்ட, மாண் - பகுதி.

24. செய்வான் - செய்ய, வான் ஈற்று வினையெச்சம்.

23. அனந்தைப்பதி - திருவனந்தபுரம்.

29. மொழிப் பயன் - சொற்பொருள்.

33. கண்ணகல் ஞாலம் - இடமகன்ற பூமி. ஞாலம் - ஈண்டு இடவாகு பெயராய்ப் பூமியிலுள்ளவரையுணர்த்தும்.

29-39. இங்கு குடிலன் தன் மகனுக்கு மனோன்மணியைக் கொள்ளவும் பிறவரசர் தேடி வராதிருத்தற்கு முபாயங் கொள்வான்போல், எளிய ஜீவகனை மணஞ்செய்ய முதல் முதல் பேசி வருதலிணங்கிய ஆடவரில் லுள்ளாரே யென்றும், ஆடவர் தேடி மன்றல் சாற்றுதல் தகாது என்றும் மெல்ல வரசனுக்குரைக்கின்றமை காண்க.

47. கொழுந்து - மணமுள்ள பச்சிலை, இங்கு மனோன்மணியைக் குறிக்கின்றது.

54. நேரார் - ஒப்பாகார்.

63. எதிலன் - அயலான்.

69. கடிபுரி - காவல் மதில்.

73. சூழ்ச்சித் துணைவர் ஆலோசனைச் சபையி னங்கத்தவர்.

75. [நன்செய் நாடு-நாஞ்சி நாடு நாஞ்ச நாடு என்று இக்காலத்து வழங்குவர்.]

78. மருதம்-நானிலத்தில் ஒன்று, அது வயலும் வயல் சார்ந்த இடமும். நெய்தல்-கடலும் கடல் சார்ந்த இடமும். மயங்கி - கலந்து.

80. மழலை - இளஞ்சொல். வண்டானம்-நாரை. புலர்மீன்-உலர்த்து மீன் (கருவாடு).

81. ஓம்புபு - ஓம்பி, பேணி, நுளைச்சியர் - நெய்தல் நிலப் பெண்டிர். குழை - காதணி.

83. இருஞ்சிறை - பெரிய சிறகு (கரிய இறகு.)

84. அலக்கண் - துன்பம்.

80-84. [நெய்தல் நிலத்தில் உலர்த்தப்படும் மீனை மருத நிலத்து வண்டானக் குருகு கவர, அதை ஓட்ட நுளைச்சியர் எறிந்த பொற்குழை கடற்கரையிலுள்ள புன்னை நிழ லுறங்கி அம்மலர்த் தாதுக்களால் பொன்னிறம் பெற்றுத் திரும்பி மருத நிலத்திற்குச் சென்ற எருமையின்மேலிருந்து சிறகுலர்த்தும் கடற்காக்கையை வருத்திற்று என்பது பொருள்.]

85. கேதகை - தாழை.

87. தாது - மகரந்தம்.

85-87. நெய்தலுக்குரிய கைதை மலரின் நிழலைத் தனது பெடையென மயங்கிச் சென்ற மருத நிலத்துத் தாராக் குருகை எள்ளனஞ் செய்து சிரித்த ஆம்பல் மலரின் வாய்நிறையத் தன் மலர்த்தாதினைக் கொட்டிக் கோங்குமரம் விலக்கும் என்பது பொருள்.

88. வால்வளை-ஒளி பொருந்திய சங்கு.

89. ஓதிமக் குடம்பை என்று உன்னுபு - அன்னத்தின் முட்டை என்று எண்ணி.

90. அடம்பு - நெய்தல் நிலக் கொடி.

93. காரா - எருமை, காரான் எனவும் படும்.

94. அலமுகம் - கலப்பை நுனி. மாக்குழி - மோதுமிடத்து. அல தரும் - வருந்தும்.

95. ஊடல் - பிணக்கம்.

81-98. கருப்பஞ் சாற்றைக் காய்ச்சுகின்ற மருத நிலச் சாலையில் எழும் பெரிய புகையானது நெருங்கி மண்டுதலினாலே வாடிப்போன நெய்தல் நிலத்துள்ள கொடிகளின் பசுந் தழைகள் தளிர்க்கும் படியாகப் புல் மேய்ந்து வீடு நோக்கிச் செல்லு மெருமையானது அப்புகையைக் கன்றென நினைத்துத் தீம்பால் சுரந்து பொழியும். கொழு நுனி பூமியைக் கீண்டிக்கொண்டு போம்பொழுது துன்பத்தை யடைந்த ஆமையானது பரத்தியர் தம் நாயகன்மாரோடு கொண்ட ஊடலின்கண்ணே தாங்கள் கோபத்தோடு தங்கள் மார்பில் பூசியிருந்து வழித்தெறிந்த குங்குமக் குழம்பினிடை யொளித்துக்கொள்ளும்.

97. அன்றில் - ஒன்றில்லையேல் ஒன்றில்லாதது, இணைந்தே வாழும் பறவை.

98. நளி - பெருமை. கோட்பறை விளி - கொன்று கொள்ளுதற்கு இசைவாக அடிக்கப்படும் பறைக்கொட்டு முழக்கம்.

99. சாலி - நெல்.

100. பஃறி - ஓடம். நிரை - வரிசை.

99 - 102. அழகிய கிளைகளையுடைய மருத மரத்திலே வாழ்ந்திடும் அன்றிலானது நெய்தல் நிலப் பறை யோசையைக்கேட்டு இரா முழுதும் கண் துஞ்சாது. மூங்கிலென வளர்ந்த நெற்கதிர்க் குலையோடு கூடிய பயிரின் தாளினிடத்தே உப்புப் பாரமேற்றி நிறைந்த கப்பற் கூட்டத்தை (நங்கூரம்போட விசைவில்லாதபொழுது கப்பல் காற்றால் வேறுகரைக் கடியுண்டு போகாது) கப்பற் கயிற்றினால் கட்டுவார்.

நெல் தாளில் கட்டுவாரெனக் கொள்க. இங்கு நெய்தல் நிலத்தில் உப்பும் பாரமேற்றியிருக்குங் கப்பல்கள் மருத நிலத்திலுள்ள நெற்பயிர் மூட்டிலே கட்டப்படுதலானது இவ்விரு திணையினது சமீபத்தையும், கப்பலையும் பிணிக்கத்தக்க விதமாய் நெற்பயிர் மூடுகள் மூங்கிற் பண்ணை மூடுகள்போல ஆனையடிப்பட்டு நின்றதையுங் குறித்தபடி. இப் பெருமை பொருந்திய நஞ்சை நாடெங்கும் இரவும் பகலுந் தம் வரவொழிந்தாலும் மாறி வந்தாலும் மழையானது அவ்வப் பருவகாலங்களிலே பெய்தலாகிய தங் கடமையில் வழுவுதல் செய்யாது. தப்பினுமென்றபடியால் வரவொழிதலும் மாறிவருதலுங் கொள்ளப்பட்டன. இத் தவறுப் பொருள் தவறினும் மழை தங் கடன் தவறுதென்றமையின் அவ்வப் பருவங்களில் காலமறிந்து பெய்யும் மழை குன்றுவெனப்பட்டது.

103. கொண்மூ-மேகம். கொள்கலம் - பொருளைக் கொள்ளக்கூடிய பாண்டம்.

105. மிடி தீர் - வறுமையைப் போக்குகின்ற.

106. முந்நீர் நீத்தமும் - கடல் வெள்ளமும். முந்நீர் - ஆக்கல், காத்தல், அழித்தல் ஆகிய மூன்று தன்மையுடையது; ஆற்று நீர், ஊற்று நீர், வேற்று நீர் என்று மூன்று நீரை உடையது எனினுமாம். நீத்தம் - நீந்தப்படுவது, நீந்து + அம். அம், செயப்படுபொருள் விகுதி.

111. ஓம் என ஓ இறந்து - ஓம் என்ற சப்தத்துடன் மதகுநீர் தாங்கும் பலகையைக் கடந்து.

110-112. அந் நாஞ்சி நாட்டின் ஒரு பக்கத்தில் கால்வாய்களினிடத்தே நீரானது விம்மியேறி மதகைத் தாண்டிப் பாய்ந்து வீழ்கின்ற வெள்ளமானது "ஓம்" என்ற ஓசையுடன் விடாது ஒலித்தலினாலே குடிலை மந்திரத்தின் தொனியே கேட்கும்.

113. இரணம் - உப்பு-உப்பளம்.

114. பழனம் - வயல்.

115. தூமம் - புகை.

116. கவடி - சோவி.

117. அலவன் - நண்டு.

118. துகிர்க்காலன்னமும் - செம்பவளம் போன்ற கால்களுடைய அன்னப்பறவையும், புகர் - கபில நிறம், மங்கிய செந்நிறம்.

119. போத்து - ஆண் மயில். கம்புள் - சம்பங்கோழி.

122. குழீஇ - கூடி.

124, அந்தியங்காடியின் சந்தம் - அந்திக்காலத்துக் கடைவீதியினழகு.

125. குழூஉக்குரல்-குழூஉக் குறிகளால் வியாபாரிகள் பேசும் வழக்கம் குறிக்கப்படுகிறது. குழூஉ - கூட்டம்.

113-126. வாசனை பொருந்திய பூவோடுகூடிய குவளைக்கொடிகளும் நானாவிதமான நிறங்களோடு கூடிய உப்பளங்களும் நிரம்பிய பூமியைக் கம்பளமாக விரித்துக்கொண்டும், தங்களுக்கு வெளிச்சம் தரும் பொருட்டுத் தாமரையினது சுத்தமாகிய மொட்டுகளைப் புகையிலாத விளக்காகக் கொண்டும் நிலவு வெளிச்சத்தைத் தருகின்ற முத்துக்களையும் சோவிகளையும் பணமாகக் கொண்டும் நண்டுகள் தங்கள் பல விரல்களாலே (இலாப நஷ்ட) மாதாயஞ் செலவு பார்த்து அப்பணங்களை நோட்டம் பார்த்து எண்ணவும் பவளம்போன்ற கால்களையுடைய அன்னப்பட்சியும், தவிட்டுநிறக் கால்களையுடைய கொக்கும், சிவந்த கண்களையுடைய மயிலும், நீர்க் கோழியும், உரத்த சத்தத்தோடு கூடிய நாரையும், தம்மினத்தையே சினந்து பார்க்கின்ற காடையும், பொய்யாப் புள்ளும், மீன் கொத்திப் பறவையும் என்றிவை பலவும் அளவிறந்தன சேர்ந்து தங்கள் தலையைச் சிறிது குறிப் போடாட்டியும், சிறகை யடித்தும், சாயங்கால வேளையில் அங்காடியின் (கடையின்) அழகோ வென்று கண்டோரையுறும் வண்ணம் தங்கள் தங்கள் சாதிக்குரிய சத்தத்தைப் பரவும்படி காட்டுகின்ற பெரிய ஓசை மட்டும் ஒரு சார் நிரம்பும்.

126. ஆர்தரும்-நிறையும்.

127. வீறுடை எருத்தினம்-இறுமாப்புடைய எருதுக் கூட்டம்.

128. ஈறு-முடிவு, எல்லை.

127 - 130. சங்கையில்லாத சகரர்களென்று சொல்லும்படியான உழவர்கள் வலியையுடைய உழவு மாடுகளைப் பொன்னேரில் பூட்டி ஒருவர்பின் ஒருவராக ஒழுங்காய் நின்றுழும்வரை வாழ்த்திப் பாடும் குரவைப்பாட்டானது ஒரு பக்கத்தே வழங்காநிற்கும்.

131-145. வயலின் கண்ணே நெருங்கியுண்டான நாற்றுகளை

நீரைப்பாய்ச்சிப் பிடுங்குகிற உழத்தியரும், அந்நாற்றின் திரள்களைச் சுமை கட்டத் திரைக்கின்ற பெண்களும், அல்லது திரைத்துச் சுமையாக்குகின்ற உழத்தியரும், நடுகைவயலுக்குக் கொண்டுபோகின்றவரும் நடுகின்றவரும், களையாகிய விரோதப் பயிர்களை எடுக்கின்ற உழத்தியரு முதலாயுள்ளகள்ளுண்டு களிக்கும் இப் பள்ளிகளினுடைய உழத்திப்பாட்டினின்றும் மற்றவர்கள் பாடுகின்ற பாட்டுகளினின்று முண்டாகின்ற ஓசையானது எப்பக்கமுஞ் செல்லும்படி கேட்கப்படுவது ஒரு பக்கம். மலைபோலரிந்து குவிக்கப்பட்டிருக்கின்ற நெற்போரின்மீது பிணையல் (வட்டம் வருகின்ற) எருமைக் கடாக்களானவை மேகம்போல்விளங்க, முழங்குகின்ற மருதநிலப் பறையானது மங்கல முழவுடனே கலந்து விம்முதல் ஒரு பக்கம். தம்முடைய ஒரு பீலியினால் தடவுதலும் அது படுமுன்னே கூச்சங்கொண்டு சிரிக்கின்ற சிறுபெண்களைப்போல அந்த வளம் பொருந்திய பூதேவியானவள் கலப்பையோடு கூடிய கொழுவினது நுனியானது தன்மேல் படுமுன்னம் கூச்சத்தையடைந்து தன்னுடைய தேகமானது இளக, எப்பக்கமும் வாடாவளத்தோடு கூடிய செந்நெற் பயிராகிய ரோமாஞ்சமிட்டுப் பலவகையாகிய வளங்களையும் அங்களிப்பள். வளங்களிப்படியிருக்குமாயின் நான் என்ன சொல்லப்போகிறேன்.

133. அடுபவர் - கொல்பவர்.

134. பள் - ஒருவகைப் பாட்டு, இசை.

138. கிணை - மருதநிலப் பறை.

140. நீவு - தடவு.

143. உலப்பு-கேடு. உல-பகுதி

144. பயிர் மயிர் - பயிராகிய மயிர்; உருவகம்.

147. பாண்டி - பாண்டிய, [illegible].

147. [நன்செய் நாட்டில் இன்றும் தமிழே வழங்குகின்றது. பாண்டியனுக்கும் சேரனுக்கும் ஒருகால் நன்செய் நாட்டைப்பற்றி விவாதம் வந்தபோது அந் நாட்டில் வழங்கும் தமிழ்ப் பாஷையைச் சான்றாகக் காட்டினதாக ஒருகதையும் உண்டு.]

152. கண்டனன் - செய்தனன்.

155. கிளத்தில் - சொன்னால்: கிள - பகுதி.

159. ஒப்புரவு - இணக்கம்.

160. அந்நியோந்நியம் - அடுத்தவரல்லாத தன்மை; மிக நெருக்கமானது.

171. ஆற்றலே ஆற்றல் - செய்வதே வலிமை.

172. அவாம் - விரும்பும், அவாவும் என்பது அவாம் எனத் திரிந்தது.

174. மன்னவை - அரச சபை.

172-178. தூதரிலக்கணம் கூறப்பட்டவாறு.

182. வென்றிவைவேல்- வெற்றியும் கூர்மையும் பொருந்திய வேல்.

185. மேவலர்-பகைவர், மேவு - பகுதி.

191. நினதே - நின்னுடையதே.

203. ஏழை (1) அறிவின்மை,(2) தனியனாந்தன்மை; இரக்கக்குறிப்பு.

210. இராச்சிய பிரணகுத்திரம் —இராச்சிய பாலனஞ் செய்யும் பொருட்டு ஏற்படுத்தப்பட்ட சாசனம், பர்ணம் - தாங்குதல்.

210 - 211. யார்க்கும் நீச்சே - எவர்க்கும் எய்க்காத ஆழமுடைத்தாயிருக்கின்றது.

215-219. மாதா பிதாக்களுக்குத் தெரியாமல். தங்களை மறக்கச் செய்து அவர்கள் ஒழுக்கங்களைவிட்டுத் திரும்பும்படி செய்யவல்ல சேவகமானது அவனிடத்தே யுண்டு. இச் சேவகத்தின்கண்ணே இவன்

சித்தி பெறுவானோ மாட்டானோ என்பதைப்பற்றிச் சந்தேகம் வேண்டியதில்லை. அதினாலே, நெருங்கியிருக்கின்ற கூந்தலையுடைய மாந்தரிடம் தூதுசெல்ல வேண்டியதற்குரிய வல்லமையுண்டு.

223. இருக்கும் இருக்கும் - நாம் கூறியது வெற்றுரையன்று; உண்மையே என்க.

226. கால விளம்பனம் - காலத்தைக் கழித்தல். Delay is dangerous.

236. சிந்தனைசெய்து-யோசித்து.

239. சுரகுரு - தேவகுரு, வியாழன், பிரகஸ்பதி, பிரசுரன் - அசுரகுரு, சுக்கிராச்சாரி.

244. திருமேனி - மலைநாட்டரசனைத் திருமேனி யென்றல் அந்நாட்டு வழக்கு.

247. ஆஞ்சநேயன் - அநுமான், அஞ்சனாதேவியின் குமாரன்.

253. தரளம் - முத்து.

260. அங்கை-உள்ளங்கை, அகம் + கை - அகங்கை. ஆடி-கண்ணாடி.

262-263. சுமித்திரை பயந்த புத்திரன்-இலட்சுமணன். சுமித்திரை-தசரதன் மனைவி.

263. வீரவாகு - முருகக் கடவுளுக்குத் துணைவர்.

268. ["புறங்குன்றி கண்டனைய ரேனு மகங்குன்றி மூக்கிற் கரியா ருடைத்து" என்னும் திருக். (28 அதி. 7-ம்) குறளைக் குறிப்பித்துக் குடிலனுடைய வஞ்சகத்தன்மை நாராயணன்கூறுமாற் கூறுகின்றான்.

276. வாகு - தோள்.

278. ஒப்புநோக்குக:—"தேரா தெளிவுந் தெளிந்தான்க ணையுறவு தீரா யிடும்பை தரும்"—திருக்குற 51-அதி. 10-ம் செய்யுள்.

279-280. ஒப்பு நோக்குக:- "எனைவகையாற் றேறியக்கண்ணு வினைவகையான் வேறாகு மாந் பலர்"—திருக். 52-அதி. 4-ம் செ

289. உன்னுவ - நினைப்பவை.

303. கருப்போ - கரும்போ.

313. உறுப்புகள் - ஒப்பு நோ குக:—"படைகுடி கூழமைச்சு நட பர ணாறும், உடையான் அரச ளேறு"—திருக். 39 அதி. 1- செய்.

314. ஒருப்படில்-ஒருமைப்படில் ஒற்றுமைப்பட்டால், இணங்கினால்

316. இறந்த சிந்தையன்-சிந்தையற்றவன் - மனத்தில் இயற்கை குண மொழிந்தவன்.

332. சித்திரப் பார்வை யழு தார்க்கு - ஓவியத்துறை யுணர்ச் யற்றார்க்கு.

327. உறுகண் - துன்பம்.

306-309. பாம்பிற்கு விடம் யிலும் தேளுக்கு வாலிலும் ஆதலா யாவும் அடிமுதல் முடிவரை அரச கவனிக்கவேண்டுமென்பது கருத்து

[இக்களத்தில் நாட்டுவளம்-தினை மயக்கம் - நாதிலக்கணம் - செ கோன்மை அமைச்சு முதலிய ஒருவாறு கூறப்பட்டமை காண்க

# இரண்டாம் அங்கம்

## இரண்டாங் களம்

வைகறை - Early morning.

1-32. நடராசன் சூரியோதயத்தைப் பார்க்க விரும்பில், இவ்விடம் மிகவும் பொருத்தமான இடம். சூரியோதயத்தை நன்றாய்க் கண்டு பின் மற்றக் காரியத்திற்குச் செல்லுவோம். சித்திரமெழுதுவதில் கைவந்தவன். தான் படத்தில் எழுதப் புகுந்த சித்திரமானது அவனால் எழுதுதற்கு எடுத்துக்கொண்ட தூரியக்கோல் படுந்தோறும் உருவம் இன்னதென்று தெரிய வருவது போல் சூரிய கிரணங்கள் படப்பட பொருள்கள்மேல் படர்ந்திருக்கிற இருள் நீங்கிப் பொருள்களெல்லாம் விளக்கமுறக் காணப்படுகின்றன.

சூரியனுடைய பல வர்ணமுடைய கிரணங்கள் சராசரங்கண்மேற் படப்பட யாதொரு வடிவமுங் கண்ணுக்குப் புலப்படாதபடி ஏகமாய், துன்னிய காரிருட் பிழம்பானது மூடிக்கொண்டிருந்த தோற்றமானது போய், சிறிது சிறிதாய்ச் சராசரத்தின் உறுப்புகள் கண்ணுக்கு நன்றாய்ப் புலப்படும்படியாக விருக்குங் காட்சி மிக நன்றே!

உச்சிக் கொண்டையையுடைய சேவற்கோழியானது சுரைக்கொடி படர்ந்திருக்கின்ற வீட்டினுடைய முகட்டின் மீது கர்வத்துடனடைந்து பின் இரண்டு பக்கத்து இறக்கைகளையும் தட்டிப் பெரிய வாயைத் திறந்து ஒருதரங் கூவிப் பக்கத்திலுள்ளவர் தன்னைப் புகழ வேண்டிச் சுற்றிப் பார்க்கின்றாரைப் போல் நோக்குதல் மிக வினிதே.

இருளுக்குப் பகைவனான சூரியன் காகந் தங்களையு மிருட் கூட்டங்களென்று கொல்லுவானோ வென்று ஐயுற்று இரண்டு இறக்கைகளாகிய கைகளினால் தம்முடைய மார்பிலே புடைத்துக்கொண்டு கலக்கத்தையடைந்து கா! கா! வெனக் கூவிக் காகத்தொகுதிகள் தட்டுக்கெட்டுத் தடுமாறி எப் பக்கங்களிலும் தனித் தனிப் பறந்தோடுவது மிக அழகாயிருக்கின்றது.

பல வர்ணங்களோடு கூடிய இறக்கைகளுடைய பட்சிக் கூட்டங்கள் தத்த மினங்களோடு சேர்ந்து வட்டமிட்டுக்கொண்டு எங்கெங்குக் குடம்பை கொண்டனவோ அங்கங்கிருந்து முன்னெழுவன முன்னும், பின்னெழுவன பின்னுமாக எழுந்து காலம் வரையறை காட்டுமாபோல ஒத்தறுத்தடித்தல் குற்றமற்ற இசை நூலறிந்த கானமாக்களின் கூட்டம் போல, குற்றமற்ற பாடல்களாகிய பயிர்த்தலை வழங்கலும் இனிதே. அதுவென்-அதோ விரண்டு பட்சிகளும் ஒன்றுக்கொன்று செய்து கொள்வன என்ன! ஆஹா! ஓ! நானறிந்து கொண்டேன்.

மூக்கினால் விம்முகின்ற தங்கள் சிறகுகளை அடிக்கடி தடவுதலால், தங்களுக்கு ஒருவர்மாட் டுண்டாயிருக்கின்ற காதலை ஆணையிட்டுச் சொல்லிக் காட்டுவதுபோல், ஒன்றன்பின்னொன்று சென்று அன்பினைவிடாது பாராட்டுகின்ற இந்த இரண்டுபட்சிகளுஞ் செய்துகொண்டிருப்பதென்ன?

1. பரிதி - ஞாயிறு.

3. செவ்விதின் - செம்மையாக.

4. ஓவியம் - சித்திரம்; தீவியம் - தீலை. தீவியக்கிழி மீமிசைபோல் ஒருபொருட்பன்மொழி.

5. தீட்டுவான் தீட்ட, வான் ஈற்று வினையெச்சம். [கோல்.

6. தூரியம் - சித்திரமெழுதுங்

8. வணம் - வண்ணம், விதம்.

9. கருகு இருள் மயங்கிய காட்சி கழிந்து - காரிருட் பிழம்பானது மூடிக்கொண்டிருந்த தோற்றமானது போய்.

12. சூட்டு - உச்சிக்கொண்டை.

13. வீம்பு - தெம்பு.

14. அங்காந்து - வாயைத்திறந்து; அங்கா பகுதி.

15. உழை - பக்கம்.

17. இருட்பகை இரவி-இருளுக்குப் பகைவனாகிய ஞாயிறு.

18. காய்வனோ-எரிவனோ, கோபிப்பனோ.

20. மெய்யாந் தம் பெயர்விளம்பி-கா கா என்று கரைந்து.

22. தொழுதி - கூட்டம்.

25. ஒத்தறுத்து - ஓசையிட்டு. அடியா-அடித்து. எஞ்சல் . குறைதல்.

26. இசை - பண். ஈட்டம்-கூட்டம்.

29. தழையும் - செறியும், நெருங்கும்.

33. துகிர் - பவளம்.

33-39. பவளம்போலும் மூக்கினைய சாற்கற்களைச் சிந்திக்கிடக்கிற பழத்தைக் கொத்தினாற்போற் கொத்தி, அப்பக்கமு மிப்பக்கமும் ஒதுங்கி பொதுங்கி வெட்கமில்லாத வெட்கத்தைக் காட்டுகின்ற இப் பட்சியானது அப் பட்சிகளாற் காதலிக்கப்பட்ட பேடு.

ஆடவர் தம் காதலைத் தம் காதல் சென்ற தையலாரிடத்துச் சொல்லியக்கால் அத் தையலார் வஞ்சகமாய்க் கிரகித்துக் கொள்ளுதல் அவர்களுடைய சுபாவமாயிருக்கிறதுபோலும். (கூடகம் - அறிந்து மறியாததுபோலிருத்தல்).

40-51. துண்டம்-துண்டு, கூடம்-மறைவு.

வாணி ? ஏ பெண்ணரசி? உன் நாண் முதலிய நற்குணங்கள் நீடூழி வாழ்க. இவ்விடத்தே ஒரு நாள் நானுனைப் பார்த்தபொழுது வாசனையை விடாத கருநெய்தற் புட்பத்தை உன்னுடைய நெருங்கிய கூந்தலில் சூடும்படி கொடுத்தவுடன் நீ அதை மனதுடன் (அன்பாய்) புன்னகையோடு கையில் வாங்கினதும் அம் மலரை மதியாதவள்போல் அங்கே யோடுகின்ற வாய்க்கால் தண்ணீரில் ஓடச்செய்துவிட்டுச் சின்னஞ் சிறு பெண்களின் குறும்பு காட்டிச் சிரித்ததை நான் என்ன எண்ணிக்கொள்வேனோ வென்று நீ யெய்திய கலக்கப்பாடு இன்னும் என் கண்முன் நிற்கின்றது.

ஏ-வாணீ! பெண்கள் நாயகமே! நீ பயப்படவேண்டாம். நிச்சயமாக அறிவேன். என்னுடைய உள்ளத்தோடு உன்னுள்ளம் ஒத்துநின்ற பின் நம்மிருவருக்குள் ஆடிக்கொள்ளும் பேச்சும் செய்கையும் எதுவானா லென்ன ?

49. அழுங்கலே - வருந்தாதே.

50-51. இவ்வடிகள் "கண்ணொடு கண்ணிணை நோக்கொக்கின் வாய்ச்சொற்கள், என்ன பயனு மில" என்ற திருக்குறள் 110 அதி. 10-ம் செய்யுட் கருத்தமைந்தவை.

53. யார்கொல் - யாரோ (ஐயம்). சூழ்ச்சியென் - என்னைக் குறித்துப் பேசுகிறாள்.

நற்றாய்-ஈன்ற தாய் (சோர ஸ்திரீயின் தாய்).

என்னுடைய மகள் உன்பொருட்டாக நாணத்தையும் விட்டு நலத்தையுங்கெடுத்து உன்னை நம்பி வீணில் சம்பவித்த இந்தக் கேடுகளெல்லாம் அவள் சாகும் வரைக்கும் உலகம் சொல்லிக்கொண்டேயிருக்கும். நாங்கள் பெரிய குடியிற் பிறந்தவர்களாதலினாலேயே வாணியினுடைய வம்புரை (கல்யாணப் பேச்சு) கேட்க நாங்களஞ்சுகிறோம். நீ வருவாயா, வரமாட்டாயா ?

என்னுடைய மகள் உன்னுடன் சம்பந்தப்பட்டவளாதலினாலே நாணம் இழந்தவளாயினள். அந் நாணமிழந்த என் மகள் நீ வந்து அவட்கு நல்காமையினாலே இதோ சாவப் போகின்றாள். அதற்கும் வெகு நாட்களில்லை. அவளைப் பார்ப்பதற்கு நீயும் விரும்புவதில்லை. அவ

ளுனக்கெழுதி யிருக்கின்ற இந்த ஓலையில் அவளது நிலைமையைக் கண்டுகொள்வாய்.

இவ்வோலையை வாணிக்குத்தெரியாமல் நீ வாசித்து அறிந்துகொள். அப்படி வாசித்தறிந்த பின்னும் நீ வருவாயோ வரமாட்டாயோ. தன்னுடையநாயகி சாவக்கிடக்கின்றாள் என்று தெரிந்துங் காண விரும்பாத பாதகனே இவன்! (சாவக் கிடக்கின்றாள்—பிரிவாற்றாமையின் கண் வந்த சாவு.)

**ஆசிரியத்துறை 1.** — உகுத்து- சிந்தி. வீவுறும் - கெடும். வம்புரை- வீண் பேச்சு.

**ஆசிரியத்துறை 2.** — நவின்ற - சொன்ன. கள்ளலம் - களவு செய்கின்றிலேம். வெளவலம் - பற்றுகிலேம். காண - கண்டபின்.

**ஆசிரியத்துறை 3.** —விரும்பலை- விரும்பாதே. கொள்ளை - கொள்வாய். காணிய - காண.

"செல்லாமை யுண்டேல் எனக்குரை மற்றுநின், வல்வரவு வாழ்வார்க் குரை" (திருக்குறள் 1160.)

54. கேட்குதும்-கேட்போம்.

58. பழங்கதை - வாணியைப் பலதேவனுக்கு மணம்பேசி யிருப்பதாய்க் கேட்ட நற்றாயின் கூற்றுக்கு இவன் பொய்யெனக் காட்டும் பொருட்டுப் பழங்கதை யென்றான்.

61. கிழப்பிணம் - சகடன்.

64. பொற்றொடி - பொன்னலாகிய வளை, (மைச்சினி - தன் சோரகாதலிக்குப் பலதேவன் வைத்த முறை.)

71. அலகை - பேய்.

72. (கனிசம் - கண்ணியம், வழக்கச்சொல். அது - விவாகம். இது- சோரநாயகி போகம்.)

78. கடு - விடம், நஞ்சு.

79. கைத்தது-கசந்தது.

100. உசிதன் - பாண்டியன்,.

108. நிண்ணயம்-நிர்ணயம், வரையறை.

106-109. மதி எழுவாய், திடனே பயனிலை.

117. ஈரம் - அன்பு.

120. காதகர் - கொலையாளர்.

111-115. காதலென்னும் ஊழித்தீயின் முன்னே அப் பெண்கள் வார்த்தையை வைப்போமானால் கெடாதபடி நிற்றலுமுண்டோ? அப்போது வந்த மனஸ்தாபத்தினால் ஏவப்பட்டுக் கன்னியாயிருப்பேன் பலதேவனைக் கலியாணம் செய்வதினும் என்று சொன்னாளே யன்றிக் கன்னியாயிருப்பது அவள் மனசு தானோ? (அன்று). —

123. அலைபடித்தலானது கடற்கரையிலும் மேல் வெளியிலேயுமின்றி ஆழத்திலும் உள்ளுங் கலக்கமில்லை. அவர்க்கிலை யென்றதனால் பெண்களுக்கும் கடற்கும் ஒருங்கே கூட்டி யுரைக்கப்பட்டது (a) கடல் —1. கரை, 2. கயம் (b) பெண்கள் —1. வெளி, 2, அகம்.

124. கயம் - கஜம், ஆழம்.

125. வாட்டமும் மயக்கமும் பெண்களிடத்தே சார்வது அப் பெண்களது நெஞ்சி லெங்கேனும் ஒரு பக்கத்திலேயே யல்லாமல் அவர்களுடைய நெஞ்சினடியில் அன்பும் நினைத்திருப்பதை வெளிவிடாத வலியும், மெய்ம்மையிற் றெளிவும் உள்ளவர்களாக்கும்.

127-8- கொள்கை விள்ளா முரண் - கொள்கைகளை விடாது பற்றிநிற்கும் மனவுறுதி.

129. அம் மாதரது நிறையினை நீ யறியமாட்டாய். காற்றாடியானது சுற்றிக்கொண்டே இருந்தபோதிலும் தன்னுடைய சக்கர நிலையைப் பற்றிக்கொண்டே சுழலும். புருடர்கள் அப்படியல்லர். இப் பூதலத்தில் மானிடவுருக்கொண்டு திரிகின்ற இக்கொடிய பசாசங்களின் மூல

மாகவே பெண்கள் கேடடைவது. இவர்கள் ஆண் பிள்ளைகளா?

142-149. நீண்ட புகழின்கண்ணுள்ள இச்சையானது காற்றுகி நிலை இல்லாத எண்ணத்தை ஆட்டுவிக்க, போனபோன இடங்களிற் போய் நல்லறிவுமில்லாமல் அலைந்து கெட்டுப்போகாதபடி இல்லறத்திற் குரிய இடமாகி, சிறிய குடாவின் கண்ணே நிலைபெற நிறுத்துவதோர் நங்கூரமாயும், இன்னும் தாங்கள் செய்யுந் தொழில்களைச் செய்யுமாறறியாது மனமிடிந்து அவ்வினையை விட்டு ஆசை செல்லத்தகுந்த எல்லாத் திசைகளிலேயும் அலைந்து திரிந்து கெட்டுப்போகாதபடி அவ்வாடவரை நல்வழிச் செலுத்தி நிறைந்த அன்போடு கூடிய இல்லறத்தின்கண் வாழ்தலையே உள்ள நாள் உள்ளளவும் மனத்திற்கொள்ளப் பதித்துச் சிறப்புள்ள நல்ல சுகம் பொருந்திய இடத்திற் கொண்டுவந்து சேர்க்கின்ற சுக்கானும் வந்துதவியது மங்கையரன்றோ என்றறியமாட்டாத மனிதர், மிருகங்களினுங் கீழானவர்களாய் அன்ன பெண்களாற் பெறப்படுகின்ற சிற்றின்பத்தையே கைக்கொண்டு தங்களுடைய இல்வாழ்க்கைத் துணையாய் வந்த அப் பெண்டிரை, ஆழத்துக்குள்ளே இழுத்துக் கொள்ளுகிற சேறுக்குவர்.

143. இயக்க-செலுத்த. இயங்க-தன்வினை.

144. சென்றுழி-சென்ற இடம்.

148 எற்றுண்டு - மோதப்பட்டு.

161. நலிந்து - வருத்தி.

167-190. இவரது அறியாமை எத்தன்மையது-விரும்பிய எவற்றையும் வேண்டக் கொடுக்கும் கற்பக விருட்சமென்று கிஞ்சித்தாயினும் நினையாது அடியோடு வெட்டித் தள்ளி அவ்வளவையுந் தீயைப் போட்டுச் சுட்டுக் கரியாக்கவேண்டுமென்று நினைந்த கம்மாளனைப் போல் எல்லாந் தனக்கென்றே யபிமானிக்கின்ற ஒப்பற்ற மனத்தினது கோட்டத்தைத் திருத்தி மற்றவருடைய சுகதுக்கங்களையும் நம் சுகதுக்கங்களாக அன்பு புரியவும், மெல்லத் தனதுள்ளத்தின் கடும்பற்றினை யகற்றி, கமை, சாந்தி முதலிய நற்குணங்கள் படிப்படியாக வளரும்படியாகச்செய்து தன்னுடைய சித்தத்தின்கண்ணேயுள்ள அறிவையும் விளக்கி, நான் எனதென்னும் இருவகைப்பற்றினையும்ஒழியும்படிசெய்து எங்கும் நிறைந்திருக்கவும் தனக்கயலாய் நின்ற பேரின்ப வெள்ளத்தின் கண்ணே முழுகித் திளைக்கும்படி எவரையும் பக்குவப்படுத்தும் நல்ல பள்ளிக்கூடம் என்று இவ்வில்லறத்தை அறியும் நல்லறிவில்லாமல் ஆவுரிஞ்சு தறியைப்போல் புத்தியில்லாத காரியஞ் செய்யத்தொடங்கித் தம்மையும் பிறரையும் கெடுத்திடு மாந்தரின் கெடுமதி வியக்கத்தக்கது.

167. எற்றே-எத்தன்மைத்தோ?

170. முடிபுற - முடிவடைய

171. கம்மியன் - கொல்லன், கம்மாளன்.

173. மனக்கோள்-மனக்குற்றம், மனக்கோட்டம்.

184. தினவு - ஊறல்

190. உறையுள் - உறைவிடம்.

[இக் களத்தில் சூரியோதய வருணனையும் இல்லற இயல்பும் கூறினமை காண்க.]

## மூன்றாங் களம்

3. நுதி - நுனி, முனை. (கூரிய)

4. விரகம் - வேட்கை.

5. பரிபுரம் - சிலம்பு. பங்கயம் - தாமரை, இங்கு முதலாகுபெயராய் மலரை யுணர்த்திப் பின் உவமை யாகுபெயராய் மலர்போன்ற அடிகளை யுணர்த்திற்று. வருந்துபு - வருந்தி, செய்பு என்னும் வாய்பாட்டு வினையெச்சம்.

7. விண்ணணங்கு-தேவ மகளிர்.

12. நவ்வீ - அழகு.

17. நனவு-நினைவு, கனவு என்பதன் எதிர்மொழி.

21. முறுவல் - சிரிப்பு

28. உழுவல் - பேரன்பு, எழுமை யுந் தொடர்ந்த அன்பு.

30. வாரி - கடல்.

31. செக்கர்-செவ்வானம்.

32. ஊர்கோள் நாப்பண் - பரிவேட மத்தியில்.

36. அவணின்ற - அவள் நின்ற அல்லது அவண் நின்ற.

41. அயர்க்குமாறிலை - மறக்கும் படியாயில்லை.

46. அரசன் சத்திரியனாயிருந்த தினால் போர் வருங் காலத்தில் எல்லாவற்றையும் மறப்பான்.

(சத்திரியர்கள் எல்லாவற்றையும் மறப்பது போர் வருங் காலத்திற்றான்.)

51. கபவான் - கீழ்மகன், கைதவன் - பாண்டியன்.

52. போன்மே - போலுமே.

54-60. பொங்குகின்ற அலையை யுடைய சமுத்திரத்தாற் சூழப்பட்ட பூமி (எங்கோன்) கீர்த்தியைச் சுமக்கவும் குறுநில மன்னர்கள் தங்கள் குடங்கையில் தலைசாய்த்துத் தாங்கும்படி இடம்பார்க்கும் விசாலம் பொருந்திய வாசலையுடைய மேன்மைபொருந்திய திருநெல்வேலியில்.

55-56. எத்திசையினும் உள்ள மாற்றரசர் தலையை வெட்டிச் சாய்த்துஞ் சக்கராக்னையுமெங்குஞ் செல்லும்படி செலுத்தியும், உருட்டு செம்மொழிச்சிலேடை.

56. ஒன்னார் - ஒன்னலர், பகைவர். திகிரி - சக்கரம்.

57. குடங்கை - உள்ளங்கை. குறும்பர் - சிற்றரசர். குறுநில மன்னர்.

60. வேம்பார் - வேப்பம் பூமாலை யணிந்த.

66. புல்லார் ஈட்டம் - பகைவர் கூட்டம்.

67. அரவின் அரசு-ஆதிசேடன். ஞேரேல் - ஒலிக்குறிப்பு.

68. பிறவிக்கடற் பரப்பினும் அகன்றதாக. வறிதா-ஒன்று மில்லை யாம்படி.
பௌவம் - கடல்

69. ஆணவம் - மும்மலங்களில் ஒன்று. முற்றும் அழியாதது.

70. உரம் - பலம்.

69-73. ஆணவமலத்தினது ஆழமுங்கூட நாணும்படியாக அகழியொன்று பலமாய்த் தோண்டி அஞ்ஞானத் தொடர்பினும் (பந்தத்தினும்) அதிகமுள்ளதாயொத்த மதில் கூட்டங்களைக் காக்கும்படி விஷயப் பொருள்களிலே பாய்ந்து அமிழ்த்தி ஈர்க்கின்ற பஞ்சப் புலன்களைப் போல எண்ணில்லாதனவாகிய யந்திரப் படைகளையு மமைத்து.

78. பாடை - மொழி. பாஷையென்பதன் திரிபு. ஆசாரம் - ஒழுக்கம்.

79. சாக்கியம் - சாட்சியம், சான்று.

83. இறுத்து - தங்கி.

84. சதி - வஞ்சனை.

87. வல்லை - விரைவு, உடன்.

88. ஈண்டினன் - நெருங்கினன்

91. [இரவியும் திங்களுஞ்சமநிலை வருங்கால் திங்களின் சாயையால் சூரிய கிரகணம் நேரும் என்பது கணித சித்தாந்தம்.]

94-97. அப்படி யெதிர்ப்பட்டவர் வேறிடஞ் செல்லாது அந்தப் படியே நிற்பாராயின் இருளும் படியே மூடிக்கொள்ளும் தன்மை போல நீங்களிருவரும் (சூரிய வமிசத்தனாகிய நீயும் சந்திர வமிசத்தனாகிய எங்கோனும்) யுத்தஞ்செய்வீராயின் இவ்வுலகந் தாங்கமாட்டாதென்று கருதி இச்சபைக்கு என்னை யேவி.

114. விரை - வாசனை. அளி - வண்டு, இங்கு புருடோத்தமன். மலர் - மனோன்மணி.

118-121. வண்டைக் கொண்டு போய்ப் பூவில் விடுவானேன். குற்றமற்ற காதலானது தலைவன் தலைவியர்க்குத் தானே யுண்டானால் எங்களூட்டில் கலியாணஞ் செய்வதே தவிர வேறுவித மொன்றுமில்லை. அன்றியும் நமது சிம்மாசனம் இரண்டுபேர்க்கு இடங்கொடாது.

120. கோதறு - குற்றமற்ற.

121. வேட்டல் - மணத்தல்.

129. அடி இறை-அடியில் இறையாக. இறை-இறுக்கப்படும் பொருளாகிய வரி, கப்பம்.

130. புரவலர் - அரசர், புரத்தலில் வல்லவர். புரத்தல் - காத்தல்.

131 - 132. அவாவிய மங்கல நாண் - விரும்பிய தாலிக் கயிறு. நாணம் - பெண்களுக்குள்ள நாற்குணங்களில் ஒன்று.

143. அரிக்கு - சிங்கத்துக்கு. நேர் - ஒப்பு.

159-161. இப் பலதேவனை யிங்குத் தூது விட்டவன் முற்றும் அறிவிலி. அவனுக்கு (முட்டினபின் குனியும் புத்தியாதலால்) குட்டிக் காட்டினாலொழிய அறியப்போகிறதில்லை. குட்டிக் காட்டுதல் - போரில் தொலைத்தல்.

பச்சாத்தாபப்படுத்துவோம் - ஏனிப்படித் தூதனுப்பினோ மென்று பரிதாபப்படச் செய்வோம்.

161. பச்சாத்தாபம் - கழிந்ததற்கு இரங்குதல், 'கழிவிரக்கம்.

166. இதுகாறு - இதுவரை.

171. மூவர் - திரிமூர்த்திகள் - அயன், அரி, அரன். அசுரர் - தேவர்களுக்கு மாறானவர். சுராபானஞ் செய்யாதவர்.

172. பகடி - கேலி.

179. அலால் என்பதற்குப் பதில் அதில் என்றும் பாடம் கொள்ளலாம்.

183. திட்டம் செய்வான் - ஏற்பாடு செய்ய.

---

## மூன்றும் அங்கம்

### முதற் களம்

1. தனையன் - குமாரன், புதல்வன். தனயை - பெண்பால்.

6. ஐயுறல் - சந்தேகப்படாதே, எதிர்மறை ஏவல்.

7. பழுது - குற்றம்

10. மதியில் முதியோன் - அறிவில் முதிர்ந்தவன்.

15. தொல்மொழி - பழமொழி.

16. மருளும் - மயங்கும்.

18. கன்றும்-கோபிக்கும், சினம்-கோபம்.

21. திருவும் வெருவும் உருவம் - இலக்குமி தேவியும் பயப்படும் அழகும்.

26. செறித்திடும் சிறையினை - அடைக்கும் அடைப்பை அல்லது அணையை.

29. மலைவு - மயக்கம், தியக்கம்.

35. தகைத்து - தகுதியையுடையது.

39. பிறழா மாறுபடாத.

42. மம்மர் உழன்றவன்-மயக்கத்தில் வருந்தினவன், உழல் - பகுதி,
46. பணி ஆற்றுதும் - தொண்டு செய்வோம்.
49. இயம்பல்-சொல்லுதல், அல் ஈற்றுத் தொழிற்பெயர்.
53. பரிவுறல் - அன்புகூர்தல்.
61. ஒருபடித்தன்று - ஒருதன்மையதல்ல.
62. உஞற்றுவன் - செய்வன்.
64. ஏமாப்பு - இன்பம். ஏமா - பகுதி.
76. உன்னுன் - நினைக்கான்.
81. உரனும் - வலியும்.
86. மலையன் - சேரன்
94. நயந்திலன் - விரும்பிலன்.
105. வெறுக்கை-செல்வம்.
108. துணை - அளவு. தினை, பனை ஈண்டுச் சிறுமை பெருமையை உணர்த்துவன.
114. அற்றம் - சமயம், காலம்.
127. உன்மத்தன் - பைத்தியக்காரன்.
134. காண்டி - காண்பாய்.
135. செரு முகத்து - போர்க்களத்தில்.
138. ஆலவாய் - மதுரை.
141. கிதவர் - வஞ்சகர்.
144. தவில் - கொட்டு.
151. விழுமிய-சிறந்த, விழுமம்-சிறப்பு, உரிச்சொல்.
158. ஓர்ந்து - ஆராய்ந்து.
164. கோழையர் - உறுதியற்றவர்.
167. விதிர்விதிர்ப்பு - நடுநடுக்கம்.
174. வௌவு - களவுசெய்.
177. இவ்வடியின் கருத்து ஆங்கிலத்தில் Crocodile tears - முதலைக்கண்ணீர் என்பதோடொத்தது. அதாவது முதலை தான் கொன்ற மிருக முதலியவற்றைத் தின்னும்போது கண்ணீர் விடுக்கும் என்பது உலக வழக்கு.
180 ஓவாது - இடையறுமல், நீங்காமல்.

---

## மூன்றாம் அங்கம்
## இரண்டாங் களம்

1. கடிநகர் - காவல் நகரம்.
3. முடுக்கினும் - விரைவுபடுத்தினும். துன்று அரா - நெருங்கிய பாம்பு.
4. முழுமதி - உவாமதி. காட்சி-தோற்றம். செவ்விது - அழகிது
3-5. இராகுவாகிய கரும் பாம்பினாற் பிடிக்கப்பட்ட நிறைமதியினது தோற்றத்தினும் அழகிதாகிய பின்னி விடப்பட்டுள்ள கூந்தலையுடைய பேதைமைக் குணமுள்ள வாணியின் இளமை மாறாத முகம்.
6. பணி - தொழில்.
9. இம்மை - இப்பிறப்பு.
10. இலக்கு - குறி (Aim.)
14. காண்டி - காண்பாய். குறிப்பு - நோக்கம்.
15. அடி - அடியிரும்.
16. அருத்தி - உண்பித்து; அருந்தி - தன்வினை, வினையெச்சம்.
18. பராகம் — தாது, பொடிதுகள். பரப்பித்து - பரப்பி. பலம், பயன்.
19. ஆசு - உள்ளீடு.
20. தூசு - துகில், ஆடை தோட்டி - துறட்டி.
22. சிறார்-சிறுவர், அண்மைவிளி.
23. புள் - பறவை. அயத்து - குதிரையின் அல்லது ஆட்டின்.
26. புலன் - அறிவு.
30. பனிப்ப - துளிக்க.
31 - 32 [தாவர சிருட்டிகளின் செய்கை விசித்திரங்களிலும் தெய்வ அருள் நிறைந்துகிடக்கும் தன்மையை இவ்வடிகள் விளக்குகின்றன.] புல்லினிடத்து, சிறந்த இடத்துள்ள உணவைப் பெற்று விருந்தினரை அழைத்து அருத்தி வாசனைச் சுண்ணந் தந்து மக்களைப் பெற்று மக்களால் பிறரை ஆடைபற்றி ஈர்த்தும்,

மக்களைப் புள் முதலியவற்றின்மேல் ஏற்றிப் பல இடங்களுக்கு அனுப்பியும் ஆகும் செயல்கள் ஆரோபிக்கப் பட்டன.

32. என்பு-எலும்பு. திளைப்பர்-அநுபவிப்பர்.

35. விசித்திரம் - அற்புதம்.

41. ஈர்த்து-இழுத்து. [ளம்

42. முந்நீர்மடு - கடலாகிய பள்

43. காலத்தச்சன் - காலமாகிய தச்சன்.

46. அண்டயோனியின் ஆணை - சூரியன் நியமனம் அல்லது கடவுளின் கட்டளை. அண்டம் - உலக உருண்டை. அண்டயோனி - உலக உருண்டைக்குக்காரணமானகடவுள்

48. தூங்கி - தாழ்ந்து, தொங்கி.

49. பூமியின்குடர் - நிலவெடிப்பு, குடர்-குடல் என்பதன் போலி.

57. எழிலி - மேகம், எழுதலையுடையது.

59. நிரந்தரம் - எப்பொழுதும்.

61. [யான் தடுப்பதால் வரும் காலதாமதத்தைப்பண்ணி நீ இரைகின்றாய்போலும்; இனி அழவேண்டாம் விடுகின்றேன் என்பது பொருள்.]

65. பேறு-பெறுவது, பெறுதல்.

33-65. [பூதபௌதிகங்களாகிய சடபதார்த்தங்களின் சலனங்களினும் அசைவுகளினும் விளங்கும் அருள் விசேடத்தை இவ்வரிகள் காட்டுகின்றன.]

67. ஓவாப்பாடு-ஒழியாத்துன்பம்.

68. இவ்வடிப் பொருள் 'சுழன்றும்ஏர்ப் பின்னது உலகம் அதனால் உழந்தும் உழவே தலை.'—குறள் அதி. 104. செய் 1. 'உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்'—குறள் அதி. 104, செ. 3 என்ற குறள்களை நினைப்பூட்டுவதாம்.

73. வேதித்து - பேதித்து, வேறுபடுத்தி.

81. விழு - சிறந்த.

82. துதிக்கலம் - போற்றுகிறோமில்லை.

66-82. [கிருமி கீடாதிகளாகிய அற்ப சீவசந்துக்களிடத்திலும் பேரருள் அமைவுற்றிருப்பதை விளக்க எடுத்த இவ்வரிகள், கேவலம் ஓரறிவுயிராகிய நாங்கூழ்ப் புழுவின் செய்கை விசித்திரத்தை வருணிக்கின்றன. புற் பூண்டு கூடவும், முளைப்பதற்குத் தகாத சாரமற்ற மண்ணினையும் நாங்கூழ்ப் புழு மென்று பசைப்படுத்தி வெளிப்படுத்துகின்றதென்பது (உயிர் நூற்றுணிபு) அங்ஙனம் வெளிப்படுத்திக் குழிகள் மறையும்போது தன் கீழ்ப்பக்கத்தில் ஒட்டியிருக்கும் ஒரு உருளை மண்ணால் நாங்கூழ்ப்புழு அக்குழித் துவாரத்தை அடைத்துக் கொள்வது கவனித்தால், யாரும் காணலாம்.]

85. வாணாள் என்னே-வாழ்நாள் பயனற்றது என்றபடி.

86. அலகு - எல்லை. இலகிய - விளங்கிய.

87. கதிர் - கிரணம்.

88. சிற்றாடி - சிறு கண்ணாடி. [சூரிய கிரணங்களை ஒன்றுசேர்த்து அக்கினி விளைவிக்கும் சிறுகண்ணாடி. (Hand Lens) மையம் - நடுவிடம் (Focus).]

86-89. உலகில் பரந்து கிடக்கும் பொருள் தன்மைகளாகிய வெய்யோன் கதிர்களைத் திரட்டிக் கூடும்படி வைத்தொரு சிற்றாடியின் மையத்தை ஒத்த மனத்தையும் உடம்பையும் பெற்றும் சிலர் தீயநெறி செல்கின்றனர்.

90. தீயன் - பலதேவன்.

91. சினக்கனல் - கோபத்தீ.

92. கிருபணன்-லோபி. தீனன்- [ஏழை

93. மங்குல்-மேகம்.

94. படாம் - துகில்.

96. பொதியில் - பொதியமலை. பொதுவில் என்பதன் போலி. பொற்பு - அழகு. கரு - பொன் உருக்கி வார்க்கப்படுமிடம், ஈண்டு முகடே கருவாம்.

97. ஆடகம் - பொன்.

100. துவண்டு-அசைந்து; துவள் பகுதி.

101. பதாகையின் தொகுதி - கொடிக் கூட்டம்.

வஞ்சித் தாழிசையாவது இருசீரா லாகிய அடி நான்கையுடைய செய்யுள், ஒரு பொருள்மேல் மூன்றாய் வருவது.

வஞ்சித் தாழிசை 1. அரிகாள் - பகைவர்களே! சஞ்சிதம் - மிஞ்சியிருப்பது. ஒருயிர் செய்த வினைப் பலன்களை அவ்வுயிர் நுகரும் பொருட்டு எடுக்கும் பிறப்பில் நுகரக்கொடுப்பதாகிய பலன் பிராரந்துவம் என்றும், அப்பிறப்பிற்செய்யும் வினைப்பலன் ஆகாமியம் என்றும், எடுக்கும் பிறப்பில் நுகரக் கொடுக்கப்பட்டதுபோக மிஞ்சியிருக்கும் பலன் சஞ்சிதம் என்றும் சொல்லப்படும்,

2. மஞ்சளம் - அழகு, கடிஞை - பிச்சைப் பாத்திரம்.

3. எள் - தர்ப்பண எள். துஞ்சிய பிதிர்க் கூட்டம் - இறந்துபோன மாதா பிதாக்கள் முதலியோர்.

109. வயம் - வெற்றி.

111. வஞ்சித்தொடை - வஞ்சிப் பூமாலை, இது போருக்குச் செல்வோர் அணியும் மாலை, தொடை - தொடுக்கப்படுவது. தண்ணுமை - மத்தளம்.

112. பொருவு-ஒத்த.

113. உருமு - இடி.

117. வேட்டல்-மணத்தல்; வேள்-பகுதி.

118. குரம் - காற்குளம்பு.

120. விலோதனம் - கொடி.

122. அசலத்திரள் - மலைபோன்ற தேர்க்கூட்டம்.

119-122. கொய்யுளைத் திரைக் கடற்கூட்டம்-குதிரைகள் கூட்டம். மதம்பெய் மைம்முகி லீட்டம் - யானைக் கூட்டம்.

123. நெல்லை-நெல்வேலி, மரூஉ.

124. அந்தோ அந்தோ - அடுக்கு, இரக்கம்பற்றியது. கிழமை

144. ஆதித்தவாரம் - ஞாயிற்றுக்

147. ஆமைப்பலகை-ஆமை வடிவாகச் செய்யப்பட்ட பலகை, கூர்மாசனம். கூர்மம் - ஆமை.

172. காக்கைச் சுப்பன் - (இரும்படி ராமன்) கிராமாந்தரப் பெயர்.

185. குடகன் - சேரன்.

192. படியோர் - உலகினர்.

197. திருவார் - ஆர் ஒப்புப் பொருள்.

202. தேற்றம் - தெளிவு.

203. சுகம் - கிளி.

209. அங்காடி - கடைத் தெரு.

211 புரை, ஓட்டை, துவாரம், துளை.

213. அந்தரங்கம் - இரகசியம், அருமறை.

215. உழையுளார் - பக்க மிருப்போர், மந்திரி முதலியோர்.

[இக்களத்தில் சூரியாத்தமனமும், சராசரங்களிற் றேற்றும் திருவருள் வைபவமும் ஒருவாறு வருணித்தமை காண்க.]

---

## மூன்றும் அங்கம்

## மூன்றுங் களம்

1. நள்ளிரா - நடுநிசி.

4. இருப்பல் - இருப்பேன்; அல் ஈற்று வினைமுற்று.

11. கையறு - செயலற்ற, மிகுந்த துன்பநிலை.

13. அரவம் - சத்தம்.

15. கீண்டல் - கிளறுதல், கீள் பகுதி.

23. கண்ணுளார் - கண்ணுக்குளிருக்கின்றார்.

25. எண்ணவும் படாஅர்-நினைக்கப்படவு மீட்டார். எண்ணுளும் உளார் - நினைக்கப்படவு மிருக்கின்றார், மதிக்கப்படுதலு முள்ளவர்.

29. சித்திரரேகை - சித்திரலேகை; வாணசுரன் மகள் உஷையின் தோழி.

32. பாடு - துன்பம்.

34. உளை - உள்ளாய்.

34. [கண்டுபழகும் பாக்கியம் நாம் பெற்றிலேம் என்பது கருத்து.]

36. தேக்கிய - தங்கிய.

37. ஒவ்வும் - பொருந்தும்.

## சிவகாமி சரிதம் உரை

1. மௌனம் - வாய் பேசாமையும் மனம் விடயத்திற் செல்லாதிருத்தலும். இது மோனம் என்று வழங்கப்பெறும். 'மோனம் என்பது ஞான வரம்பு' என்பது ஔவை **அருண்மொழி**. தவம்-தபம்; தபித்தல் அதாவது ஒறுத்தல், வருத்துதல்: மனம் பொறிவழி போகாது நிற்றற் பொருட்டு விரதங்களால் உண்டி சுருக்கலும் கோடைக் காலத்தில் வெய்யிலில் நிற்றலும் முதலிய செயல்களை மேற்கொண்டு, அவற்றால் தம் உயிர்க்கு வரும் துன்பங்களைப் பொறுத்துப் பிற உயிர்களை ஓம்புதல் தவமாம். சுழன்று - சுற்றி; சுழல் பகுதி. தான் உண்மைக் காதலனை வெறுத்துப் பொய்க் காதலரை விரும்பித் துன்புற்ற கொடியன் ஆதலின் 'பாவி யொருவனை' என்றான். உறுவை-ஐ விகுதிபெற்ற முன்னிலை ஒருமை வினைமுற்று. அடவி - காடு.

2. தான் பகல் முழுதும் வழி நடந்து அலைந்தும் அடவியைக் கடத்தற்கு வழி காணாமையால், 'வளரும் அடவி' என்றான். ஒருவன் தன் நிழலைக் குறிக்காமல் அளக்கப் புகின் அளக்குந்தோறும் அது நீளுமாதலின், 'தன் நிழலை அளக்குந் தன்மையென' என்று உவமை கூறினார். இதில் அஞ்ஞானத்திற் சிக்குண்டு கடப்பதில்லை; உடல் ஒழிந்து முத்தியடையும் வழி யுளதேல் அதனைக் காட்டி யருள்வாய் எனப் போக்குரையும் காண்க. அவ்வுரைக்கேற்ப மோனத் தொடை கருதாது 'மாறும்' எனப் பிரித்துக் கொள்க. ஆரிருள்-அருமை யிருள், பண்புத்தொகை; கடத்தற்கரிய இருள் என்றும் பொருள் கொள்ளலாம். வரை - இடம், எல்லை. ஆர்-நிறைந்த. வீடு-விடுவது வீடு; முதனிலை திரிந்த தொழிலாகு பெயர். பந்தம் விட்ட இடம் முத்தி, களைப்பு விட்ட இடம் வீடு.

3. இச் செய்யுளில், உலகப் பற்றுடையார் இக்ககனமாகிய வெளியை அணையார் என்றும், இதிற் சென்று உறையின் அறியாமையில்லை என்றும் இந்த அறிவு வெளியே என் வீடென்றும், அகப்பற்றுப் புறப்பற்று ஒழிந்த பெரியோர்க்குப் பந்தம் அடைதல் இல்லையென்றும் உள்ளுறைப் பொருள் தோன்றுதல் காண்க. சிந்தையற - மனத்திற் பொருந்தும் அகப்பற்றுப் புறப்பற்றுக் கெட. இக்கருத்து, "சினமிறக்கக் கற்றாலும் சித்தியெல்லாம் பெற்றாலும் **மனமிறக்கக்** கல்லார்க்கு வாயேன் பராபரமே" என்ற **தாயுமானவர்** வாக்கினுங் காண்க. ககனம் - காடு.

4. காமம், வெகுளி, மயக்கம் என்னும் மூன்று குற்றங்களையும் ஒழித்துச் செம்பொருள் காண்பதாகிய அறிவுடையராதலின், 'அறங்கிடந்த சிந்தையர்' என்றார். பிறப்புக்கு ஏதுவாகிய ஐம்பொறிகளை யொழித்தவர் என்பார், 'ஆசையெலாம் துறந்த அதிவீரர்' என்றார். பணி - பாம்பு. பணிப்பாய் என்றால் அது திருமால் பள்ளிகொள்ளுகிற ஆதிசேடனாகிய பாயைக் குறிக்கும். இதில் அவர் பணிப்பாயும் பூவணையும் உன்னார் என்றமையால் ஆதிசேடனாகிய திருமால் பள்ளி கொள்ளுகிற இடத்தையும், அயன் தங்கியிருக்கிற தாமரை மலரையும் விரும்பாது வீட்டின்பம் (முத்தி) ஒன்றையே விழைகுவர் என்று உள்ளுறையாகப் பொருள் கொள்ளக் கிடத்தல் காண்க.

5. ஆகும் என்பது ஆம் என நின்றது; போகும் - போம் என்பது போல. இதனை "முற்றேல், உயிரு முயிர் மெய்யு மேகலு முளவே" (நன். சூ. ௩௪௧) என்பதனால் அறிக. சலிப்பு - களைப்பு. விடியும்-நீங்கும்.

6. அம்முனிவனது வாய்ச்சொற்கள் அன்போடு கலந்து வஞ்சனை

யில்லாதனவாய்க் கேட்டார்க்கு இன்பம் பயத்தலின், 'என்றுரைத்த இனியமொழி யிருசெவியுங் குளிர' என்றார். இனிய - குறிப்புப் பெயரெச்சம்; இனிமை பகுதி, அ-குறிப்புப் பெயரெச்ச விகுதி. இரு செவியும் என்புழி உம்மை முற்றும்மை பொருளது. பழம்பிணைவாவது சிவகாமி என்னும் ஆண்மகன் தன் மாமன் மகளோடு இளமையில் அவன் நிழல் போற் பிரியாமற் கூடியிருந்த தன்மையாம். வணங்கா - வணங்கி; செய்யா என்னும் வாய்பாட்டு இறந்த கால வினையெச்சம் செய்து என்னும் பொருளில் வந்தது. அறிவுடையனுப் பிறப்பினை யஞ்சி வீடு பேற்றின்பொருட்டுத் துறந்தானுக் குரிய அறத்தை மேற்கொண்டுளா னாதலின், 'நல்முனிவன்' என்றார். பனித்து - நீர் துளித்து. நனி - மிகுதி.

7. இந்திரசாலமாவது மந்திரம் மருந்து முதலியவற்றால் ஒன்றினை மற்றொன்றாகக் காட்டுதலாம். இந்திரசாலம் (Black Magic) செய்வோன் தன் வித்தையைக் காட்ட மேடையில் இட்ட திரைச்சீலையைப்போல் எட்டுத் திசையிலும் இருள் பரவியது என்பதாம். நகை - சிரிப்பு. தொழிற்பெயர், நகு பகுதி, ஐ தொழிற்பெயர் விகுதி. இழைக்க - செய்ய. அந்தரம் - ஆகாயம். அறை - தெரிவி.

8. அன்றில் என்பது ஒரு பறவை. அஃது எப்பொழுதும் ஆணும் பெண்ணுமாக இணைபிரியாது நிற்கும். இரவில் கணப்பொழுது ஒன்றைவிட்டு ஒன்று பிரிய நேர்ந்தக்கால் அத்துன்பந் தாழாது இரண்டு மூன்று முறை கத்திக் கூவியும் தன் துணையைக் கூடாவிடின் உடனே இறந்துபடும் என்பது கவி மரபு. அன்றில் வடமொழியிற் க்ரௌஞ்சம் என்றும், தமிழில் குருகு என்றும் வழங்கப்பெறும். ஆண் அன்றிற்பறவை 'அகன்றில்' என வழங்கும். இணை-இரண்டு. பிரிய-பிரிதலால் என்பது பிரிய எனத் திரிந்தது. இணை-இணைதல்; முதனிலைத் தொழிற்பெயர். இணைபிரிய-இணைதலினின்றும் நீங்க. இடையிடையே - அடுக்குத்தொடர். இவ்விருவருடைய அன்பின் நிலையை எவர் அறிபவர் என்று தெரிவித்தல் போல மரங்கள் கண்ணீர் சொரிவன என்க. கண்ணீர் என்பதற்கு உவமானப் பொருள் கொள்ளும்போது கள் நீர் எனப் பிரித்துத் தேனாகிய நீர் எனவும் உவமேயப் பொருள் கொள்ளும்போது கண் நீர் எனப் பிரித்துக் கண்ணினின்று வரும் நீர் எனவும் இரட்டுறமொழிக. அவ்வாறே, அகமுடைந்து என்பதற்கு உவமானப் பொருள் கொள்ளும்போது பூவின் அகம் நெகிழ்ந்து எனவும், உவமேயப் பொருள் கொள்ளும்போது உளம் வருந்தி எனவும் இரட்டுறமொழிக. மரங்கள் தங்கள் பூக்களிலிருந்து தேனைச் சொரிதலானது இணை பிரிந்த அன்றிற் பறவைகளின் கூவுதலைக்கேட்டுக் கண்ணீர்விட்டு அழுதல்போன்றிருக்கின்றதுஎன்று ஆசிரியர் கூறுகின்றார். என்பு-எலும்பு. அகம் - உள். தூவ - சொரிய.

9. சால வித்தையாகிய வேடிக்கையைத் தெரிவித்து ஆங்காங்குள்ளவர்களை அழைப்பவர்போல வௌவாற் பறவைகள் அக்காடு முழுவதும் இரவில் அங்குமிங்குமாய்த் திரிந்தன என்பார், 'விந்தை நடப்பது தெரிக்க விளிப்பவரின் வாவல் விரைந்தலைய' என்றார். இருள் செறிந்த அக்காட்டில் அழைப்பவரது பின்னே விளக்கேந்திச் செல்பவனைப்போல, 'மின்மினியும் விளக்கொடு பின்னுட' என்றார். மின்மினியும் விளக்கொடு பின்னுட - மின்மினிப் பூச்சியும் ஒளியுடன் பறக்கவும் எனலும் ஆம். விளிப்பவரில் என்பதில் இல் ஐந்தனுருபு ஒப்புப்பொருளது. விந்தை - வித்தை. அந்தி - மாலைப்பொழுது. இறு - தங்கு.

10. இருள் சூழ்ந்த அக்காட்டில் (பாம்பின் சுடிகையிலுள்ள மாணிக்

கத்தின்) நாகரத்தின ஒளியும், யானைக்கொம்பின் ஒளியும், புலியி னது கண்ணின் ஒளியும் அன்றி வேறு எவ்வித ஒளியும்இல்லை என்ப தாம். கறையடி - யானை; அன் மொழி. கறை - உரல், உரல் போன்ற அடியையுடையது. பொலன் - அழகு. உழுவை - புலி. பொறி - புள்ளி. சுடிகை - உச்சிக் கொண்டை.

11. ஊசி சென்ற வழியே அதிற் கோத்த நூல் செல்லுதல்போல முனிவன் சென்றவழியே அம்மைந் தன் சென்றான் என்க. புதல்-புதர், ஈற்றுப்போலி. புதல் - குத்துச் செடி. அக்காட்டில் புதர்கள் நெருங் கிக் கிடக்கின்றமையால் இடை யிடையே அகற்றிச் சென்றனர் என்க. பேர் அயர்வு; பெருமை+ அயர்வு, தொழிற்பெயர். அயர்வு - தளர்ச்சி.

12. அம்முனிவனும் மைந்தனும் செல்லும் வழியில் முட்காடுகள் ஒன்றோடொன்று நெருங்கிக் கிடத் தலால் அவற்றை யொதுக்கிச்சென் றனர் என்பார். 'ஒருங்கார நிறை முளரி யுழை யொதுக்கி நுழைந் தும்' என்றும், அவ்விருவர் செல் லும் வழியில் மலைகளின் குகைகள் ஏற்றிழிவு முதலாயின குற்றங்க ளுள்ளனவாதலின் 'உயர்மலையின் குகை குதித்தும்' என்றும் கூறினர். முளரி - முட்காடு. ஆர - செறிய. செயவெனெச்சம் காரணப் பொருட்டு, ஆர்—பகுதி. கானம் நதி - காட்டாறு.

13. அம்முனிவனால் மூட்டிய நெருப்புக் கொழுந்துவிட்டுக் காற் றால் வளைந்து அசைதல் ஆங்கு வரு பவரை அழைத்தல்போ லுளதென் பார், 'தன் நுண் நிறுவுதலை வளைத்து அழைக்கும் நெருப்பொன்றும்' என் றார். அம்முனிவன் தங்கிய இடம் சிதாகாச வடிவமாதலின், மனைக் குரிய வாயில், பூட்டு, மதில் முதலி யனவின்றி விளங்கியது என்றார். ஒன்றும்-சிறிதும். நுண்-நுண்மை. மரபு - முறைமை.

14. வேம்பு தான்றி முதலிய விறகுகளை யொழித்துத் தவத்திற் குரிய ஆல், அரசு முதலிய விறகுகள் என்பார் 'நிமல விறகு' என்றார். பத் தரில், இல் ஐந்தனுருபு; ஒப்புப் பொருள். விமல - தூய்மையான.

15. பனிப்பு - நடுக்கம்; தொழிற் பெயர். பல மூலம் - பலத்தைத் தரும் கிழங்கு, பலவாகிய மூலங்கள் எனினு மமையும்; இது தொகுதி யொருமை.

16. தம்முடைய நாவினாலேலுண் டலியை எழுப்பி ஒரு விரற்கடை தூரத்தைக் கடந்து, அமுதகலையை யுண்ண வகையறியாது, முத்தியைப் பெறக் கடலையும் பல மலைகளையும் கடந்து சென்று திரிகின்றமையால் யாதொரு பயனுமில்லை யென்ப தாம். சாகரம்-கடல். சகர புத்திர ரால் தோண்டப்பட்டது; தத்தி தாந்த நாமம். மதி-அறிவு. கந்தம்- கிழங்கு. அனந்த - அளவற்ற. வகுத்து - ஒழுங்குபடுத்தி.

17. உறைதி - தங்குவாய், ஏவல் முன்னிலை வினைமுற்று; உறை பகுதி, இ - ஏவல் முன்னிலை வினை முற்று விகுதி; த் எழுத்துப் பேறு, இகர விகுதியே எதிர்காலத்தைக் காட்டிற்று. திருந்த - செம்மையாக.

18. முனிவர் தம்முண்மையுணர் வாராயின் எங்ஙனம் சபித்திடு வாரோ என்னும் அச்சத்தால், 'அருகே ஏகாமல் எதிர் ஒன்றும் இசையாமல் தனியே மனமிறந்து புறம் ஒதுங்கி வறிதிருந்த மகன்' என்றார். இறந்து - கடந்து. ஈண் டுக் குழைதல் மேற்று. மலைவு - மயக்கம். பகர் - கூறு.

19. முனிவர் பெண்ணென்று தெரிந்துகொள்ளாதபடி பாதி முக மதியை ஒரு கைப் பதுமமலரால் மறைத்ததாகும். முகமதி என்பதும் கைப் பதுமமலர் என்பதும் உருவ கம். சூரியனைக் கண்டால் தாமரை மலர்வதும் சந்திரனைக்கண்டால்கூம் புவதும் இதனால் அறியக்கிடந்தது.

20. பூனைக்குட்டி எலியைப்பிடிக் கும்போது அவ்வெலியைப் பிடிப்

பதும் விடுவதும் இயல்பாதலால் அங்ஙனமே அக்கினியும் கொழுந்துவிட்டெரியுங்கால் விளங்கியும் தணியுங்கால் அடங்கியும் இருத்தலால், ‘எலி பிடித்தலைக்கும் சிறு பூனை’ உவமை கூறப்பட்டது. சிறு பூனை என்றது பூனைக்குட்டியை. இது முதல் நூலிற் கண்டது. அக்கினி சடசடவென்னும் ஒலியோடு கொழுந்துவிட்டு எரிதலை. ‘விந்தையொடு நடம்புரிந்து’ என்றார். வீங்குதல்-அதிகரித்தல். வாங்குதல்-உட்கொள்ளல்; வளைதலும் ஆம். திகழ்ந்து -

21. இத்தகைய அன்புடைய மௌன முனியை வெறுத்தமைபற்றித் தனக்குண்டானவருத்தத்தாலும் நாணத்தாலும், ‘மொழியாதும் புகலாது விழிமாரி பொழிய முகங்கவிழ’ என்றார். குறி என்றது முகக்குறியை. குறி-அடையாளம். எல்லாப் போகங்களும்அனுபவித்தற்குரிய பருவம் இளமையாதலால் ‘எழிலாரும் இளமையினில்’ என்றார். இடையூறு - துன்பம், முதனிலை திரிந்த தொழிற்பெயர். புகல் - சொல். வதிந்த - தங்கிய. எழில் - அழகு. இவண் - இவ்விடம்.

22. இருப்பது - வினைமுற்று, பெயர்த் தன்மை யடைந்தமையால் ஒன்றன்பாற் படர்க்கை வினையாலணையும் பெயர். ஓதாய் - சொல்லாய்; ஏவல் வினைமுற்று; ஓது பகுதி, ஆய் ஏவல் வினைமுற்று விகுதி, எதிர் காலத்தை யுணர்த்திற்று. கழறாய் என்பதும் அது. இழந்தனையோ வரும் பொருளை என்று கொண்டு வரும்பொருள் என்பதற்குக் கிடைக்கவேண்டிய பொருள் என்று கூறினு மமையும். மெய்விடுத்துக் கழறாய் - அதாவது உன் உடம்பின் உண்மை இயலை வெளிப்படையாகக் காட்டிச்சொல் எனலும் ஆம்.

23. அஞ்ஞானம் நிறைந்த இவ்வுலகத்தில் தோன்றும் சுகம் துக்கமேயாதலானும் அச்சுகம் இன்பம் பயப்பதாயினும் ஒரு கணப்பொழுதும் நிற்காமல் அழியும் ஆதலானும், ‘இவ்வையகத்தில் அமைந்த சுகம் அனைத்தும் அழலால் இங்கெழுந்தடங்கு நிழலாக நினையாய்’ என்றார். அழல் கொழுந்துவிட்டெழும் பொழுது அதைச் சூழ்ந்துள்ள மரங்கள் முதலியவற்றின் நிழல் பலவாகத் தோன்றுதல்போல இன்பம் பலவாகத் தோன்றினும் அவ்வழல் தணிந்தபோது நிழல் தோன்றாமை போலச் சுகமும் தோன்றாதென்பதாம். இலவுகாத்த கிளியென்பது முள்ளிலவின் பழம் செக்கச் செவேலென்று கொவ்வைக் கனிபோலத் தோன்றுதலால், அதனைக் கொவ்வைக்கனி என்று கருதிக் கிளி தின்னும்பொருட்டுக் காத்துக் கொண்டு இருக்கையில் அக்கனி வெடித்து அதினின்றும் பஞ்சு வெளிப்படக் கண்டு கிளிப்பிள்ளை நாணும் என்க.

24. முயற்கொம்பு (கோடு) இல்பொருள் ஆதலால், பெண்கள் பிறர்பால் ஆசை கொண்டவர்போலக் காணப்படினும் அது பொய்ம்மையேயாம். ஆகாயத் தாமரை, ஆமை மயிர்க் கம்பளம் என்பனவும் இல்பொருளேயாம். பெருங் கபடம் இடுகலன் என்றது, எளிதிற் கண்டு பிடிக்க முடியாத வஞ்சகத்தை இட்டு வைத்த பாத்திரம் என்றற்கு. கலன் கலம் என்பதன் போலி. நறுநெய்-மணம் பொருந்திய நெய். பிறங்கும்-விளங்கும்.

25. ஆண்வேடம் தரித்திருக்கும் சிவகாமி தன் காதலனை வெறுத்தமையால் அம்முனிவர் சொல்லிய மொழிகளெல்லாம் சுடுதலால் ‘இசைத்த வசையுட்கொண்டு’ என்றார். கனவு - எதிர்மொழி நனவு. அதாவது கண் விழிப்பிற்றோன்றுந் தோற்றம். கனாத் தோற்றத்தினும் உண்மையாக நெடும்பொழுது தோன்றியதனால் ‘நீள் கனவு’ என்றார். நாணத்தால் முகம் வெளுத்து மனம் நொந்து நின்றமையால், ‘வெயிலில் விளக்கொளியும் மின்னொளியிற் கண்ணும், வெளிப்

பட்ட கள்வனும்போல் வெட்கி முகம் வெளுத்தான்' என்றார். வறிஞன் கனவிற்கண்ட பொருள் நினைவில் கைகூடாமையால் வருந்துதல் போல முனிவன் சொல்லிய சொற்களால் தன் செய்கை வெளிப்பட்டமையால், வெயில்முன் விளக்கொளியும் மின்னொளிமுன் கண்ணும் பலர் முன் கள்வனும் ஒளி மழுங்குதல்போல நாணத்தால் முகம் வெளுத்தான் என்க. ஏதிலன் என்றது ஈண்டு வறிஞனை; பொன் சிறிதும் இல்லாமையால். அடிகள் - முனிவர். வசை - பழிமொழி.

26. வெட்ட வெளியான என்பது வெளிப்பட்டு விட்டன என்னுங் கருத்துள்ள குறிப்பு மொழித் தொடர். இரகசியங்கள் எல்லாம் என்றது பெண் ஆண்வேடம் தரித்தமையையும் தன்னுடைய பந்து என்பதையும் என்க. யதி - முனிவர். இறும்பூது - வியப்பு.

27. கற்பம் அநுகற்பம் உபகற்பம் என்று சொல்லப்படும் விபூதியுள் ஒன்றை யணிவார்க்குப் பகை, பிணி, பேய், சூனியத்தாலாம் தோடம் முதலியவை யுண்டாகா வென்பார், 'நின்மல விபூதி' என்றார். பொன்மய மெய் விபூதியுள்ளே தோன்றி என்பது உபமேயம். நீறுபடி நெருப்பெனவே நிலாவி என்பது உபமானம். குருவாகிய முனிவன் தன் கண்ணால் முகத்தை நோக்கினமையால், ஆண் வேடம் தரித்த பெண்மகள் மனம் கூசி நாணத்தால் தன் இரண்டு விழிகளும் மெய்ந்நெறியை விட்டுத் தான் பெண் என்பதைத் தெரிவித்தன என்பதாம்.

28. தன் உண்மையை முனிவர் தெரிந்துகொண்டார் என்னும் மகிழ்ச்சியால் கூசிய முகம் பெண்மைக்குரிய குணமாகிய நாணத்தோடு கோணி எழில் வீசுதலையும், சடைக்கோலம் ஒழிந்து குழற் பாரஞ் சரிதலையும், வெய்துயிர்ப்பையும், ஆண் வேடம் ஒழிந்து பெண் வேடம் தோன்றுதலையும் கண்டார் முனிவர் என்பதாம்.

29. முனிவர் வசிக்குமிடம் பரிசுத்தமுடையதாதலாலும், வேதமோதுதல், ஓமம் வளர்த்தல் முதலியன உடையதாதலாலும், அவிர்ப்பாகம் பெறத் தேவர்கள் நெருக்குதலாலும், 'தேவரொடு நீ வசிக்குந் திருக்கோயில்' என்றார். செமித்தருள்வை - முன்னிலை வினைமுற்று; செமித்தருள் பகுதி, ஐ - விகுதி, வ் - எதிர்கால இடைநிலை.

30. காவிரிப்பூம் மாநகர் என்றது காவிரி நதி கடலொடு சங்கமமாகுமிடத்திலுள்ள பட்டினத்தை. குற்றமில்லாத குலமும், விருந்தினரை யுபசரித்தலும், யாவரிடத்தும் அன்பும் நாயகனது குறிப்பறிந்து ஒழுகும் ஒழுக்கமும், வாய்மையும், கோபமின்மையும், கற்பும், பெற்றதைக்கொண்டு உவக்கும் உவப்பு முடைமையால், 'எண்ணரிய குணமுடையாள்' என்றார். நற்குணமுடைய பெண் ஒருத்தியுண்டு, அவள் வயிற்றில் இரண்டு பெண்களும் ஒரே பிள்ளையும் பிறந்தார்கள் என்பதாம்.

31. சாப்பிள்ளையே பெறுதலும், ஒரே பிள்ளை பெறுதலும், பெண்களையே பெறுதலும், எதையும் பெறாதிருத்தலுமாகிய நால்வகை மலடியுள், சிவகாமியின் சிற்றன்னை ஒரு மகவும் பெறா மலடியாதலால், 'முழுமலடி' என்றார். சிவகாமி சிற்றன்னை மலடியாயினும் ஈடு எடுப்பற்ற செல்வமுடையாள் என்பார், 'செகமனைத்தும் அவள் படைக்க செல்வமென மொழிவர்' என்றார். செப்பரிய - சொல்லற்கரிய.

32. ஒருவனது நிழல் தன்னைப் பிரியினும் அவனை விடாது வந்து அடியினிடத்தே தங்குந் தன்மை போலச் சிறிது நேரம் அவளைப் பிரியினும் சகியாது அவளைத் தேடி யுடன்கூடி விளையாடி யொன்றாக வளர்ந்தேன் எனத் தன் இளமைப் பருவத்தின் செய்தியைக் கூறினள்

என்க. அறைவேனோ என்புழி ஓ வினாவொடு எதிர்மறை. அடல்-வலிமை; அலகு - அளவு.

33. எடுத்தனள் முன் தொடுத்து என்பதை முன் எடுத்துத் தொடுத்தனள் என விகுதி பிரித்துக்கூட்டி அம் முனிவன் முன்னே விரிவாக எடுத்துச் சொல்லத் தொடங்கினள் எனப் பொருள் கோடலும் ஒன்று. பிடி - பெட்டை யானை.

34. சிறிய தாய் எனக்குக் கொடுத்த செல்வத்தால் மதிமயங்கித் தலைதடுமாறி என் நிலைமையையும் எனது தலைவனது தன்மையையும் தகைமையையும் மறந்தேன் என்க. படிறு - வஞ்சகம். தகைமை என்றது கல்வி, அறிவு, அன்பு, அருள், அழகு முதலிய குணங்களை. மடமகள் - இளம்பெண். தமியள் - தனித்தவள்.

35. அத்தலைவர் குறிப்பு மொழியால் உணர்த்தியும் என் குறும்பு மதியால் கொள்ளாது விடுத்தனன் என்க. குறிப்பு, வெளிப்படை என மொழிகள் இரண்டு வகைப் படும். குறிப்புச் சொற்கள் பொருளைக் குறிப்பால் உணர்த்துவன. அவை ஒன்றொழி பொதுச்சொல், விகாரம் முதலாயின. குறும்பு - பொல்லாங்கு.

36. அதிபர் அவர் - அதிபராகிய அவர்; இருபெயர் ஒட்டுப் பண்புத் தொகை. அயர்ந்திருந்தேன்-அயர்ந்தேன்; ஒருசொன்னீர்மைத்து. அரும்பி - உதித்து.

37. காணேன் - எதிர்மறைத் தன்மை யொருமை வினைமுற்று, காண் - பகுதி, ஏன் - தன்மை யொருமை வினைமுற்று விகுதி, ஆ-எதிர்மறை விகுதி புணர்ந்து கெட்டது. இனி, எதிர்மறை விகுதி புணர்ந்து கெடாமல், விகுதியின் காரணமே எதிர்மறையை யுணர்த்திற்று என்பர் சேனாவரையர். என் ஆராமையைத் தோழியர்களிடத்து முறையிட, அவர்கள் யான் செல்வச் செருக்கினால் வெறுத்த தலைவரைக் குறித்து இதுபொழுது வருந்துதலால் என் அறியாமையைக் கண்டு பரிகசித்தனர் என்க. உன்னி - நினைந்து. சேடியர் - தோழியர். தேயம் - இடம்.

38. ஆயத்தார் - மகளிர் கூட்டத்தினர். தான் - அசை. விரகவேதனையுடையார்க்குக் கடலொலி துன்பத்தைச் செய்யுமாதலின், 'அவ்வேலை - அகோராத்திரம் கெடுத்து எறியும்' என்றார். வேலை-கடல் (ஆகுபெயர்), வேலை - கரை, சினைப் பெயராகிய இது முதற்பெயராகிய கடலுக்கு வந்தமையால் சினையாகு பெயர். எறியும் - செய்யும் என்னும் வாய்பாட்டு வினைமுற்று; இது காரணத்தைக் காரியமாக உபசரித்தல். காதலுடையாரைச் சந்திரனும் தென்றலும் வருத்துமாதலான், 'நமன் உயிர் தின்னும்' என்றார். மதியும் காலும் என்புழி உம்மை எண்ணும்மை. உமிழ்தல் - கக்குதல். மதி - சந்திரன், கால் - காற்று. திரிந்துலவுங்கால் என்றதனால் தென்றற் காற்றை யுணர்த்திற்று. தென்றற் காற்று மெல்லிய நடையும் குளிர்ச்சியும் நறுமணமும் உடைமையால், 'திரிந்துலவுங் காலும்' என்றார். அகோராத்திரம்-இரவு பகல். கால்-காற்று.

39. காசிப முனிவர்க்குப் பரசுராமரால் தானஞ் செய்யப்பட்டமையால், 'காசினி' எனப் பூமிக்கு ஒரு பெயர். யூகம் - ஆலோசனை. உள்ளபடி - உள்ளவளவு.

40. உண்டெனிலோ என்புழி ஓகாரம் கட்டுரைச் சுவைபட வந்த அசைநிலை. இல்லை எனில் என்பதனிடத்தும் அவ்வோகாரம் கூட்டப்பட்டது. கண்டுயிலு மில்லிடம் நீக்கதுவ வெளியோடுங் கணக்கு - என்பதை "நித்திரைசெய் வீட்டில் நெருப்பும் பெரும்படையும், முறிப் புறப்பட்டார் முற்றத்தே - பித்தரைப்போல், நில்லென்று சொன்னாலும் நிற்பரோ அப்படிக்காண், இல்லறத்தை நீத்தார் இயல்பு" என்ற ஒழிவி லொடுக்கச் செய்யுளோடொப்பு நோக்குக. ஒல்லை-விரைவு.

தேறி - தெளிந்து. கதுவ - பற்ற. கரந்து - மறைந்து.

41. தன் தலைவரும் அவ்விடங்களில், சென்றிருப்பார் என்ற துணிபால் ஆங்காங்குச் சென்று பார்த்தும் அவரைக் காணாமையால், 'பார்த்துடலஞ் சலித்தேன்' எனவும், அவர் இல்லறந் துறந்த பெரியாராதலான், குருக்கள் மடத்திற் றங்கி ஞான நூல் ஆராய்ச்சி செய்வார் என்னுங் கருத்தால் அவ்விடத்துச் சென்று பார்த்தும் பயனற்றமையால், 'மடந் திரிந்து மனம் அலுத்தேன்' எனவும், யோக நிலையுடையவராதலால் யோகியர்கள் வாழ்கின்ற குகைகளிற்றங்கித் தாமும் வசிப்பரெனக் கருதிப் பார்க்கையில் மீண்டும் அவர் இல்லாமையால், யோகியர் போய் வாழ் குகையும் பாழே' எனவும் கூறினாள் என்க. திருக்கு-அஞ்ஞானம், வஞ்சகம். குருக்கள் - இருளையொழிப்பவர் எனக் காரணக் குறியாயினும் ஈண்டுத் 'திருக்கறு' என்னும் அடைமொழியால் வாளா பெயராய் நின்றது. 'சேற்றில் முளைத்த பங்கயம்' என்றாற்போல. மன்று - சபை.

42. தன் நாயகனைக் கண்டதுண்டோ என்று மான் முதலியவற்றை விளித்துக் கேட்டாள் என்க. மான் என்றது பெண் மானை, கலை என்றது ஆண் மானை. பிடி-பெண் யானை,' மா-ஆண் யானை. பிகம்-குயில், குயில் தன் முட்டையைக் காகத்தின் குடம்பையுள் இட்டுக் குஞ்சு பொரிக்கும் வரைக்கும் காத்துக்கொண்டிருந்து குஞ்சு வெளிப்பட்டவுடன் அதனைக் காகத்தை விட்டுப் பிரித்துத் தான் அழைத்துக் கொண்டு செல்கின்றமையால், 'வன் பிகமே' என்றார். அறிவீரோ என்புழி ஒகாரம் வினைப்பொருளது. தொடர்ந்து என்னும் எச்சம் கழித்தேன் என்னும் முற்றொடு முடிந்தது. அஞ்ஞான மயக்கம் விடாத அறுபத்து நான்கு கலை ஞானங்களே! பிடிவாதமே வாழ்க்கையாகக் கொண்ட மதச் சச்சரவுகளாலெழும் ஆரவாரமே! அனித்த சடதுக்க ரூபமாகிய இஹலோகமே! சுகம் சுகம் என்று கூறப்படும் இந்திராதி பதமோட்சங்களாகிய பரலோகமே! என்னும் தத்துவார்த்தம் ஒருவாறு தொனித்தல் காண்க.

43. கண்டிலன் - எதிர்மறைத் தன்மை வினைமுற்று

நிலை. நண்ண உக

அகரவீற்று வியங்கோள வினை முற்றுக்கள். அருவருப்பு-வெறுப்பு, தொழிற் பெயர். காயம் - உடல்.

44. பலவிடத்துத் தேடியும் தலைவரைக் காணாமையால், 'அலைந்த தத்தனையும் பொய்யோ' என்றார். எனக்கும் என்பதிலுள்ள உம்மை இழிவு சிறப்பு. அவர் தந்த போதமாவது செல்வ நிலையாமை, கயவரைச் சேராமை முதலியன. அறிவுளதோ - ஓகாரம் வினாவோடு ஐயம் என்க. புனிதர் - தூயர். போதம் - அறிவு.

45. வந்திலரோ என்புழி ஓகாரம் பிரித்து என் என்னும் வினாவுடன் கூட்டப்பட்டது. எவன் என்பதன் மரூஉ என் என்றாயது. ஓகாரம் வினாவுடன் ஐயம். நலம் - நன்மை. எதிர் - நேர்.

46. தன்னைக் காதலித்தவரெல்லாம் பொய்க் காதலுடையவராதலானும் இவர் ஒருவரே மெய்க் காதலுடையவராதலானும் 'உயிர்த்துணைவர்' என்றார். பால்-இடம். சாயை-சாயல்.

47. இவ் வழலே கதியென்றது இவ் வழலில் விழுந்து இறந்தலை. மூதுருவம் - முதுமை + உருவம் - ஈறு போதல் என்றதனால் மை கெட்டு, ஆதிநீடல் என்றதனால் மூது என்றாய் 'உயிர்வரின் உக் குறள் மெய் விட்டோடும்'—என்றதனால் மூதுருவம் என்றாயது. குளறி - தடுமாறி.

48. முனிவன் சிவகாமியின் மாமன் பிள்ளையாதலால், 'உனது சிதம்பரனே' என்றான். அன்பின் ஆராமையால் ஒருவர்க்கொருவர் முற்பட்டுத் தழுவிக் கொண்டமை

யால், 'எவர்தாம் முன் அணைந்தனர் என்றிதுகாறும் அறியோம்' என்றார். அறியோம் என்னும் பயனிலைக்கு எழுவாய் வருவிக்கப்பட்டது. அறியோம் என்றது வாணி கூற்று. நான்கு வேதங்கள் இருக்கு, யசுர், சாமம், அதர்வணம் என்ப.

49. உமாதேவியார் பர்வதராசன் புத்திரியாதலால் 'பார்வதி' எனப்பட்டாள். பாரதி - சரசுவதி. பார்க்கவி என்பது உமாதேவிக்குப் பெயராயினும் 'கஞ்சப்பார்க்கவி' என்றமையால், இலக்குமியை யுணர்த்தியது. நாயகனிடத்து அன்பிற் சிறந்த அருந்ததியும் பெண்களுள் இவ்வளவு அன்புடையாளை இதுகாறும் காணாது கண்டமையால் 'அருந்ததியும் அம்ம இஃதருங்கதியென்றஞ்ச' என்றார். இவ்விருவருடைய அன்பின் நிலைமையைக் கண்டு உலகமும் அன்புடையராயினமையின், 'ஆர்வம் உலகார்க' என்றார். உலகு-ஆகுபெயர். ஆர்க,வியங்கோள் வினை முற்று.

50. ஆழி - கடல், ஆழ்தலையுடையது; இ-வினை முதற்பொருள் விகுதி. புடை - பக்கம். அறம் - தருமம். அறத்தை நீர்த்துறையாக உருவகித்தமைக் கேற்ப அன்பை வெள்ளமாக உருவகித்தனர். இஃது இயைபு உருவகம். பந்தனைகள் - கட்டுகள்; ஈண்டு மனத் துன்பங்களை யுணர்த்தின. மனத்துன்பங்களாவன: வாணியின் தகப்பனாகிய சகடன் தன் மகளை அவள் காதலனாகும் நடராஜனுக்கு வாழ்க்கைப்படாமல் குடிலன் புத்திரனாகிய பலதேவனுக்கு வாழ்க்கைப்பட வேண்டுமென்று வற்புறுத்த அதற்கு அவள் உடன்படாமையா லுண்டான வருத்தங்கள் என்க. வாணிமுடிவில் தான் விரும்பிய நடராஜனையே மணக்கின்றமையால், 'பரிந்து அருள் சுரந்தமை நிரந்தரமும் வாழ்க' என்றாள். நிரந்தரம் - எப்பொழுதும்.

## மூன்றும் அங்கம் மூன்றும் களம் தொடர்ச்சி

40. படர்ந்து - சென்று.

50. எதிர்ச்சையா - நினைத்திராதபடி, திடீரென்று.

58. தீம்புனல் - இனிய நீர்.

61. காவி - குவளை மலர்.

64. முகந்திலன் - மோந்திலன். வாசனை யறிந்தேனில்லை.

66. மான - போல.

67. மாடு - பக்கம், ஏழனுருபு.

83. போதம் - அறிவு.

87. துவக்கு இந்திரியம் - தொட்டறியும் உணர்வு, பரிசம்.

89. சேய்த்து - தூரத்திலுள்ளது, சேய்மை - பகுதி.

95. வடக்குநோக்கி - திசைகாட்டும் யந்திரம். இதில் முள் எப்பொழுதும்வடபக்கத்தையே நோக்கிநிற்கும் (Mariners' compass).

104. எய்ப்ப - போல.

115. அனுமான ஆதியால்-அனுமானம் முதலிய அளவுகளால்.

121. சீதம் - குளர்ச்சி.

133. வெஞ்சரம் - கொடிய அம்பு.

134. நிற்கலே - நிற்கவில்லை.

[இக்களத்தில் சந்தியாவருணனையும் மனோன்மணியின் சோக நிலையும் பத்தியின் சுபாவமும் உபயார்த்தமுடைய சிவகாமி சரிதமும் சொல்லப்பட்டமை காண்க.]

---

## மூன்றும் அங்கம் நான்காம் களம்

1. மயக்கம் - கலக்கம்; மயங்கு; பகுதி.

2. வேதாந்தம் - வேத + அந்தம் - மறை முடிவு.

3. இமையாது - இமை யென்னும் வினையடியாகப் பிறந்த எதிர்மறை வினையெச்சம்.

4. பரிதபித்திருந்தீர் - வருந்தியிருந்தீர்; பரிதாபம், பெயர்.

13. விரூபம் - வி+ரூபம் - ரூப மற்றது, அவலட்சண வடிவம்.
15. அல் - இருள்.
16. பேழ்வாய் - பெரிய வாய்.
21. இசித்துக் கறிக்க-இழுத்துக் கடிக்க.
28. பஞ்சாசத் கோடி - ஐம்பது கோடி.
36. அலகிலே - அளவில்லாதது.
38. உந்தியந் தடாகம் - கொப்பூழாகிய குளம். முளரி-தாமரை,முள்ளோடு கூடிய தண்டையுடையது.
41. நான்முகச் சிலந்தி - நான்கு முகங்களையுடைய பிரமனாகிய சிலந்திப்பூச்சி. நாற்றிய - தொங்கவிட்ட; நால், தன்வினைப் பகுதி; இதனுடன் 'று' என்ற பிறவினைவிகுதி சேர்ந்து நாற்று என்ற பிறவினைப் பகுதியாகும்.
45. பேய்த்தேர் - கானல்நீர்.
49. மகோததி - மகா+உததி - (குணசந்தி) பெருங்கடல்.
50. புற்புதம் - நீர்க்குமிழி.
52. தாங்குநர் - தாங்குபவர்.
54. இந்திரஜாலம் இவ் எந்திர விசேடம் - [மாயா காரியமாகிய பிரபஞ்சம்.]
56. திரிகை-திரிக்கும்இயந்திரம்.
64. [ஆர்க்கும் - வருந்தி இரைகின்ற].
66. மீக்கொளும் - மேலாகும்.
71. பிரத்தியக் பிரபோ தோதயம் - உள் முகமான மெய்ஞ்ஞானத் தோற்றம்.
73. அகண்ட - எல்லையற்ற. சித்-அறிவு.
80. [சுதமாம் - சுவத சித்தமாம் - தானே பலிக்கின்ற].
88. மோனம் - ஞானவரம்பு.
104. சினகரம் - கோவில்.
116. அகம் உடைந்தும் - மனம் வருந்தியும்.
123. விடும் பரிசு - விடுந்தன்மை.
138. சங்கேதம் - குறியீடு.
144. கரதலாமலகம் - அங்கை நெல்லிக்கனி. நெல்லிக்கனியின் உட்புறம்போன்ற தன்மையே அதன் வெளிப்புறத்தும் காணப்பெறும்; இதன் உண்மையைக் கையிற் கொண்டே தெளியலாம் என்றபடி. கரதல+ஆமலகம்; தீர்க்கசந்தி.
155. விண்டிடா வண்ணம் வீக்கிய பாசம்-பிரிந்திராதவிதம் கட்டிய கயிறு.
156. ஆகருஷணம் - இழுத்து நிற்கும் சத்தி.
160. குயிற்றிய-செய்த, குயிற்று, பகுதி.
168 அக்கரம் பயில்வது - அட்சரம் பழகல், எழுதப்படிப்பது.
176. உள்ளுநர் - நினைப்பர், உள்-பகுதி.
179-182. [பாரிஜாதம் முல்லை முதலிய பூக்கள் வெண்மை நிறமும் சுகந்தமும் உடையனவாயிருப்பதற்கு அவை இராக்காலம் அலர்தலே காரணம் என்பது ஜீவ சாத்திரிகளின் கொள்கை].
184. உசிதம் - மேன்மை. நிசி - இரவு.
196. உறுகண் - துன்பம், இடுக்கண். ஏது - காரணம்.
208. அல்லல் - துன்பம்.
222. சாத்தியம்-முடியக்கூடியது.
227. [பந்தம் - சம்பந்தம்.]
236. எய்ப்பினில் வைப்பு - இளைத்த காலத்து உதவும்பொருள்.
239. சமுசயம் - ஐயம்.
250. அரற்றி - வாய்விட்டுச் சொல்லி, அழுது.
259. முகமன் - நயவுரை, முகத்துதி.
277. [நீர் பிரபஞ்சத்தை அருள் வடிவாகப் பார்க்கும் பார்வையும் முடிந்த நிலமன்று. ஆயினும் உமக்குப் பந்த நிவர்த்தி சமீபமாய் விட்டது என்பது இவ்வரியின் குறிப்புப் பொருள்.]
231. சமயிகள் - சமயத்தைச் சார்ந்தவர்கள், மதத்தோர்.
கலித்துறை :—ஆபதம் - ஆபத்து. கற்படை-சுருங்கை. மாற்றம்-சொல்.
[முடிவில் வரும் கலித்துறை சுந்தரர் சமைத்த சுரங்கத்தைத் தத்துவோபதேசமாக உருவகப்படுத்தி அனுபூதியாலன்றி உபதேசார்த்தம் வெளிப்படாதென்று வற்புறுத்துகிறது.]

## நான்காம் அங்கம்

### முதற் களம்

8. மடு - தடாகம், குளம்.

11. ஒன்றிய - பொருந்திய.

20. கடம்பாடு - கடன்படுதல், கடமை.

31-32. "கொக்கொக்க கூம்பும் பருவத்து மற்றதன் குத்தொக்க சீர்த்த இடத்து"-குறள் அதி. 49 செ. 10 என்ற குறட்கருத்து.

33. சம்பவம் - காரணம், சங்கதி - வரலாறு.

46. இதக்கேடு - நன்மைக்குக் கெடுதி.

50. பாற்றினம் - பருந்துக் கூட்டங்கள்.

51. பணைத்து - பருத்து.

61. கலினம் - கடிவாளம்.

66. மும்மதம் - கன்னமதம், கபோலமதம், கோசமதம், என்ற மூன்று மதம்.

68. கறுவி - கோபித்து.

69. வெந்நிட்டு - முதுகுகாட்டி, புறங்கொடுத்து.

[இவ்வரி உக்கிரகுமார பாண்டியன் இந்திரன் முடிமேல் வளையெறிந்த திருவிளையாடலைக் குறிப்பிக்கின்றது.]

70. புரந்தரன் கைப்படாப் பொருப்புகள் - இந்திரன் சிறகரியும் வச்சிராயுதத்துக்குத் தப்பி மறைந்த மைநாகபருவதம் போன்ற மலைகள்.

78. நாற்படை - கரி, பரி, தேர், காலாள்; சதுரங்கம்.

88. கொடுந்தொழில்-கொடுமையான செயல், கோடுந்தொழில் என்பதன் குறுக்கமாக்கின் வளைக்குஞ் செயல்.

91. [பாண்டி-பாண்டி நாடாகிய மாதா.]

100. அன்னியன் கைப்படா நீர்—தாம்பிரபன்னி நீர், திருநெல்வேலிச் சில்லாவிலேயே பாய்ந்து முடிதலால் என்க.

101. சோரி - இரத்தமழை.

102. பொன்றிடும் அளவும் - இறக்கும் வரையும்.

106. விந்தம் அடக்கினோன் - அகத்தியன். விந்தமடக்கிய செய்தி அவர் தம்வயத்தன்மையைக் குறிப்பதாம். தந்த நற்றமிழ் மொழி - அவரால் முதலிலக்கணமாகிய அகத்திய இலக்கண நூல் ஏற்பட, அதனால் செம்மையாய்ப் போற்றப் படலான தமிழ் மொழியும் அடுத்த மொழிகளினுதவி யில்லாமலே தனித்தியங்கும் ஆற்றலுடையது என்பதைக் குறிக்க நிற்பது. தந்த என்ற சொற்பொருள் 'அழற்புரை நிறக் கடவுள் தந்த தமிழ்' என்ற கம்பர் வாக்கானும், 'அகத்தியன் பயந்த செஞ்சொல்' என்ற வில்லி புத்தூரர் வாக்கானும் அறியப்படும்.

108. கிழமையும் - உரிமையும்.

108 - 117 - தமிழ்நாட்டு மக்கள் சிறு பருவத்தினராய்த் தொட்டிலில் நித்திரை புரியுங்காலத்து அவர்கட்கு நல்ல நித்திரை வர வேண்டித் தாய்மார்கள் தாலாட்டிப் பாராட்டியது தமிழ் என்றபடி. அத்தகைய தமிழ்மொழியாளர் இப்பொழுது வீரமும் ஆண்மையும் அற்றோரும் என்று கூறுதல் இழிவாம் என்பது.

119. சிறுகால் - இளங்காற்று, மென்மையாக வீசும் தென்றற் காற்று.

122. நாட்டபிமானம் - தேசாபிமானம். நடைப்பிணம் - நடையை மட்டும் கொண்டு மற்றவற்றில் பிணம் போன்றவர்.

124. திருவனையார்கள் - இலக்குமியை யொத்த மனைவிமார்கள்.
132. அரி - சிங்கம்.
136. செந்தழல் - ஓமத்தீ.
140. இந்தனம் - விறகு.
144. திருந்தலீர் - திருந்தலர் என்பதன் விளி. திருந்தலர்-மனம் திருந்தப் பெறாதவர், பகைவர்.
148. காயம்-வடு, மாறாத்தழும்பு.
151. "விழுப்புண் படாதநா ளெல்லாம் வழுக்கினுள், வைக்குந் தன் னாளை யெடுத்து" குறள் அதி. 78 செ. 6 என்ற குறட் கருத்து.
154. அனந்தம் - எல்லையற்ற.
158. கோட்டக்கது-கொள்ளத் தக்கது. கொள் என்னும் பகுதி கோள் எனத் திரிந்து தொழிற் பெயராயிற்று.
163. கணம் கணம் - கணந்தோறும்; அடுக்கு தொறுப் பொருட்டு.
165. உதும்பர தரு-அத்தி மரம்.
166. இறும் மசகம் - இறக்கும் கொசுகு.
172. அழுக்காறு - பொறாமை. அழுக்காறு பகுதி.
183. சேமமாய் - சுகமாய் அல்லது காவலாய்.
குறளடி வஞ்சிப்பா:—தமர்-சுற்றத்தவர். நந்தா-கெடாமல். சிந்தா நெறி-நிந்தித்தலாகிய வழி. தந்தாவளி சிந்தாவிழ - பல் வரிசை உதிர்ந்து கீழ் விழும்படி. பெய மின்-பெயருங்கள், புறப்படுங்க...
இக் கலித்தாழிசை நான் அடிகளால் ஒரு பொருண்மே... மூன்று அடுக்கி வந்து ஈற்றடி அ... சீராய் மிக்கு ஏனையடிகள் நா... சீராய் நிற்கப்பெற்றது.
கலித்தாழிசை: [க. சின்ன... எமன் அதிசயிக்கும் எனக் கருதி... செருக் கொழிமின். அங்ஙனம... றித் திரும்புவது சொற்பபுத்தி. எ... கள் வஞ்சி யரசன் வெல்வான் எ... வெண்ணிச் செருக்குவீராயின் என்பது அடி மடக்கின் பொருள்...
உ. விசயலட்சுமி வீரர்புய... தனது குடியிருப்பாக உடையாள்... ஆதலால் ஓடுமின் விடம்போ... உயிருண்ணும் இவ் வீரர் வாள... யுதத்திற் கெதிரே ஓடாது நிற்... ராயின், என்பது பொருள்.
ந. தம்மனையைக் காக்க உருவி... வாளுக்குப் பின்னிடும்படியா... உறையில்லை. அஃதாவதுமதியி... சமாதானப் படுகை யில்லை. இ... னைக் கருதாது போருக்கு வந்... பின்னர் திரும்புதல் முறையல்... றென் றெண்ணி நிற்பீராயின் என்... பது கருத்து.]
[இக் களத்தில் நாற்படை வருண... னையும் நாட்டபிமான விளக்கமுட... வீரரசமும் வந்தமை காண்க.]

## நான்காம் அங்கம்

### இரண்டாம் களம்

12. பஞ்சாய்ப் பறத்துவன்-பஞ்சைப்போற் பறக்கச் செய்வேன்.
15. ஊட்டுவன் குருதி - இரத்தத்தைக் குடிக்கச்செய்வேன்.
20. [சடையன்-குடிலனுடைய சேவகன் பெயர்.]
23. சபதம் - சூள்மொழி, வஞ்சினம்.
27. வகிர்ந்து, பிளந்து என்பதன் முதனிலைகள் வகிர், பிள என்பன.
30. ஒன்றார் - பொருந்தமாட்டார்.
42. பிணக்கு - மாறுபாடு, கோபம்.
43. குரோதம் - கோபம்.
55. சுதேசாநுராகத் தொடர்பு-சுதேசாபிமான சம்பந்தம்.
75. ஏலும் - பொருந்தும் அல்லது போதும்.
97. [ஆம் பொழுது - வேண்டும்

பொழுது] வாம் பரி - வாவும்பரி, தாவுகின்ற குதிரை.

105. வாளா - சும்மா; இடைச் சொல்.

107. உழை - இடம்.

111. வீதல் - கெடுதல்; வீ பகுதி.

135. செம்மல் - அரசன்.

[இக்களத்தில் தருமயுத்தத்தின் நீதியும், படைக்குள் குழப்பம் பிறக்க அரசனுக் கபாயம் நேர்ந்த வழி நாராயணன் காக்கச்சென்ற கதையும் குறிப்பிக்கப்படுகின் றன.]

## நான்காம் அங்கம்

### மூன்றாம் களம்

15. சாகசம்-துணிவுச்செயல்.

30. இரிந்து-பின்வாங்கி.

35. கார்முகம் - வில். கடிவாள்-கூரிய வாளாயுதம்.

54. அஞர் - துன்பம்.

75. "செந்தழலே வந்தழலைச் செய்திடினும் செங்கமலம், அந் தரஞ்சேர் செங்கதிரோற் கல்லா லலராவால்" என்ற பெருமாள் திருமொழியடியின் கருத்தமைதி கொண்டது.

85-87. 'நீரளவே யாகுமாம் நீராம்பல். இது, "வெள்ளத் தனைய மலர்நீட்டம்" குறள் அதி. 60. செ. 5. என்ற அடிக் கருத்து. அம்புயம் - அம்பு + ஜம் - நீரில் தோன்றுவது.

89. எவ்வும் - உயரும், எழும்.

96. ஊழையும்-வினைப்பயனையும்.

112. தேறுமாறு-தெளியும் விதம்.

185. மடங்கல் - சிங்கம்.

208 - 209. அருள் முதலியன அகம் முதலியனவாக உருவகிக்கப் பட்டுள்ளன.

219. நிம்பமாலை - வேப்பந்தார், இது பாண்டியர்க் குரிய மாலை.

222. மட்பரி - மண் குதிரை.

242-243. நொச்சி- பகைவர்க்கு எதிரில் நிலைநின்று தம்மதில் காப் போர்க்கு உரிய பூமாலை. உழிஞை-மதிலை முற்றுகை செய்யும் வீரர் அணியும் பூ.

263. ஒல்கலை - தளராதே.

264-265. "சிதைவிடத் தொல் கார் உரவோர் புதையம்பின் பட் டுப்பா டூன்றுங் களிறு" குறள் அதி. 60. செ. 7. உம்பல்-ஆண் யானை.

270 - 271. "நாணகத் தில்லா ரியக்கம் மரப்பாவை, நாணால் உயிர்மருட்டி யற்று" குறள் அதி. 102. செ. 10.

272 - 273. "ஒட்டார்பின் சென் றொருவன் வாழ்தலின் அந்நிலையே கெட்டான் எனப்படுதல் நன்று" குறள் அதி. 97. செ. 7.

282. இருமுறை - போர்க்களத் திலும், தற்கொலை புரிய எத்த னித்த போதும். தப்பிலி-தப்புத லுள்ளவன், தப்புதலில்லாதவன்.

290. பகைக்கலை-விரோதம் பண்ணுதே.

291. [பிரியப்படுகை-காமித்தல். காமவழி நேரிட்ட பகையாதலால்.]

296. திணம்படும் - கொழுப்புப் பொருந்திய.

297. மிண்டலைவறிதே-வீணுகப் பேசாதே. மிண்டுதல் - மதத்தால் அடர்த்தல்.

302. உபாயமிங்கிது - நாராய ணன் மீது குற்றம் ஏற்றுதலை.

[இக்களத்தில் ஜீவகன் சோக மும் குடிலனுடைய தந்திர நட வடிக்கையும், பலதேவனுடைய கீழ்ப்படியாத் துர்க்குணமும் ஒரு வாறு விளங்கலாம்.]

## நான்காம் அங்கம்

### நான்காம் களம்

1. ஆதி - முற்காலம்.

2. தொழுகுலம்-எவரும் வணங்கத்தக்க சிறந்த குலம்.

5. [தையலர்-மனோன்மணியின் செவிலிமுதலிய அந்தப்புரத்தார்.]

6. அகழ் - கிடங்கு, தோண்டப்பட்டது.

9. களைகுதும் - களைவோம்; தும் ஈற்றுத் தன்மைப்பன்மை.

16. ஆதியர்-முதன்மையானவர், தலைசிறந்தவர்.

28. கருதலர் - கருதமாட்டார்.

69. இவுளி - குதிரை.

70. கடகயம் - மதயானை.

71. கைக்குட்கனி-கையிலிருக்கும்நெல்லிக்கனிபோல்தெளிவாய்.

89. குடிலன் - வஞ்சகன்.

90. பகடி - கேலி.

106. [இது பலதேவனுடைய சோர காதலியின் சகோதரன் பலதேவனை வேலால் குத்திய போது கூறிய மொழி.]

107. உரத்து - மார்பில்.

108. பொன்றினன்-இறந்தான்; பொன்று - பகுதி.

112. கூலி-கைக்கூலி. [Bribe.]

124. மேவரும் - பொருந்துதற்கரிய.

126. ஓவலில்-நீங்குதலில்லாத.

144. ஒவ்வும் - பொருந்தும்.

160. [கொக் கொக் - சடையனுடைய விக்கலால் எழும் ஓசை.]

198. நடுமயிர்த் தூக்கின் - நடுவிற் கட்டியிறக்கிய மயிர் உரியைப் போலும்.

220. இரந்தேன்-வேண்டினேன்.

231. அற்றம் - ஈறு, முடிவு.

253. வல்லை - விரைவு.

277. சேய் - குழந்தை.

[இக் களத்தில் குடிலன் நாராயணன் மேல் பொய்க்குற்றம் சாட்டி நிலைநிறுத்திய தந்திரமும், இராஜபக்தியின் இயல்பும் வெளியாகின்றன.]

## நான்காம் அங்கம்

### ஐந்தாம் களம்

1. வளையும் வேய் - வளையுந் தன்மையுடைய மூங்கில், நெடுமரம் - பெருமரம் - வளையாதமரம்.

2. கிளை - கிளைகள், பெருங்கொம்பு, கிளைத்தலையுடையது; தொழிலாகு பெயர். கிளர்காற்று - பெருங்காற்று. வலிய பகைவர் முன் வணங்கியவர்பின் ஒரு காலத்தில் உயர்வு பெறுவர் என்ற உபதேசத்தை விளக்குவது 1-2 அடிகளின் உபமானம்.

3. முளை - மூங்கில். புறக்காழதாதலின் புல்லினத்தைச் சார்வது. மரமானது அகக்காழது.

6. இறினும் - கெடினும்.

8. காழ்-வைரம், உறுதி. நாணமில் நாணல் - அபாயம் வரும்பொழுது வணங்குதலால் நாணமில்லாத நாணற்புல். நதிவேகத்தில் எதிர்ப்படும் நாணல் என்பது அறிஞர் உரை.

23. மலைவு - மயக்கம். மான - போல.

26. துயர்க் கணம்—கணம் - கூட்டம், பல துயர்கள் என்றபடி.

30. மாநிதிவழிஞர் - பெருஞ் செல்வத்தோடு பிரயாணஞ் செய்யும் வர்த்தகர்கள்.

31. ஆர்கலன் - பொருந்திய மரக்கலம். புயல்கால் - மழைக் காற்று அல்லது பெருங்காற்று.

32. தியங்குமேல் - தியங்குமானல், கலங்குமானல். மீகான் - மீகாமன், கப்பலோட்டி.

35. வதிந்து - தங்கி.
37. ஒன்றுவன்-பொருந்துவன்.
38. உழையுளார்-பக்கமுள்ளவர் அல்லது கலத்திடமிருப்பவர்கள்.
44. திமில்-மரக்கலம் (அரசாட்சி).
46. பாய்மரம், ஈண்டுக் குடிலன்.
49. [கைவழி (channel) - சிறுபாதை, கை - சிறுமை.]
50. தொல் - பழமை.
51. துவாத சாந்தத்துறை - பூலோக வடிவாம் விராட்புருடனுக்கும் பிரமரந்திரத்துக்கும் யேயுள்ளதோ ரிடமாகிய மதுரை. துவா + தச + அந்தம் = இரண்டு + பத்து + முடிவு—புருவமத்திக்கு மேல் பன்னிரண்டு விரற்கிடையுள்ள இடம்.
52. நிவாதம் - வாதம் இல்லாதது, காற்றற்ற இடம், நிவாஸம் என்ற சொல்லின் திரிபாகக் கொள்ளின் உறைவிடம் என்க.
54. நயப்பு - அன்பு.
55. [பொதுவாகக் கூறிய முனிவர்மொழிக்கு, நாராயணன் கழுவேற வுடன்பட்டதைச் சுட்டுவதாக ஜீவகன் பொருட்படுத்திக் கொள்ளுகிறான். குடிலனைச் சுட்டிக் கூறிய பாய்மரமும் நாராயணனுகவே மயங்குகின்றான்.]
59. தெருட்டிட - தெருளச் செய்ய, தெளிவுபடுத்த.
60. [வேற்றுமையுருவாய்-மாறுபாடு செய்தலே இலக்கணமாக வுடைய.]
66. மேதை - அறிவு.
70. இயல் - அரசியல்.
73. காலக்கரப்பே - காலவசத்தாலுண்டாகும் மறைப்பு.
79. புரி-திருநெல்வேலி நகரம்.
81. பொறித்த - தாபித்த, நிறுவிய.
83. கவந்தம் - உடற்குறை.
94. தொடரியல் - சங்கிலித் தொடரி னியல்பு.
100. மனக்கோள் - மனத்தின் கொள்கை.
107. தாதான்மியம்-ஒற்றுமைப் பட்டிருத்தல். பலம் - பயன். இதனால் அரசன் திருநெல்வேலிக் கோட்டையில் மனமொன்றி வாழ்ந்த தன்மையின் பயனை விளக்கியவாறு. சீவகன் குடிலன் வசத்தனாகியே ஒழுகும் நிலைமையைக் குறித்தபடியுமாம்.
108. வெங்கரா-கொடியமுதலை. "மூர்க்கனும் முதலையும் கொண்டது விடா" என்பது கருத்து.
111. பிற்கிளை-மகவு முதலியன.
112. பிராந்தி - மயக்கம்.
116. ஒருமலர்-ஒப்பற்ற மனோன் மணியாகிய பூ.
124-127. "நெடும்புனலுள் வெல்லு முதலை யடும்புனலி னீங்கி னதனைப் பிற"—குறள் அதி. 50- செ. 5. என்ற கருத்து இவ்வரியிற் காணப்படும்.
135. சாலிபுரம்-நெல்நகர், நெல்வேலி; புரம் - சரீரமுமாம். புலம் - இடம், ஐம்புலம். மாபதி-மதுரை; பரம்பொருள்.
157. மறலி - எமன்.
161. தனையள் - மகள், தனையன் ஆண்பால்.
163. வியாகுலம் - துக்கம்.
167. [சிறு கொடி-மனோன்மணி]
166-168. பாதுகாவலையுடைய இந்நகரமாகிய நெருப்பி லகப்பட்டு வருந்துகின்ற உன்னுடைய சிறிய பூங்கொடிபோன்ற மனோன்மணியை வேறிடத்திற்கு மாற்றுவோம். அக்கொடி சிறந்த எல்லையில்லாத பல பாண்டியர்களை உண்டாக்கிச் சந்ததியை விருத்திசெய்ய உரியது.
173. பரசியம் - பலர்க்கும் வெளிப்படையாவது. இதன் எதிர்மொழி இரகசியம்.
175. பிரதிபந்தம் - தடை.
178. இமைக் கொட்டும்-இமையாடும்பொழுதும்.

179. குருநாள் - அமாவாசைத்தினம்.

180. பரவை-கடல், பரவையின் பாடாவது அமாவாசை நாளில் மழையோடு கூடிய பெருங் காற்றால் வீசப்பட்ட கடல்படும் குழப்பம்.

185. எவன் - எவ்விதம்.

186. சமழ்ப்பு - நாணம்.

190. நளி - தேள்.

191. வாற்புற நஞ்சால்-வாலின் இடத்திலுள்ள விடத்திஞல், "இருந்தேளுக்கு வாய்த்த விடம் கொடுக்கில் வாழும்" என்பது கவி.

193. சுதந்தரம் - உரிமை.

195. பிரை உறுபாலென-பிரை இடப்பெற்ற பால் தோய்தல் போல. உதிரம்-இரத்தம், குருதி.

197. தொடு - தோண்டப்பட்ட.

209. நலிதல் - வருந்துதல்.

234. செவ்வே வடக்கு - நேர் வடக்கு.

முறி - அறை, முறிக்கப்பட்டது. அஃதாவது அறுக்கப்பட்டது.

230 - 235. [இக் கேள்விகளால் குடிலன் சுருங்கை இருக்க வேண்டுமிடம் இன்னதென்று ஊகித்து நிச்சயித்துக்கொண்டு தான் அதனை முன்னமே கண்டுணர்ந்தவன் போலப் பாவனை காட்டுகிறான்.]

242. புந்தி - புத்தி.

245. பாங்கோ-முறையோ, நலமோ.

[பண்டே - கோட்டை கா ணஅழைத்த நாளில்.]

255. தேன் ஆர் தெரியல் சூடுமுன் - தேன் வண்டுகள் மொய்க்கின்ற மணமாலே சூடுவதற்கு முன். அஃதாவது கலியாணமாகுமுன், தேன் - மதுவுமாம்.

256. அந்நியர்பால்-அயலாரிடம்.

268. சதி - வஞ்சனே.

271. கருநா-விடநாக்கு, கருநாவுடையவர் சொல்லும் தீமொழி பலிக்கும்.

277. குழாம் - கூட்டம்.

280. காண்டும் - காண்போம்.

285. அல் - இரவு.

287. நுவல்தரு-சொல்லப்படும்.

293. [இதுபோல்-இச்சேரனது தூக்குணம்போல்.]

303. [பாண்டம்-மட்கலம், கடையிற் கொண்ட பொருள்களைக் கொடுத்து மாறிக்கொள்ளலாம். அப்படியன்றே விவாகத்தில் கொள்ளல். இது ஒரு கிராமியப் பழமொழி.]

306. உசாவி - விசாரித்து, கேட்டு ஆராய்ந்து.

324. விருத்தமாய்-வீணுய்.

325. கலுழுநள் - அழுகின்ருள், கலுழ் பகுதி.

337. [அதுவும் தன்னயம் கருதல் மாத்திரமன்றி அங்ஙனம் கருதுவதாகப் பிறர்க்குத் தோற்றத்தக்கதும்.]

334. மிகை - மிகுதியானது.

351. ஓவா - நீங்காத.

353. [மீட்டுதும் - மனோன்மணியை.]

366. ஆய்வு - ஆராய்ச்சி.

364. [குறியே இதனை 366-ல் உள்ள ஆய்விடும் என்பதோடு சேர்க்க.]

369. [எண்ணினன் — முனிவன் எழுவாய்.]

370. ஊகம்-ஊகிக்கும் கருத்து.

380. [துணிந்தனை-எழுவாய். படைஞராகிய நாய்கள்.]

382. [எளியன்—காரணன்.]

கலித்துறை :—

விராகம் - விராகம். ஆசையின்மை. ஆணவம் - அகங்காரம், பெயர்ந்து - நீங்கி.

[இக் கலித்துறையில் அரசர் கடமையும் ஆசையையும் நீங்கினது எழுமையும் கூடி இருக்கிற சாமியோகிதசாமர்த்தியமும் விளங்கலாம். அங்கமுடிவில் வரும் கலித்துறை தேசாபிமான பலத்தையும் 'நான் அல் வைராக்கியம் நன்றன்று' என்றும் தத்துவ நூலின் கொள்கையையும் அவ்வங்கத்து நடந்த கதையால் விளக்குகின்றது.]

# ஐந்தாம் அங்கம்

## முதற் களம்

2. இருசரம் - இருவழி, சரம்பு.
5. கோள் - கொள்கை.
6. ஒருங்கே-ஒருசேர, முற்றும்.
7. [இன்றேல் - இசைகுவது இன்றேல்.]
12. பாண்டில் - வண்டி.
15. (நம்மகன் - பலதேவன்.)
18. கேளொடு கிளைஞர் - அன்போடு தோழர். கேண்மை - நட்பு, அன்பு. கிளைஞர் என்பதில் ஞ், பெயரிடை நிலை.
28. வான்காடு - ஆகாய மாகிய காடு.
29. மீன்காள்-நாள்களே! நட்சத்திரங்களே; மின்னுவது-மீன்-காரண இடுகுறிப்பெயர்.
28-35. இவ்வரிகளில் சோதிடப் பயிற்சி இகழப்படுகிறது.
36. பாசறை-படைவீடு
37. பொங்குங்கால் - வீசுகிற காற்று.

### குறள் வெண்செந்துறை

1. உள்நினைவு - மனக்கருத்து.
2. அவத்தை - நிலை வேறுபாடுகள். அவை சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி.
3. அலமாக்க - அலைய, அலமா-பகுதி. கரணம் - கருவி.
43. மருள்தரு மதனன் - மயக்கஞ் செய்கின்ற மன்மதன்.

### குறள்வெண் செந்துறை

4. புலன் ஆர - கட்புலன் நுகரும்படி. போதம்-அறிவு. புன்மை-அற்பம்.
5. பெத்த மனம் - கட்டுப்பட்ட மனம். பெத்தம் என்பதற்கு எதிர்மொழி முத்தம். கற்பிதம் - உண்டாக்கப்படுவது.
6. தேராது-தெளியாமல், ஊழ்-விதி. [குறள் வெண்செந்துறையில் கடைசியடி யொழித்து மற்றவை ஞான சமாதியில் விளங்கும் பிரமானு பூதிக்கும் புருடோத்தமன் கணுக்கண்ட மனோன்மணியின் காதல் வடிவிற்கும் பொருந்துவது காண்க.]
56. இறுத்த - தங்கிய.
57. கௌவை-துன்பம், சோகம்.
69. [இப்புவி - பாண்டி நாடு.]
81. முயக்கம் - சேர்க்கை, முயங்கு—பகுதி.
87. [அறமேயாயினும்-எழுவாய் காதல்.]
101. பொருநர் - போர் வீரர்.
102. வயவர் - வீரர்.
804. நொந்த சூலினர் - வருந்திய கருவுடைய மகளிர்.
105. மள்ளர் - வீரர்.
108. செயிர் உற-வலிமையாக.
114. வெறியன்-வெறி பொருந்தியவன். வெறி - மயக்கம்.
117. மண்டு அமர் - நெருங்கிய யுத்தம்.
124. உறு துயர் - பொருந்தும் துன்பம், மிக்க துன்பம். இப்பொருளில் உறு உரிச்சொல்.
126. கரதலம்-கையிடம். கௌசலம் - சாமர்த்தியம்.
133 - 135. [பாண்டி நாடு பரம்பரையாக அரசர் ஆண்டுவந்த பூமியாதலினால், நாட்டார் திருப்திக்காக எனக்கு அரசன் என்ற வெறும் பட்டம் மாத்திரம் நீ தருவையாயின்.]
142. ராகவன்-ராமன், ரகுவம்சத்தில் தோன்றியவன். தத்திதாந்த நாமம். பழம் பகை-பழைய பகைவனான இராவணன். செற்று-அழித்து.
143. விபீஷணன் - இராவணன் இளைய சகோதரன், இராகவனைச் சரணடைந்தவன்.
149. கைதவன் - பாண்டியன்

150. உதியன் - சேரன்.
152. கைத்தளை - கைவிலங்கு. தளை - தடுப்பது.
154. அணிதே - அண்ணிதே - சமீபத்திலுள்ளது.
164. [உறுதி-பாண்டிக்கு அ... ஞக்குவேன் என்ற உறுதிமொழி]
166. விஜயம் - வெற்றி.
168. நச்சிடில் - விரும்பினால்
169. சித்திரவதை - உறுப்பு... பாய் வதைத்தல், வதை-வருத்...

[இக் களத்தில் புருடோத்தமனுடைய காம நிலைமையும் குடில... அகப்பட்டுக்கொண்ட கதையும் கூறப்படுகின்றன.]

## ஐந்தாம் அங்கம்

### இரண்டாங் களம்

1. எதுக்கும் - எந்தக் காரணத்தை முன்னிட்டும்.
9. கின்னரம் - இசைக் கருவியிலொன்று. இதனையுடையவர் கின்னரர், கின்னரக்காரர் எனப்படுவர்.
26. பாங்கு - பக்கம்.
35. துணிபு - துணிச்சல்.
41. கோட்டி - விளைத்து.
53. அவசரம் - அவசியம்.
54. ஆஞ்ஞை - ஆணை.
43-61. [மனோன்மணிக்கும் பலதேவனுக்கும் மணவினை நடத்துவிக்க ஜீவகன் துணிந்துகொண்டு, அச்செய்தியை மனோன்மணிக்கு அறிவிக்க அதற்கு அவள் கூறிய மறுமொழிகளை இங்ஙனம் 1-ம் தோழி 2-ம் தோழிக்குத் தெரிவிக்கின்றாள்.]
70. சுரத்து - காய்ச்சலில்.
71. [அன்று-கனுக்கண்டு காமங்கொண்ட அன்று.]
75. ஆடி - கண்ணாடி, முகம் பார்க்க உதவுவது.
84. வழங்கவும் - சொல்லவும்.
90. [இது வாணிக்கும் நடேசனுக்கும் மனோன்மணி வேண்டிக்கொண்ட மணவினை.]
101. [பொருந்தீர்—எழுவாய் - நீயும் பலதேவனும்.]
102. பெருந்துயர்-பல தேவனை மணக்கலாகும் துன்பம்.
114. இச்சையாதி - ஆசை முதலியன.
117. மண்ணிய - கழுவிய.
119. சேக்கை - இடம்.
122. தொழும்பு - அடிமை.
124. அரண்-காவலுள்ள இட...
125. [செந்தீயைந்து - பஞ்ச... கினி, அவை நான்கு திசைகளி... நான்கு தீக்குண்டமும், மே... சூரியனும்.]
130. போனகம் துறந்து - உ... வை விட்டு.
150. வெள்ளில் - விளா. இ... முதலாகு பெயராய் விளங்க... யென்க. 'யானையுண்ட விளங்க...' என்பது பழமொழி. இ... வெளித்தோற்றம் முன்போல... கக் காணப்படினும் உள்ளே உ... டில்லாதிருக்கும்.
151. வேதகம் செய்த - வே... படுத்திய, போதகம்-யானைக்குட்..., யூதபம் - அரச யானை.
163. வாஞ்சாவசம் - அன்ப... வசம்.
164. உணர்வு - அறிவு.
165. கடவுள் என்ற ஒன்று இ... லாமற் போமாயின்.
166. வேண்டிய விளைக-வே... டியபடி யெல்லாம் செயல்... உண்டாகுக.

[இக் களத்தில் மனோன்ம... யின் பரிபக்குவ நிலைமையும் ... தம தவசின் இலக்கணமும் ... வாறு கூறப்பட்டன.]

# ஐந்தாம் அங்கம்

## மூன்றாம் களம்

3. அரிவை-பெண், 19-வயது முதல் 25 வயது வரையுள்ள பெண்கள் - இது பெண்கள் எழு பருவங்களில் ஒன்று. மற்றவை பேதை, பெதும்பை, மங்கை, மடந்தை, தெரிவை, பேரிளம் பெண் என்பன. இங்கு அரிவை பொதுவாய்ப் பெண்களைக் குறிப்பது.

12. மணிக்கே-மனோன்மணிக்கே.

22. காட்டல்-பாவனை செய்தல்.

29. அவ்வுழி - அந்த இடம், உழி-எழனுருபு. இங்கு இடத்தைக் குறித்தது.

38. [பிழைத்தல்-உய்தல், குற்றப்படுதல்.]

40. வெந்தது வீடு - குடி கெட்டது.

44. நமர்காள் - நம்மவர்களே!

45. கொலு-அரசு வீற்றிருக்குமிடம்.

52. [பாடு - உழைப்பு. நாராயணன் பாடு என்பதற்குக் கேடு எனப் பொருட்படுத்தி விடை கூறுகிறான்.]

65. கோலாகலம் - ஆடம்பரம்.

77. எள்ளரும்-இகழ்தலில்லாத.

80. மானும்-ஒக்கும், போலும்.

83. படும் - பொருந்தும்.

93. [பெரியள் - வயதிற் பெரியள், பக்குவவதி.]

100. கொற்றவை-அரச சபை.

102. இறும்பூது - வியப்பு.

104. வன்திறல்-வலிய திறமை, மிக்க வலிமை. திறல் - வெற்றியுமாம்.

105. ஆரா - நீங்கா.

108. ஆள்வினை - முயற்சி

112. தற்புகழ்-தன்னைப் புகழ்தல்.

124. பலிதம்-பலனைத் தருவது.

131. அயிர்ப்புறூர் - ஐயமடையார்.

137. தாபதம் - தவப்பள்ளி.

142. கவ்விய - பற்றிய.

144. தீச்செறி - நெருப்பிற் பொருந்தும்.

148. தெருள்-அறிவு. சூழ்ச்சி-ஆலோசனை.

154. புலையன்-நீசத்தன்மையன்

167- தினமணி - சூரியன்

### கொச்சகக்கலிப்பா

1. கரி - கஜேந்திரன் என்னும் யானை. ஆர் துயர அளக்கர் - நிறைந்த துன்பக் கடல்.

2. தெரிவை - துரோபதை.

3. மார்க்கண்டன் - மிருகண்டு முனிவர் மகன். தத்திதாந்தநாமம். வெறி கழுமி - கலக்கம் பொருந்தி, பொறியழியும் - ஐம்பொறி யுணர்வும் அழியப்பெற்ற.

[கொச்சகக்கலிப்பா மூன்றும் பொதுவான பிரார்த்தனையாகவும், மனோன்மணியின் கனக்காட்சிக்கும் காம நிலைக்கும் ஏற்றதாகவும் நிற்பது காண்க.]

177. ஏற்புடை - தக்க.

180. வாங்குதி - வாங்குவாய், பெறுவாய்.

184. கண் அளவில்லாது நீர் பெருகி உள்ளே வறட்சி யடைந்தது என்பது இவ்வரிப்பொருள்.

185. நாட்டம் . கண்.

193. [மூன்றாம் அங்கம் நான்காம் களத்துள் நடந்த சம்பாஷணைப்படி கருணைவிலாசம் கண்டேன் என்பது பொருள்.]

202. வஞ்சியான் வஞ்சியான்-வஞ்சி மன்னனாகிய சேரன் வஞ்சிக்கமாட்டான்.

211. பண்ணியல்-பண் பொருந்திய.

213. அருமருந்தை - அரிய தேவாமிர்தம் போல்வாளாகிய மனோன்மணியை.

229 - 230. நாளைக்குப் போர் செய்ய விரும்புவாயானால் போரின் வலிமையைப் பார்ப்போம்.

225. [தாரா-தாராக, மணமாலையாகத் தன் கை யிரண்டும் சூட்டி.

229. கண்வளர்தல் - நித்திரை செய்தல்.

233. [திடுக்கிட்டு விழித்ததைப் பிரிவிற் கஞ்சி நடுங்கினதாகக் கருதி ஜீவகன் கூறிய மொழி.]

[இக் களத்தில் மனோன்மணி தெய்வ அருளால் புருடோத்தமனைச் சந்தித்து மாலை சூட்டி ன தும், அஃதுடன் இந் நாடகத் டன் எடுத்துக் கொண்ட கதை க கதை முதலியன முடிவு பெறு தும் காண்க.]

## கலித்துறை

[திருக்கு-வஞ்சகம், மாறுபா இவ் வங்க முடிவில் வரும் கலி துறை தற்சுதந்தரம் விடுத் அருள்வழி நின்ற போதம் அதித படுமுறையை விளக்குகின்றது கலித்துறை ஐந்தும் அந்தாதி தொடர்.]

# அருஞ்சொற் பொருள் அகராதி

---

அ

அகம் . உள்ளிடம்.
அகழ் - தோண்டப்பட்டது, கிடங்கு.
அகழ்க்கணம் - கிடங்குக்கூட்டம்.
அகோராத்திரம் - இரவும் பகலும்.
அங்கங்கள் - உறுப்புகள்.
அங்கணம் - முற்றம்.
அங்காந்து - வாயைத் திறந்து.
அங்கி - அக்கினி, நெருப்பு.
அசலத்திரள் - மலைக்கூட்டம்.
அசைத்து - கட்டி.
அஞர் - துன்பம்.
அடல் - வலி.
அடு - கொல், சுடு, கெடு.
அடையலர் - பகைவர்.
அடையவும் - முழுவதும்.
அணங்குறல் - வருந்தற்க.
அணிதாய்-அணித்தாய், சமீபமாக.
அண்டயோனி-சூரியன், கடவுள்.
அண்ணிதே - சமீபத்திலுள்ளது.
அந்தர மார்க்கம் - ஆகாயவழி.
அந்தியங்காடி-மாலைக்காலக் கடை.
அமளி - படுக்கை.
அம்புலி - சந்திரன், மதி.
அயத்து - ஆட்டின் அல்லது குதிரையின்.
அயிராவதத்தன் - ஐராவத மென்னும் யானையையுடைய இந்திரன்.
அயிர்த்து - சந்தேகித்து, ஐயுற்று.
அயினிநீர் - ஆலத்தி நீர்.
அரந்தை - துன்பம்.
அரணடைந்து - காடடைந்து.
அரவம் - சத்தம், ஒலி.
அரற்ற - சத்திக்க, பேரொலி செய்ய.
அரியணை - சிம்மாசனம்.
அரியேறு - ஆண்சிங்கம்.
அரிவார் - வெட்டுகின்றவர்.
அலகில் - அளவற்ற.
அலகை - பேய்.
அலக்கண் - துன்பம்.
அலமரும் - வருந்தும். அலமா பகுதி.
அலமுகம் - கலப்பைநுனி.
அலவன் - நண்டு.
அல் - இருள்.
அவயவம் - உறுப்பு.
அவை - சபை.
அளக்கர் - கடல்.
அளி - வண்டு.
அளித்தபலன்-காப்பாற்றிய பயன்.
அழுக்காறு-பொறாமை. அழுக்கறு பகுதி.
அழுங்கலே - வருந்தாதே.
அறத்தாறு - அறநெறி, தருமவழி.
அற்றம் - சமயம், காலம்.
அனவரதம் - ஒவ்வொரு நாளும்.
அனுமானுதி - அனுமானம் முதலிய அளவை.

ஆ

ஆகருஷணம் - கவர்ச்சி.
ஆகுலம் - வருத்தம்.
ஆசி - நன்மொழி.
ஆசிரமம் - துறவிகள் தங்குமிடம்.
ஆஞ்சநேயன் - அஞ்சனா தேவியின் மகன்; அநுமான்.
ஆடகம் - பொன்.
ஆடி - கண்ணாடி, முகுரம்.
ஆதரவு - அன்பு.
ஆதித்தவாரம்-ஞாயிற்றுக்கிழமை.
ஆபதம் - ஆபத்து.
ஆமலகம் - நெல்லிக்கனி.

ஆயத்தார்-பெண்கள் கூட்டத்தார், தோழியர்.
ஆரணங்கள் - வேதங்கள்,
ஆரம் - சந்தனம்.
ஆரா ஆர்வம் - தணியாத அன்பு.
ஆலவாய் - மதுரை.
ஆள்வினை - முயற்சி.
ஆழி - ஆழமுடையது, கடல்.
ஆறலைகள்வர் - வழிப்பறி திருடர்.
ஆற்றவும் - மிகவும்.
ஆன்றவர்-நற்குணம் நிரம்பியவர்.

இ

இகம் - இம்மை, இவ்வுலகம்.
இக்கும் - கரும்பும்.
இசித்து - இழுத்து.
இசைப்பது - சொல்வது.
இச்சகத்து - இச்சையுடன், இப் பூமியில்.
இஞ்சி - மதில்.
இடும்பை - துன்பம், இடுக்கண்.
இதக் கேடு - நன்மைக் கெடுதி.
இந்தனம் - விறகு.
இந்து - மதி, சந்திரன்.
இயக்குதற்கு - செலுத்துதற்கு.
இயை - பொருந்து.
இரணம் - உப்பு.
இரவி - ஞாயிறு, சூரியன்.
இரிந்திட - முறிந்தோட.
இருசரம்-இரண்டம்பு, ஈருபாயம்.
இருள்வயின் - இருளில்.
இலகாது - விளங்காது.
இலக்கு - குறி.
இல்லவர்க்கு - மனைவியர்க்கு.
இல்லாள் - மனைவி.
இவுளி - குதிரை.
இழிந்தும் - இறங்கியும்.
இழுக்கு - குற்றம், ஆசு.
இழைது - செய்.
இறுத்து - தங்கி.
இறும் - கெடும்.
இறும்பூது - ஆச்சரியம், வியப்பு.
இன்னல் இழை - துன்பஞ் செய்.

ஈ

ஈட்டம் - கூட்டம்.
ஈண்டினன் - நெருங்கினன்.
ஈரம் - அன்பு, இரக்கம்.
ஈர்த்து - இழுத்து.
ஈனன் - இழிவானவன்.

உ

உகுத்து - சிந்தி.
உசாவி - கேட்டு.
உசிதன் - பாண்டியன்.
உதயனும் - சூரியனும்.
உதியன் - சேரன்.
உதும்பரதரு - உதும்பர மரம்.
உந்த - தள்ள.
உம்பல் - யானை.
உயிர்ப்பது - மூச்செறிவது.
உரமாய் - பலமாக.
உரம் - மார்பு
உருமு - இடி.
உரைஞ்சிடு - உராய்ந்திடு, தேய்த் திடு.
உலண்டு - ஓர் பூச்சி.
உலப்பறு - கேடற்ற.
உவர்க்கடல் - உப்புக்கடல்.
உவாமதி - பூரணசந்திரன்.
உழிஞை - பகைவர் அரணை முற் றுகை யிடுபவன் அணியும் மாலை
உழுவல் - எழுமையும் தொடர்ந்த அன்பு.
உழுவை - புலி.
உழை - பக்கம், இடம்.
உறுகண் - துன்பம்.
உறுத்துவது - வருத்துவது.
உறையுளா - இருப்பிடமாக.
உனி - உன்னி, நினைத்து.
உன்மத்தன் - பித்தன்.
உன்னன் - கருதான்.
உன்னுபு - நினைத்து.

ஊ

ஊர்கோள் - பரிவேடம்.
ஊழையும் - விதியையும்.

எ

எஞ்சல் - குறைதல்.
எயிலினம் - மதிற்கூட்டம்.

எவ்வும் - உயரும்.
எழிலி-மேகம், எழுதலையுடையது.
எற்பாடு - முன்மாலைக்காலம்.
எற்றுண்டு - மோதப்பட்டு.

ஏ

ஏதிலன் - அயலான்.
ஏந்தல் - அரசன்.
ஏமாப்பு - இன்பம்.
ஏய்ப்ப - ஒக்க.
ஏலும் - பொருந்தும், மேற்கொள்ளத்தகும்.

ஐ

ஐயுறல் - ஐயுறாதே.

ஒ

ஒத்தறுத்து-இசைக்குத்தகத் தாளமிட்டு
ஒட்டார் - பகைவர்.
ஒல்கலை - தளராதே.
ஒல்கும் - தளரும்.
ஒல்லை - விரைவு, உடன்.
ஒவ்வும் - பொருந்தும்.
ஒன்றார் - பொருந்தார்.
ஒன்றிய - பொருந்திய.
ஒன்னார் - பகைவர்.

ஓ

ஓதிமம் - அன்னம்.
ஓம்புபு - ஓம்பி, பேணி.
ஓரான் - ஆராயமாட்டான்.
ஓவல் - நீங்குதல், இடையறுதல்.
ஓவாப்பாடு - நீங்காத் துன்பம்.
ஓவியம் - சித்திரம்.
ஓவிறந்து - மதகுநீர் தாங்கும் பலகையைக் கடந்து.

க

ககனம் - ஆகாயம், விண்.
கஞ்சம் - தாமரை.
கஞ்சனம் - கண்ணாடி.
கடகயம் - மதயானை.
கடபட - குடம் துணி.
கடம்பாடு - கடமை.
கடாவி - செலுத்தி.
கடிஞை - பிச்சைப்பாத்திரம்.
கடிபுரி - காவலமைந்த புரி, நகர்.
கடிமலர் - மணப்பூ.
கடிவாள் - கூரிய வாளாயுதம்.
கடு - நஞ்சு.
கடுகி - விரைந்து.
கட்செவி - கண்ணையே காதாகவுடையது, பாம்பு.
கண்படும் எல்லை - தூங்கும் அளவு.
கதிர் - கிரணம்.
கதுப்பு - கன்னம்.
கதுவும் - பற்றும்.
கந்தம் - கிழங்கு.
கபோலம் - கன்னம்.
கமலை - கமலத்திலிருப்பவள், இலக்குமி.
கயம் - ஆழம்.
கயவன் - கீழ்மகன்.
கரணம் - கருவி.
கரதலாமலகம் - உள்ளங்கை நெல்லிக்கனி.
கரந்தான் - மறைத்தான்.
கரி - பெரியது, யானை.
கரு-பொன்னுருக்கி வார்க்கப்படும் இடம்.
கரு அறுத்து - கருவைக் கெடுத்து.
கருப்போ - கரும்போ.
கலன் - பாண்டம், கலம்.
கலினம் - கடிவாளம்.
கலுழ்நள் - அழுகின்றாள்.
கவடி - சோவி.
கழல் - கழற்சிக்காய்.
கழறிய - சொல்லிய.
கழை - கரும்பு.
கழன்றனன் - நீங்கினன்.
களைகுதும் - களைவோம்.
கள்ளலம் - களவு செய்கிலேம்.
கறங்கு - காற்றாடி.
கறங்கும் - ஒலிக்கும்.
கறி - கடி.
கறுவி - கோபித்து.
கறையடி-உரல்போன்ற கால்களையுடைய யானை.
கற்பனை - கட்டளை.
கணிசம் - மதிப்பு.
கன்றும் - சோம்பும்.

**கா**

காணிய - காணும்பொருட்டு.
காண்குதும் - காண்போம்.
காண்டகும் - பார்க்கத்தகுந்த.
காம்படு - மூங்கிலை வென்ற.
காரா - காரான் - எருமை.
காரிகை - பெண்.
கார்முகம் - வில்.
காலும் - உமிழும்.
காழ் - வயிரம், உறுதி.
காற்றளை - கால் விலங்கு.

**கி**

கிணைப்பறை - மருதநிலத்துப் பறை.
கிருபணன் - லோபி.
கிளத்தில் - சொன்னால்.
கிளைஞர் - சுற்றத்தார்.
கிறிகள் - வஞ்சக வழிகள்.

**கீ**

கீண்டு - கிழித்து.
கீறியவரை - கிழித்த கோடு.

**கு**

குகுநாள் - அமாவாசை.
குக்கன் - நாய்.
குடகன் - சேரன்.
குடங்கை - உள்ளங்கை.
குடம்பை - முட்டை.
குடிலன் - வஞ்சகன்.
குணப்பிரதம் - நன்மைதருவது.
குமுதம் - ஆம்பல்.
குயிற்றிய - செய்த.
குரத்து - குதியில்.
குரவை - ஓசை.
குருதி - இரத்தம்.
குரோதம் - கோபம்.
குளிகை - உருண்டை.
குறும்பர் - சிற்றரசர்.

**கூ**

கூடம் - மறைவு.
கூடல் - நான்மாடக் கூடலாகிய மதுரை.
கூற்றின் - எமனின்.
கூற்றுவர் - எமனூர்.

**கே**

கேதகை - தாழை.
கேள்வன் - நாயகன்.

**கை**

கை - செயல்.
கைக்கும் - கசக்கும்.
கைதவன் - பாண்டியன்.
கையறு - செயலற்ற.
கைரவம் - ஆம்பல்.

**கொ**

கொண்மூ - மேகம்.
கொய்யுளை - கத்தரிக்கப் பட்பிடரி மயிர்.
கொன்னே - வீணே.

**கோ**

கோட்டக்கது - கொள்ளத்தக்கது
கோட்டி - வளைத்து, திருப்பி.
கோட்பறை-கொள்ளுதற்கு இசைவாக அடிக்கப்படும் பறை கொட்டு.
கோலம் - அழகு, வடிவு.
கோள் - குற்றம்.
கோற்றொடி - அழகிய வளையல்.

**கௌ**

கௌசலம் - சாமர்த்தியம்.
கௌவை - துன்பம்.

**ச**

சங்கேதம் - குறிப்பு.
சஞ்சிதம் - எஞ்சிய வினைப்பயன்.
சந்தம் - அழகு.
சந்தி - சமயம்.
சமயிகள் - மதத்தவர்.
சமழ்ப்பு - குற்றம்.
சமர் - அமர், யுத்தம்,
சரதம் - உண்மை.
சருவம் - எல்லாம்.
சலனம் - அசைவு.
சழக்கு - பொய்.

**சா**

சாகசம் - துணிவுச் செயல்.
சாக்கியம் - சாட்சி.
சால - மிக.
சாலி - நெல்.

சாலிபுரம் - நெல்வேலி.
சான்று - சாட்சி.

சி

சிட்ட கற்றறிவுடைய.
சித்தனமாய் - அறிவுவடிவாய்.
சித்திரரேகை-உஷையின் தோழி.
சிந்தாவிழ - சிந்திவிழும்படி.
சிந்தூரம் - சிவப்பு.
சிலை - வில்.
சிறை - அணை.
சிற்றில் - சிறுவீடு.
சினகரம் - கோயில்.

சீ

சீதம் - குளிர்ச்சி.
சீரிது - சிறப்பானது.
சீலம் - ஒழுக்கம்.

சு

சுகம் - கிளி.
சுக்கான் - கப்பலோட்டுங் கருவி.
சுடிகை - உச்சிக்கொண்டை.
சுணங்கு - தேமல்.
சுதமாம் - தானேயுண்டாவதாம்.
சுதேசானுராகம் - சொந்த நாட்டுப் பற்று.
சுரகுரு - வியாழன்.
சுரும்பு - வண்டு.
சுவானம் - நாய்.

சூ

சூதகம் - தீட்டு.
சூலினர் - கருப்பமுடையவர்.
சூல் உளைந்து - கருப்பத்தால் வருந்தி.
சூழ் - சூழ்ச்சி, யோசனை.
சூழ்ச்சி - தந்திரம், யோசனை.
சூள் - சபதம்.

செ

செகுத்து - கெடுத்து.
செக்கர் - சிவப்பு, செவ்வானம்.
செமித்தருள்வை - பொறுத்தருள்வாய்.
செம்புனல் - சிவந்த நீர்.
செம்மல் - சிறந்தவன்.
செய்கோ - செய்வேன்,
செல்லலை - செல்லாதே.
செவிலி - வளர்ப்புத்தாய்.
செவ்விதாம் - செம்மையாகும்.
செவ்வே - நேரே.

சே

சேக்கை - படுக்கை, பள்ளி.
சேயினும் - குழந்தையைப் பார்க்கினும்.
சேய்த்தது - தூரத்திலுள்ளது.

சௌ

சௌரியம் - வீரம்.

ஞா

ஞாட்பு - போர்க்களம்.

த

தகைத்து - தகுதியுடையது.
தடம்பணை-பெரிய பள்ளத்தாக்கு.
தண்ணுமை - மத்தளம்.
ததையும் - நெருங்கும்.
தத்துறு-தடுமாறுகின்ற, தத்தளிக்கின்ற.
தந்தாவளி - பல்வரிசை.
தரணி - பூமி.
தரளம் - முத்து.
தருணம் - சமயம்.
தவிலடி - மத்தளக்கொட்டு.
தனையள் - மகள்.

தா

தாதான்மியம் - அதுவதுவாதல்.
தாது - பூம்பொடி, மகரந்தம்.
தாபதம் - தபசு செய்யுமிடம்.
தாரகைகள் - நட்சத்திரங்கள்.
தாரா - மாலையாக.
தாரு - மரம்.

தி

திகிரியுருட்டி - ஆணைசெலுத்தி.
திமில் - மரக்கலம்
திருக்கு - வஞ்சகர்.
திருந்தலீர் - பகைவர்களே.
திரைத்தது - சுருங்கிற்று.
திரைபொரல் - அலைமோதுதல்.
திவலை - துளி.
திளைப்பர் - அனுபவிப்பர்.
தினமணி - சூரியன்.
தினவு - ஊரல்,

தீ
தீனன் - ஏழை.
து
துகிர் - பவளம்.
துகிலுரிய - உடையைக் களைய.
துச்சம் - அற்பம், புன்மை.
துஞ்சிய - இறந்த.
துஞ்சும் - தங்கும்.
துணைமருப்பு - இரண்டு கொம்பு.
துணையறும் - நாயகனில்லாத.
துப்பிதழ் - பவளம்போன்ற உதடு.
துலை - தராசு.
துவக்கிந்திரியம் - பரிசக்கருவி.
துவண்டு - அசைந்து.
துவாதசாந்தத்துறை - துவாதசாந்த (புருவத்தின் நடுவிடமாகிய மதுரை.
துறப்பனோ - செலுத்து வானோ.
துனிபடு - வெறுப்புற்ற.
துன்று - நெருங்கிய.
துன்னலர் - பொருந்ாதவர்.
தூ
தூக்கு - தராசு.
தூணி - அம்புக்கூடு.
தூமம் - புகை.
தூரியம் - எழுதுகோல்.
தூவி - இறகு. 20.
தெ
தெத்து - சுவீகாரம்.
தெரிவை - பெண், துரோபதை.
தெருட்ட - தெளிவிக்க.
தெருளுறு - அறிவுறு.
தே
தேற்றம் - தெளிவு.
தேனார் தெரியல்-தேன் வண்டுகள் மொய்க்கின்ற மாலை.
தொ
தொகுதி - கூட்டம்.
தொட்டிட - தோண்டிட.
தொழும்பு - அடிமை.
தோ
தோடம் - தோஷம், குற்றம்.
ந
நச்சினேன் - விரும்பினேன்.
நச்சியது - விரும்பியது.
நட்டிலன் - சிநேகித்திலன்.
நண்பகல் - நடுப்பகல்.
நந்தாவுறை - கெடாத இடம்.
நயனம் - கண்.
நலம் - நன்மை.
நலிதல் - வருந்துதல்.
நலிந்து - வருந்தி.
நவ்வி - அழகு.
நளி - பெருமை.
நளியும் - தேளும்.
நள்ளிரா - நடுக்கத்தைத் த[illegible]ம் இரவு.
நறவு - தேன்.
நறை ஆர்-தேன் நிறைந்த, ம[illegible] பொருந்திய.
நனவு - நினைவு.
நா
நாட்டம் - கண்.
நாட்பே - வலிமை.
நாணம் - வெட்கம்.
நாப்பண் - மத்தி, நடு.
நாவி - முத்து.
நாற்றிய - தொங்கவிட்ட.
நி
நிகாதர் - வஞ்சகர்.
நிசி - இரா.
நிசித - கூர்மையான.
நிசியலர் - இருளில் மலர்கின்ற.
நிதனம் - அழிவு.
நிணப்புலால் - கொழுப்பு மாமிச[illegible].
நிண்ணயம் - உறுதி, வரையறை
நிமல - குற்றமற்ற.
நிமித்திகர் - குறிகூறுவோர்.
நிம்பம் - வேம்பு.
நிருபாதிகம் - காலதேச இயல்[illegible] களைக் கடந்து நிற்கும் நிலை.
நிரை - வரிசை.
நிலவிய - விளங்கிய.
நிவாதம் - காற்றில்லாதது.
நீ
நீவிடில் - தடவினால்.
நு
நுதி - கூர்மை, நுனி.

நே

நேரார் - உடன்படார், பொருந் தார்.

நொ

நொச்சி-முற்றுகை யிடப்பட்டோர் சூடும் மாலை.

நோ

நோற்று - தவம்புரிந்து.

ப

பகடி - கேலி.
பங்கம் - குற்றம்.
பச்சாத்தாபம் - கழிந்ததற் கிரங்கு தல்.
பஞ்சாசத்கோடி - ஐம்பதுகோடி.
படாம் - துகில்.
படிறு - பொய்.
பணிப்பாய் - பாம்புப்படுக்கை.
பணைத்து - பருத்து.
பண்ணியல் - இசைபொருந்திய.
பதாகை - கொடி.
பதுமமலர் - தாமரைப்பூ.
பந்தம் - கட்டு, பற்று.
பரசியம் - வெளிப்படையானது.
பரணசூத்திரம் - பரிபாலன நூல்.
பரற்கல் - கூழாங்கல்.
பராகம் - தாள், பொடி.
பரிசு - தன்மை, விதம்.
பரிணமித்து - பெரிதாகி.
பரிதி - சூரியன்.
பரிபுரம் - சிலம்பு.
பரிவு - அன்பு, இரக்கம்.
பவபாசம்-பிறப்பைத்தரும் பந்தம்.
பள் - பண், இசை.
பனிப்பு - நடுக்கம்.
பனிவரை - பனிமலை - இமயம்.

பா

பாசறை - படைவீடு.
பாண்டில் - வண்டி.
பாரதி - சரசுவதி.
பாவனை - எண்ணம்.
பாழ்த்த - பாழான.
பாற்றினம் - பருந்துக்கூட்டம்.

பி

பிசிதம் - வேம்பு.
பிடி - பெண்யானை.
பிணக்கு - மாறுபாடு, கோபம்.
பிதிர் - தென்புலத்திலுள்ளவர்.
பிரசுரன் - அசுரகுரு, சுக்கிராச் சாரி.
பிரதிமை - பதுமை.
பிரத்தியக் பிரபோதயம் - உள்முக மான மெய்ஞ்ஞானம்.
பிராந்தி - மயக்கம்.
பிரையுறு - மோரூற்றப்பட்ட.
பிறகிடல் - பின்வாங்குதல்.
பிறங்கும் - விளங்கும்.
பிறழ் - மாறு.

பீ

பீடை - துயர்.

பு

புகர் - கபிலநிறம்.
புக்குழி - புக்கவிடம்.
புங்கவர் - மேலானவர், தூயர்.
புணரி - கடல்.
புரந்தரன் - இந்திரன்.
புரிசை - கோட்டை.
புரை - குற்றம், துவாரம், ஒத்த.
புலம் - வயல்.
புற்புதம் - குமிழி.

பூ

பூரிய - அற்பமான.

பெ

பெட்பு - விருப்பு.
பெண்ணையந்தார் - பனம்பூமாலை.
பெத்தமனம் - கட்டுப்பட்ட மனம், முத்தியடையாத மனம்.

பே

பேய்த்தேர் - கானல்.
பேழ்வாய் - பிளந்தவாய், பெரிய வாய்.

பொ

பொங்குகால் - பெருகும் காற்று.
பொருதல் - போர் செய்தல்.

பொருது - போர்செய்து.
பொருப்பு - மலை.
பொருவு - ஒப்பு.
பொலம் - பொன்.
பொலிவுறல் - விளங்குதல்.
பொறி - புள்ளி.
பொறையன் - சேரன்.
பொற்றொடி - பொன்வளையல்
பொன்றிடும் - அழிந்திடும்.
பொன்வரை - பொன்மலை, இமய மாகிய மேரு.
பொன்னகர் - தேவலோகநக அமராவதி.
பொன்னி - காவிரி.

## போ

போதகம் - யானை.
போது - மலர்.
போத்து - ஆண்மயில்.
போந்தை - பனை.
போனகம் - உணவு.
போன்ம் - போலும்.

## பௌ

பௌவம் - கடல்.

## ம

மகோததி - பெருங்கடல்.
மங்கலநாண் - தாலிக்கயிறு.
மங்குல் - மேகம்.
மசகம் - கொசுகு.
மஞ்சு - வெண்மேகம்.
மஞ்சுள - அழகுள்ள.
மடங்கல் - சிங்கம்.
மடுவுள் - குளத்தில்.
மண்ணுவள் - கழுவாள்.
மண்ணிய - கழுவிய.
மம்மர் - மயக்கம்.
மரபு - முறை.
மருந்து - அமிர்தம்.
மருவரும் - பொருந்தாத.
மருவா - பொருந்தா.
மருளும் - மயங்கும்.
மலயம் - பொதியமலை.
மலையன் - சேரன்.
மலைவு - மயக்கம், தியக்கம்.
மள்ளர் - வீரர்.
மறலி - யமன்.
மறுக்கலை - மறுக்காதே.
மனமிறந்து - மனமழிந்து.
மன்றல் - மணம்.

## மா

மாகுலம் - ஆண்யானைக்கூட்டம்.
மாடு - பக்கம்.
மாண்ட - மாட்சிமைப்பட்ட, மா[illegible] பகுதி.
மாற்றம் - சொல்.
மாற்றலர் ஏறு - பகைவராகி[illegible] யானைக்குச் சிங்கம்போன்றவ[illegible].
மாற்றொலி - எதிரொலி.
மான - ஒக்க.
மானும் - ஒக்கும்.

## மி

மிஞ்சலை - மிஞ்சாதே.
மிண்டலை - பேசாதே.
மிழற்றி - சொல்லி.

## மீ

மீகாமன் - மீகான், கப்பலோட்[illegible].
மீக்கொளும் - மேற்கொள்ளும்.
மீனம் - நட்சத்திரம்.
மீன்காள் - நட்சத்திரங்காள்.

## மு

முகடு - உச்சி.
முகை - மொட்டு, அரும்பு.
முசிப்பு - முடிப்பு.
முந்நீர் - மூன்று தன்மை அல்[illegible]து நீரையுடையது, கடல்.
மும்மை - அறிவு, ஆண்மை, பெருமை.
முயக்கம் - சேர்க்கை.
முயன்றுழி - முயற்சித்த காலத்[illegible].
முருகு - மணம், தேன்.
முளரி - முட்காடு.
முழவு - மத்தளம்.
முறி - அறை.
முறுவல் - சிரிப்பு.
முனை - போரிடம்.

மூ

மூதுருவம் - பழையவடிவம்.
மூலம் - கிழங்கு.

மே

மேதை - அறிவு.
மேலிடும் - மேம்படும்.
மேவலர் - பகைவர்.

மோ

மோன - மௌன.

ய

யதி - முனிவர்.

யா

யாண்டும்-எங்கும், எப்பொழுதும்.

யூ

யூதபம் - தலைமை யானை.

வ

வகிர்ந்து - பிளந்து.
வஞ்சியான் - சேரன்.
வடக்குநோக்கி - வடக்குதிசையையே காட்டும் கருவி.
வடதளம் - ஆலிலை.
வடு - மாறாத் தழும்பு.
வண்டானம் - நாரை.
வதனம் - முகம்.
வதிந்த - தங்கிய.
வதுவை - திருமணம்.
வயப்படை - வெற்றியாயுதம்.
வயின் - இடம்.
வருந்துபு - வருந்தி.
வரை - எல்லை.
வல்லை - உடன், விரைவு.
வழுவா - தவறாத.
வறிதாக்கினை - வீணாக்கினாய்.
வற்கலை - மரவுரி, வலியவுடை.
வன்பிகம் - வலிய குயில்.

வா

வாகு - தோள்.
வாதவூரர் - திருவாதவூரிற் றோன்றிய மாணிக்கவாசகர்.
வாம்பரி - தாவுகின்ற குதிரை.
வாயசம் - காகம்.
வாயில் - வழி.
வாரம் - ஓரம்.
வாரி - கடல்.
வாரிசம்-தாமரை, நீரில் தோன்றுவது.
வார் - நீண்ட.
வால்வளை - வெள்ளிய சங்கு.
வாவல் - வௌவால்.
வாளா - வீணே.
வாழ்மதி - வாழ்வாய்.
வான்காடு - வானமாகிய காடு.

வி

விதிர்த்து - நடுங்கி.
விதுகுலம் - சந்திரகுலம்.
விந்தம் அடக்கினோன் - விந்திய மலையைத் தாழ்த்திய அகத்தியன்.
வியர்த்தம் - வீண்.
விரசமாய் - சுவையற்றதாய்.
விராகம் - ஆசையின்மை.
விரூபம் - விசேடவடிவம்.
விரைதரும் - மணந்தரும்.
விலங்கு - மிருகம்.
விலோதனம் - கொடி.
விழவறு - திருவிழா நீங்காத.
விழுப்புகழ் - சிறந்த கீர்த்தி.
விழுமம் - துன்பம்.
விழை - விரும்பு.
விளி - முழக்கம்.
விளிப்பவரில் - கூப்பிடுவாரைப் போல.
விள்ளா - விடாத.
விஜயம் - வெற்றி.
விஜயீபவ - வெற்றியுண்டாக.
விஜயை - வெற்றிமடந்தை.

வீ

வீக்கிய - கட்டிய.
வீதல் - கெடுதல், சாதல்.
வீவுறும் - கெடும்.

வெ

வெங்கரா - கொடிய முதலை.
வெஞ்சரம் - கொடிய அம்பு.
வெந்நற - முதுகுகாட்ட.
வெய்துயிர்த்து-பெருமூச்செறிந்து
வெருட்டினுல் - பயமுறுத்தினுல்.
வெருவலை - பயப்படாதே.
வெருவும் - அஞ்சும்.
வெருளுவர் - பயப்படுவர்.
வெள்ளில் - விளாங்கனி.
வெறி - மயக்கம்.
வெறுக்கை - செல்வம்.

வே

வேட்டல் - மணத்தல்.
வேட்டவை - விரும்பியவை.
வேதகம் - மாறுதல், பேதம்.
வேதித்து - மாற்றி, பேதித்து.
வேய்கொள் - மூங்கிலை யொத்த
வேய்ந்தோன் - சூடியவன்.
வேழம் - யானை.

வை

வையாய் - வைப்பாய்.
வைவேல் - கூரியவேல்.

வௌ

வௌவலம் - பற்றிக்கொள்கின் லம்,

# மேற்கோள் விளக்கம்

## I

### பழமொழி

| பக்கம் | வரி | |
|---|---|---|
| ௧ | 14 | ‘எள் விழற் கிடமில்லை’ |
| ௮ | 17-18 | ‘எருதீன் றெனுமுன மென்னகன் றென்று திரிபவ ரொப்ப’ |
| ௮ | 32 | ‘தலைவிதி தடுக்கற் பாற்றோ ?’ |
| ௯ | 38 | ‘முதலையின் பிடிபோல்’ என்பதை ‘முதலையும் மூர்க்கனுங் கொண்டது விடா’ என்பதனோடு ஒப்புநோக்குக. |
| ௧௨ | 147 | ‘நெருப்பையுங் கறையா னரிக்குமோ ?’ |
| ௧௪ | 39 | ‘எடுப்பார் கைப்பிள்ளை’ |
| ௧௪ | 46 | ‘மணற் சோற்றிற் கற்றேடுதல்’ |
| ௧௭ | 110 | ‘பூவையை வளர்த்துப் பூனைக் கீயவோ ?’ (கிளியை வளர்த்துப் பூனைக்குக் கொடுக்கவா ?) |
| ௧௭ | 119 | ‘பேயனுக் களிக்கவோ பெற்றனம் பெண்ணை?’ (பிள்ளையைப் பெற்றுப் பேய்க்குக் கொடுக்கவா?) |
| ௧௭ | 126 | ‘அழகிருந் தென்பயன் ?’ ‘தொழிலிலா மழிவே’ (ஆளைப் பார்த்தால் அழகு போல, வேலையைப் பார்த்தால் இழவு போல.) |
| ௧௯ | 173 | ‘எரிமேலிட்ட இழுது’ (அனலிற்படு நெய்போல்) |
| ௨௧ | 7 | ‘தாய்க்கு மொளித்த சூலோ ?’ (தாய்க் கொளித்த சூலா ?) |
| ௨௨ | 37-38 | ‘பரிதி வந்துழி யகலும் பனியென’ (சூரியனைக் கண்ட பனிபோல ; இன்பனிக்கு இனன் என). |
| ௨௩ | 76 | ‘நேசமில் வதுவை நாசகாரணமே’ |
| ௨௪ | 114-15 | ‘கன்னியா யிருப்பா யென்றும் சம்மதம்’ |
| ௨௪ | 120 | ‘நான் பிடித்த முயற்கு மூன்றுகால்’ |
| ௨௬ | 169 | ‘புளியம் பழமுந் தோடும் போலாம்’ |
| ௨௮ | 1 | ‘புத்தியே சகல சத்தியும்’ ‘Knowledge is Power. (Bacon)’ ‘புத்திமானே பலவான்’ |
| ௨௮ | 9 | ‘பிடித்தாற் கற்றை விட்டாற் கூளம்’ |

| பக்கம் | வரி | |
|---|---|---|
| ௨௧ | 46 | 'போர்வந் திடிலிவண் சேர்வந்திடும் எலாம்' (கலகம் பிறந்தால் நியாயம் பிறக்கும்) |
| ௩௩ | 39 | 'ஆத்திரந் தனக்குச் சாத்திர மென்னை?' 'Necessit has no law' |
| ௩௮ | 226 | 'கால விளம்பனஞ் சாலவுந் தீதே' (Delay is Dangerous) |
| ௪௰ | 260 | 'அங்கைப் புண்ணுக் காடியும் வேண்டுமா' (கைப்புண் பார்க்கக் கண்ணாடி வேண்டுமா?) |
| ௪௧ | 283 | 'கரும்பு கைப்பதுன் வாய்க்குற்றமே' |
| ௪௧ | 286 | 'வெளுத்த தெல்லாம் பாலா' 'மின்னுவ தெல்லாம் பொன்னா?' 'All that glitters is not gold' |
| ௪௧ | 304 | 'நெருப்பாறும் மயிர்ப்பாலமும்' |
| ௫௰ | 9 | 'சித்தம் மத்துறு தயிரிற் றிரிந்து' |
| ௫௪ | 118-19 | 'வண்டு மலரிடை யணையவுன் னொட்டிற், கொண்டு விடுவரே போலும்' (பலாப்பழத்துக்கு ஈப்பிடித்து விடவா?) |
| ௫௬ | 179-80 | 'அப்பந் தின்னவோ, அலால் குழியெண்ணவோ செப்பி துனக்கு, (எச்சிலை யெடுக்கச் சொன்னதா எத்தனை பேரென் றெண்ணக் கேட்டதா?) |
| ௫௭ | 14 | 'கெஞ்சிடின் மிஞ்சுவர், மிஞ்சிடிற் கெஞ்சுவர்' |
| ௬௧ | 144-5 | 'புலி வேட்டைக்குப் பொருந்துந் தவிலடி, எலி வேட்டைக்கு யிசையுமோ' |
| ௬௨ | 162 | 'கள்ள மனந்தான் துள்ளும்' |
| | 163 | 'தன்னுளந் தன்னையே தின்னும்' (தன்னெஞ்சே தன்னைச் சுடும்) |
| | 164 | 'குற்றமுள்ளோர் கோழையர்' |
| ௬௭ | 131 | 'கைதொடின் மஞ்சளுங் கரியா கும்மே' |
| ௭௰ | 208 | 'ஜனமொழி தெய்வமொழி' |
| ௭௫ | 23 | 'இலவு காத்த கிளி' |
| ௭௫ | 24 | 'நறுநெயுறு குடத்தெறும்பு நண்ணல்' (மொய்க்கு நெய்க் குடந்தன்னை யெறும் பென்னவே— திருவாசகம், நீத்தல் விண்ணப்பம்.) |
| ௮௰ | 54 | 'இரவியை நோக்கற்கோன் விளக்குதவி' யானை பார்க் வெள்ளெழுத்தா?' |
| ௮௫ | 67 | 'சுட்டதோர் சட்டிகை விட்டிடலென்ன' (சட்டி சுட் தும் கைவிட்டதும்) |
| ௯௰ | 244 | 'நெருப்பிடை யிழுதென நெக்கு நெக்குருகி' |
| ௯௪ | 31-2 | 'மீனுண்ணக் குளக்கரை யிருக்குங் கொக்கென அடங்கி |

| பக்கம் | வரி | |
|---|---|---|
| | | (ஓடுமீ னோட உறுமீன் வருமளவும் வாடி யிருக்கு மாங் கொக்கு). |
| | | 'கொக்கொக்க கூம்பும் பருவத்து மற்றதன் குத்தொக்க சீர்த்த விடத்து'—(குறள் 49-10) |
| ௱அ | 4 | 'நெருப்பிடை நெய் சொரிந்தற்று' (எரிகிற வயிற்றில் எண்ணெய் ஊற்றினாற்போல்) |
| ௱௧௰ | 47 | 'இருதலைக் கொள்ளியி லெறும்பானேன்' (இருதலைக் கொள்ளியி னுள்ளெறும் பொத்து)—திருவாசகம், நீத்தல் விண்ணப்பம். |
| | 49-50 | 'ஓர்சிறு மயிரிழை யிழக்கினு மாயுமே கவரிமா' 'மயிர்நீப்பின் வாழாக் கவரிமா வன்னார் உயிர்நீப்பர் மானம் வரின்'—(குறள் 97-9) |
| ௱௧௧ | 75 | 'பருதிகண் டன்றோ பங்கயம் அலரும்?' |
| ௱௧௫ | 135-6 | 'கண்ணிடு மணல்போல் உறுத்துவ' (கண்ணில் மண்ணள்ளிப் போட்டதுபோல்) |
| ௱௨௧ | 24-25 | 'வேலியே தின்னில் தெய்வமே காவல் செய்பயிர்க் கென்பர்' (வேலியே பயிரைத் தின்றால்...) |
| ,, | 31-32 | 'எலிப்பகை தொலைக்க இருந்த தன் வீட்டில் நெருப் பினை யிடல்போல்' |
| ௱௨௭ | 183 | 'கெட்டார்க் குலகி னட்டாரில்லை' |
| | | 'கெட்டார்க்கு நட்டாரில்'—(குறள் 130-3) |
| | | 'கெட்டார்க்கு நட்டாரோவில்' (பழமொழி 59) |
| ௱௨அ | 191 | 'எரியிடுவானோ இல்லிடை?' |
| ௱௨௯ | 216-7 | 'கருமருந்தறையிற் சிறுபொறி சிதறினும் பெருநெருப்பன்றோ' (காட்டுத் தீப்போல் பரவியது) |
| ௱௩௭ | 174 | 'கைக்கெட்டியது தன் வாய்க் கெட்டுதற்குள்' (கைக் கெட்டினது வாய்க் கெட்டாமற் போதல்) |
| | | 'Many a slip between the cup and the lip' |
| ௱௪௰. | 364 | 'சம்மதக் குறியே மௌனம்' (Silence implies consent) |
| ௱௫௨ | 9 | 'கிழவிபேச் சேற்குமோ கின்னரக் காரிக்கு' (ஏழை சொல் அம்பல மேறுமோ?'') |
| ௱௫௫ | 30 | 'நொந்த புண்ணதனிலே வந்திடும் நூறிடி' (பட்ட காலிலே படும் கெட்ட குடியே கெடும்' |
| | | 'Misfortune never comes single' |
| ,, | 33 | 'மூடிடில் தீயும் மூளு மும்மடங்காய்' |
| ௱௫௯ | 40 | 'வைத்ததாராயினென்? வெந்தது வீடு! (யார் வைத்த |

| பக்கம் | வரி | |
|---|---|---|
| | | தீயோ வீடு வெந்தது சரி) |
| ௱௬௧ | 75-76 | 'ஆடையின் சிறப்பெலாம் அணிவோர் சிறப்பே'<br>'பாடையின் சிறப்பெலாம் பயில்வோர் சிறப்பே'<br>(ஆட்பாதி யாடைபாதி) (செந்தமிழும் நாப்பழக்கம். |

## II

## திருக்குறள்

| | | |
|---|---|---|
| ௱அ | 16 | 'கருவியுங் காலமும் அறியில் அரியதென்'<br>"அருவினை யென்ப வுளவோ கருவியாற்<br>காலம் அறிந்து செயின்." (அதி. 49-செ. 3.) |
| ௱எ | 170-1 | 'வினைதெரிந் துரைத்தல் பெரிதல, அஃது<br>தனைநன்கு ஆற்றலே ஆற்றல்.'<br>"சொல்லுதல் யார்க்கும் எளிய அரியவாஞ்<br>சொல்லிய வண்ணஞ் செயல்." (அதி. 67-செ. 4) |
| ௱எ | 172-78 | 'அன்பும் குடிமைப் பிறப்பும் அரசவாம்<br>பண்பும் அறிவும் பரவுதா லுணர்வும்<br>தூய்மையும் மன்னவை யஞ்சாத் திண்மையும்<br>வாய்மையும் சொல்லில் வழுவா வன்மையும்<br>துணிவும் காலமும் களமும் துணியுங்<br>குணமும், மந்திரத் தலைவர் துணைமையும்<br>உடையனே வினையாள் தூதன்'<br>"அன்புடைமை யான்ற குடிப்பிறத்தல் வேந்தவாம்<br>பண்புடைமை தூதுரைப்பான் பண்பு." (அதி. 69-செ. 1) |
| ௱க | 233 | 'என்னே! இவன்மதி முன்னிற் பவையெவை?'<br>"மதிநுட்ப நூலோ டுடையார்க் கதிநுட்பம்<br>யாவுள முன்னிற் பவை." (அதி. 64-செ. 6) |
| சம் | 268 | 'மூக்கிற் கரியர் உளர்என நாயனார்<br>தூக்கிய குறளின் சொற்படி'<br>"புறங்குன்றி கண்டனைய ரேனும் அகங்குன்றி<br>மூக்கிற் கரியா ருடைத்து." (அதி. 28. செ. 7) |
| சம் | 277-80 | 'தீரா இடும்பையே தெளிவில் ஐயுறல்.<br>எனைவகை தேறியக் கண்ணும், வினைவகை<br>கோடிய மாந்தர் கோடியின் மேலாம்'<br>"தேரான் றெளிவுந் தெளிந்தான்க ணையுறவும்<br>தீரா விடும்பை தரும்." (அதி. 51-செ. 10) |

பக்கம் வரி

சக 312 ‘அரசர்க்கு அமைச்சர் அவயவம் அலரோ?’
“படைகுடி கூழமைச்சு நட்பர ணாறு
முடையா னரசரு ளேறு” (அதி. 39-செ. 1)

சச 50-1 ‘உளத்தோடு உளஞ்சென்று ஒன்றிடிற் பின்னர்
வியர்த்தமே செய்கையும் மொழியும்’
“கண்ணொடு கண்ணிணை நோக்கொக்கின் வாய்ச்சொற்
என்ன பயனு மில” (அதி. 110-செ. 10) [கன்

சஎ 111-12 ‘காதலா ளூழிக் கனன்முன் வையாய்
மாதரார் கட்டுரை மாயா தென்செயும்?”
“வருமுன்னர்க் காவாதான் வாழ்க்கை எரிமுன்னர்
வைத்தூறு போலக் கெடும்” (அதி. 44-செ. 5)

சக 164-65 ‘குணமு முளார்இல் துணைவ ராயின்
இல்லது என் உலகில்’
“இல்லதென் இல்லவள் மாண்பானல் உள்ளதென்
இல்லவள் மாணாக் கடை (அதி. 6-செ. 3)

ருய 107-8 ‘தினைத்துணை தீங்கவன் செய்யினென் மகட்குப்
பனைத்துணை செய்ததாப் பழிபா ராட்டுவன்’
“தினைத்துணையாங் குற்றம் வரினும் பனைத்துணையாக்
கொள்வர் பழிநாணு வார்” (அதி. 44-செ. 3)

ரு௩ 68-69 ‘உழைப்போர் உழைப்பில் உழுவோர் தொழில்மிகும்’
“சுழன்றுமேர்ப் பின்ன துலகம் அதனால்
உழந்து முழுவே தலை” (அதி. 104-செ. 1)

அய 78-80 ‘உளமும் உளமும்
சேர்பட அறியா என்றோ நினைத்தாய்?
ஓர்வழிப் படரின் உணருமென் றுரைப்பர்’
“புணர்ச்சி பழகுதல் வேண்டா வுணர்ச்சிதான்
நட்பாங் கிழமை தரும்”! (அதி. 79-செ. 5)

அஅ 172-76 ‘இத்தனி யுலகில் எத்துயர் காணினும்
அத்தனை துயரும்நம் அழுக்கெலாம் எரித்துச்
சுத்தநற் சுவர்ணமாச் சோதித்து எடுக்க
வைத்தஅக் கினியென மதித்தலே உயிர்கட்கு
உத்தம பக்தியென்(று) உள்ளுவர்’
“சுடச்சுடரும் பொன்போ லொளிவிடுந் துன்பஞ்
சுடச்சுட நோற்கிற் பவர்க்கு;’ (அதி. 27-செ. 7)

பக்கம் வரி

கூ 31-32 'மீன் உண்ணக்
குளக்கரை இருக்குங் கொக்கென அடக்கி'
"கொக்கொக்க கூம்பும் பருவத்து மற்றதன்
குத்தொக்க சீர்த்த விடத்து" (அதி. 49-செ. 10)

கூ 36 'எண்ணார் துணிந்தபின் பண்ணார் தாமதம்'
"எண்ணித் துணிக கருமந் துணிந்தபின்
எண்ணுவ மென்ப திழுக்கு" (அதி. 47-செ. 7)

கூ 153-154 'போர்க்குறிக் காயமே புகழின் காயம்.
யார்க்கு அது வாய்க்கும் ஆ! ஆ! நோக்குமின்!
அனந்தந் தலைமுறை வருந்தனி மாக்கள்,
தினந்தினம் தாம்அனு பவிக்குஞ் சுதந்தரம்
தந்ததம் முன்னோர் நொந்தபுண் எண்ணிச்
சிந்தையன் புருகிச் சிந்துவர் கண்ணீர்
என்றால் அப்புண் 'இறந்துகோட் டக்கது'
அன்றோ? அறைவீர் ஐயோ! அதுவும்
புண்ணோ? புகழின் கண்ணே எவரே
புண்படாது உலகிற் புகழுடம்பு அடைந்தார்?
புகழுடம்பு அன்றிஇல் இகழுடம் போமெய்?
கணங்கணம் தோன்றிக் கணங்கணம் மறையும்
பிணம்பல. இவரெலாம் பிறந்தார் என்பவோ!'
"விழுப்புண் படாதநா ளெல்லாம் வழுக்கினுள்
வைக்குந்தன் னாளை யெடுத்து" (அதி. 78-செ. 6)
"சுழலு மிசைவேண்டி வேண்டா வுயிரார்
கழல்யாப்புக் காரிகை நீர்த்து" (அதி. 78-செ. 7)
"புரந்தார்கண் ணீர்மல்கச் சாகிற்பிற் சாக்கா
டிரந்துகோட் டக்க துடைத்து" (அதி. 78-செ. 10)

கூ 167 'பிறந்தார் என்போர் புகழுடன் சிறந்தோர்'
"தோன்றிற் புகழொடு தோன்றுக அஃதிலார்
தோன்றலிற் றோன்றாமை நன்று" (அதி. 24-செ. 6)

ஈ 84-85 'எண்ணுமின் நன்றா யேற்குமின்! பின்புநீர்
பண்ணுந் தவறுநம் பாலாய் முடியும்'
"எண்ணித் துணிக கருமந் துணிந்தபின்
எண்ணுவ மென்ப திழுக்கு" (அதி. 47-செ. 7)

பக்கம் வரி

ௗ௰ 49-51 'ஓர் இற
மயிரிளை யிழக்கினும் மாயுமே கவரிமா
பெருந்தகை பிரிந்தும் ஊன்சுமக்கும் பெற்றி
மருந்தா யெனக்கே இருந்ததே நாரணு'
"மயிர்நீப்பின் வாழாக் கவரிமா வன்னா
ருயிர்நீப்பர் மானம் வரின்" (அதி. 97-செ. 9)
"மருந்தோமற் றூனோம்பும் வாழ்க்கை பெருந்தகைமை
பீடழிய வந்த இடத்து" (அதி. 97-செ. 8)

ௗ௧௧ 80 'மும்மையில் இம்மியும் உண்மையில் இழந்திலம்'
"செய்தக்க வல்ல செயக்கெடும் செய்தக்க
செய்யாமை யானுங் கெடும்" (அதி. 47-செ. 6)

,, 85-87 'அழகார் அம்புயப்
பூவின துயர்வு பொய்கையின் ஆழத்து
அளவுஆ வதுபோல்'
"வெள்ளத் தனைய மலர்நீட்டம் மாந்தர்தம்
உள்ளத் தனைய துயர்வு" (அதி. 60-செ. 5)

ௗ௧● 191 'மீண்டோம் என்றுனித் தூண்டிலின் மீனென
ஈண்டவன் இருக்குக : இருக்குக.'
"வேண்டற்க வென்றிடினுஞ் சூதினை வென்றதூஉம்
தூண்டிற்பொன் மீன்விழுங்கி யற்று" (அதி. 94-செ. 1)

ௗ௧அ 263-4 'மானமே பெரிது
சிதைவிடத் துரவோர் பதையார் சிறிதும்'
"சிதைவிடத் தொல்கா ருரவோர் புதையம்பின்
பட்டுப்பா டூன்றுங் களிறு" (அதி. 60-செ. 7)

ௗ௧அ 270-1 'நாணு துலகம் ஆளல்போல் நடித்தல்
நாணுற் பாவை உயிர்மருட் டுதலே.'
"நாணகத் தில்லா ரியக்க மரப்பாவை
நாணா லுயிர்மருட்டி யற்று" (அதி. 102-செ. 10.)

## III

## புறநானூறு

௪௬ 12 'சூட்டுடைச் சேவல் சுரைக்கொடி படர்ந்தஅவ்
வீட்டுச் சியின்மேல் வீம்பாய் நடந்துபின்'
"தீநீர்ப் பெருங்குண்டு சுனைப்பூத்த குவளைக்

பக்கம் வரி

கூம்பவிழ் முழுநெறி புரள்வரும் அல்குல்
ஏந்தெழில் மழைக்கண் இன்னகை மகளிர்
புன்மூசு கவலைய முள்மிடை வேலிப்
பஞ்சி முன்றிற் சிற்றில் ஆங்கண்
பீரை நாறிய சுரையிவர் மருங்கின்
ஈத்திலைக் குப்பை ஏறி உமணர்
உப்பொய் யொழுகை எண்ணுப மாதோ''
(புறநானூறு-116)

## IV

## சிலப்பதிகாரம்

கஅ 157-8 'துணைபுண ரன்னத் தூவி யணைமிசைக்
கண்படு மெல்லை'
"துணைபுண ரன்னத் தூவியிற் செறித்த
இணையணை மேம்படத் திருந்துதுயில் பெறாஅது"
(அந்திமாலைச் சிறப்புச்செய் காதை 4, 66-7)

ருட 110 'வாய்த்தலை விம்மிய மதகுபாய் வெள்ளம்
ஓமென வோவிறந் தொலிக்க'
"கடல்வள னெதிரக் கயவாய் நெரிக்குங்
காவிரிப் புதுநீர்க் கடுவரல் வாய்த்தலை
ஓவிறந் தொலிக்கும் ஒலியே யல்லது"
(நாடுகாண் காதை 10, 107-109)

,, 118-26 'துகிர்க்கா லன்னமும் புகர்க்காற் கொக்கும்
செங்கட் போத்துங் கம்புட் கோழியும்
கனைகுரல் நாரையும் சினமிகு காடையும்
பொய்யாப் புள்ளும் உள்ளான் குருகும்
என்றிவை பலவும் எண்ணில குழீஇச்
சிரஞ்சிறி தசைத்துஞ் சிறகை யடித்தும்
அந்தியங் காடியின் சந்தங் காட்டித்
தத்தங் குழூஉக்குரல் தமைவிரித் தெழுப்பும்
பேரொலி யொன்றுமே யார்தரு மொருசார்'
"கம்புட் கோழியுங் கனைகுரல் நாரையும்
செங்கா லன்னமும் பைங்காற் கொக்கும்
கானக் கோழியும் நீர்நிறக் காக்கையும்
உள்ளும் ஊரலும் புள்ளும் புதாவும்

பக்கம் வரி

வெல்போர் வேந்தர் முனையிடம் போலப்
பல்வேறு குழூஉக்குரல் பரந்த ஓதையும்"
(நாடுகாண்காதை 10, 114-119)

கூ௬ 127-30 'வீறுடை எருத்தினம் வரிவரி நிறுத்தி
ஈறிலாச் சகரர் எண்ணில ராமெனப்
பொன்னேர் பூட்டி நின்றவர் தம்மைப்
போற்றிய குரவையே பொலிதரும் ஒருசார்'
"பாருடைப் பனர்போற் பழிச்சினர் கைதொழ
ஏரொடு நின்றோர் ஏர்மங் கலமும்"
(நாடுகாண்காதை 10, 134-135)

௩௭ 91-3 'கரும்படு சாலையின் பெரும்புகை மண்டக்
கூம்பிய நெய்தற் பூந்தளிர் குளிர
மேய்ந்தகல் காரா தீம்பால் துளிக்கும்'
"பரப்புநீர்க் காவிரிப் பாவைதன் புதல்வர்
இரப்போர் சுற்றமும் புரப்போர் கொற்றமும்
உழவிடை விளைப்போர் பழவிறல் ஊர்களும்
பொங்கழி ஆலைப் புகையொடும் பரந்து
மங்குல் வானத்து மலையிற் றோன்றும்
ஊரிடை யிட்ட நாடுடன் கண்டு"
(சிலப்பதிகாரம் : நாடுகாண்காதை - வரி. 148-153)

"விளைவறா வியன்கழனிக்
கார்க் கரும்பின் கமழாலைத்
தீத்தெறுவிற் கவின்வாடி
நீர்ச் செறுவில் நீணெய்தற்
பூச்சாம்பும் புலத்தாங்கட்
காய்ச்செந்நெற் கதிரருந்தி
மோட்டெருமை முழுக்குழவி
கூட்டுநிழற் றுயில்வதியும்"
(பட்டினப்பாலை : 8-15)

V

மணிமேகலை

௩ 60 'பின்னொரு வாயசம் கவிழ்த்த பொன்னியும்'
"கவேர கன்னிப் பெயரொடு விளங்கிய
தவாக்களி மூதூர்ச் சென்றுபிறப் பெய்தி"
(காதை 9-வரி. 52-53.)

பக்கம் வரி

௪எ 26 'செறித்திடுஞ் சிறையினை யுடைத்திடும் புனல்போ ()'
"சிறையு முண்டோ செழும்புனல் மிக்குழீஇ"
(காதை 5-வரி 19)

எ௩ செ. 4 'அறங்கிடந்த சிந்தையரா யாசையெலாந் துறந்த
அதிவீர ரொழியஎவ ராயினுமிங் கடையார்'
"மாரனை வெல்லும் வீர நின்னடி"
(காதை 11-வரி 31)

௧௩௩ 28-29 'தன்னுயி ரீவர் தக்கோர் சார்ந்த
மன்னுயிர் காத்திடு மார்க்கமற் றஃதேல்!'
"தன்னுயிர்க் கிரங்கான் பிறவுயி ரோம்பு
மன்னுயிர் முதல்வ னறமுமீ தன்றால்"
காதை 25-வரி 116-1 7)

VI

திருவாசகம்

உ 46-47 'தென்பாண்டி நாடே சிவலோக மாமென
முன்வாத வூரர் மொழிந்தனர்.'
"அப்பாண்டி நாட்டைச் சிவலோக மாக்குவித்த
அப்பர் சடையப்பன்" (திருவம்மானை-க )

௬ 39-41 'யாரொடு நோவேன்? யார்க்கெடுத் துரைப்பேன்?
வார்கட லுலகில் வாழ்கிலன்.
மாளுவன் திண்ணம் மாளுவன் வறிதே'
"யாரொடு நோகேன் யார்க்கெடுத் துரைக்கேன்
ஆண்டநீ யருளிலை யானால்
வார்கட லுலகில் வாழ்கிலேன் கண்டாய்
வருகவென் றருள்புரி யாயே" (வாழாப்பத்து-௧

௰ய 9-10 'சித்தம் மத்துறு தயிரிற் றிரிந்து
பித்துறச் செய்த'
"மத்துறு தண்தயி ரிற்புலன் றீக்கது வக்கலங்கி
வித்துறு வேனை விடுதிகண் டாய்வெண் டலைமிலைச்சிக்
கொத்துறு போது மிலைந்து குடர்நெடு மாலைசுற்றித்
தத்துறு நீறுட னாரச்செஞ் சாந்தணி சச்சையனே."
(நீத்தல் விண்ணப்பம்-௩ ०)

௬௫ 78-79 'குறும்புசெய் யெறும்புங் கோடி கோடியாப்
புழுக்களும் பூச்சியும் பிழைக்குமா றென்னை'

பக்கம் வரி

“ எறும்பிடை நாங்கூ ழெனப்புல னலரிப் புண்டலந்த
வெறுந்தமி யேனை விடுதிகண்டாய் வெய்யகூற் றொடுங்க
உறுங்கடிப் போதவை யேயுணர் வுற்றவ ரும்பரும்பர்
பெறும்பத மேயடி யார்பெய ராத பெருமையனே. ”

(நீத்தல் விண்ணப்பம்-உரு)

௬௬ 187 ‘ தாயினுஞ் சிறந்த தயாநிதி மனோன்மணி ’

“ தாயிற் சிறந்த தயாவான தத்துவனே. ”

(சிவபுராணம்-வரி 61)

எரு செ. 24 ‘நறுநெயுறு குடத்தெறும்பு நண்ண லென’

“ உள்ளன வேநிற்க இல்லன செய்யுமை யற்றுழனி
வெள்ளன லேனை விடுதிகண்டாய் வியன் மாத்தடக்கைப்
பொள்ளனல் வேழத் துரியாய் புலனின்கட்
போதலொட்டா
மெள்ளன வேமொய்க்கு நெய்க்குடந் தன்னை
யெறும்பெனவே. ” (நீத்தல் விண்ணப்பம்-உச)

௬ய 236 ‘ எய்ப்பினில் வைப்பா யிருந்தபே ரருளை ’

“ காதலர்க்கு எய்ப்பினில் வைப்பு வாழ்க. ”

(திருவண்டப்பகுதி-வரி ௧0ரு)

௱௧ய 47 ‘ இருதலைக் கொள்ளியில் எறும்பா னேனே ’

‘ இருதலைக் கொள்ளியி னுள்ளெறும் பொத்து
நினைப்பிரிந்த
விரிதலை யேனை விடுதிகண்டாய் வியன் மூவுலகுக்
கொருதலை வாமன்னு முத்தர கோசமங் கைக்கரசே
பொருதலை மூவிலை வேல்வல னேந்திப் பொலிபவனே ”

(நீத்தல் விண்ணப்பம்-௬)

௱௬எ வாழ்ந்து :—

‘பள்ள வுவர்க்கடலிற் பாய்ந்தோடும் வெள்ளமென
உள்ள மூவந்தோடி ஒன்றுறனய் ’

“ வெள்ளந்தாழ் விரிசடையாய் விடையாய் விண்ணோர்
பெருமானே யெனக்கேட்டு வேட்ட நெஞ்சாய்ப்
பள்ளந்தா ழுறுபுனலிற் கீழ்மே லாகப்
பதைத்துருகும் அவர் நிற்க ” (சுட்டறுத்தல், செ-௧)

பக்கம் வரி

## VII

## கம்பராமாயணம்

அ 28-29 ‘ஏனிது ஏனிது வாணி! எட்பூ
ஏசிய நாசியாய் இயம்புக’
“எட்குலா மலர் ஏசிய நாசியாய்”

அ 34 ‘தந்தையுங் கொடியன் தாயுங் கொடியள்’
“மந்தரை பின்னரும் வரைந்து கூறுவாள்
அந்தரந் தீர்ந்துல களிக்கு நீரினால்
தந்தையுங் கொடியன்நற் றாயுந் தீயளால்
எந்தையே பரதனே யென்செய்வா யென்றாள்”
(அயோத்தியாகாண்டம்: மந்தரை சூழ்ச்சிப்
படலம்-60 செ. 60)

கஉ 143 ‘போதுநீத் தெம்மனை புகுந்தநற் றிருவே’
“பிடிபுக் காயிடை மின்னொடும் பிறங்கிய மேகம்
படிபுக் காலெனப் படிதரப் பரிபுரம் புலம்பத்
துடிபுக் காவிடைத் திருமகள் தாமரை துறந்து
குடிபுக் காலெனக் குடிபுக்கார் கொடியன்ன மடவார்”
(பாலகாண்டம்: வரைக்காட்சிப் படலம்-செ. 2)

கடு 115 ‘தாமரைத் தாமுகை தாமமில் விளக்கா’
“தண்டலை மயில்களாடத் தாமரை விளக்கந் தாங்கக்
கொண்டல்கள் முழவினேங்கக் குவளைகண் விழித்து
நோக்கத்
தெண்டிரை யெழினி காட்டத் தேம்பிழி மகரயாழின்
வண்டுக ளினிதுபாட மருதம்வீற் றிருக்கு மாதோ”
(பாலகாண்டம்: நாட்டுப்படலம்-செ. 1)

கசு 140-44 ‘தூவியாற் றம்முடல் நீவிடிற் சிரிக்கும்
சிறுமியர் என்னவச் செழுநில நங்கை
உழுபடைக் கொழுமுனை தொடுமுனங் கூசி
உடல்குழைந் தெங்கும் உலப்பறு செல்வப்
பயிர்மயிர் சிலிர்த்துப் பல்வளம் நகுவள்’
“உடுத்தநீர் ஆடையள் உருவச் செவ்வியள்
பிடித்தரு நடையினள் பெண்மை நன்றிவண்
அடித்தலம் தீண்டலின் அவனிக் கம்மயிர்
பொடித்தன நிகர்க்குமாற் புல்லென் றூன்றுவாள்”
(ஆரணிய காண்டம்: சூர்ப்பணகைப் படலம்-செ. 1)

**பக்கம் வரி**

௫௧ 38-40 ‘ தேவ கன்னியர் முதலாந் தெரிவையர்
யாவரே யாயினும் என்கண் தனக்கு
மைந்தரா மாற்றுமிச் சுந்தரி யார்கொலோ ? ’

“ ஏகநாயகன் தேவியை எதிர்ந்ததற் பின்னை
நாகர்வாழ்விட முதலென நான்முகன் வைகும்
மாகமால்விசும் பீறென நடுவண வரைப்பில்
தோகை மாதர்கள் மைந்தரில் தோன்றினர்சுற்ற ”

(சுந்தரகாண்டம் : பிணிவீட்டுபடலம்-செ. 45)

௧௫ 75 ‘ கொடிக் கரங்காட்டி அழைப்பதுவ காண்டி ’

“ மையறு மலரினீங்கி யான்செய்மா தலத்தின் வந்து
செய்யவ ளிருந்தா ளென்று செழுமணிக் கொடிகள் என்னும்
கைகளை நீட்டி யந்தக் கடிநகர் கமலச் செங்கண்
ஐயனை ஒல்லைவாவென் றழைப்பது போன்றதம்மா ”

(பாலகாண்டம் : மிதிலைக்காட்சிப் படலம்-செ. 1)

௧௬ 92-93 ‘ அலையெறிந் திதோ ஆர்த்தனள் கேண்மின்
முலைசுரந் தூட்டிய முதுநதி மாதா ’

“ இரவி தன்குலத் தெண்ணியல்பல் வேந்தர்தம்
பரவு நல்லொழுக் கின்படி பூண்டது
சரயு வென்பது தாய்முலை யன்னதிவ்
உரவு நீர்நிலத் தோங்கும் உயிர்க்கெலாம் ”

(பாலகாண்டம் : ஆற்றுப்படலம்-செ. 12)

## VIII

## வில்லி பாரதம்

௨ 21-24 ‘ திருவடி தீண்டப் பெற்றஇச் சிறுகுடில்
அருமறைச் சிகரமோ ஆலநன் னீழலோ
குருகுல விஜயன் கொடித்தேர்ப் பீடமோ
யாதென ஓதுவன்?’

“ முன்ன மேதுயின் றருளிய முதுபயோ ததியோ
பன்ன காதிபப் பாயலோ பச்சையா லிலையோ
சொன்ன நால்வகைச் சுருதியோ கருதிநீ எய்தற்
கென்ன மாதவஞ் செய்ததிச் சிறுகுடி லென்றான் ”

(கிருஷ்ணன் தூதுச்சருக்கம் - 80)

பக்கம் வரி

கக 106-7 ‘ விந்தம் அடக்கினோன் தந்தாற் றமிழ்மொழி
தற்சுதந் தரமறும் அற்பர்வாய்ப் படுமோ ’
‘ அகத்தியன் பயந்த செஞ்சொல் ஆரணங்கு ’
(பாயிரட 1)

IX

## நைடதம்

க 64-8 ‘ வேழவெண் மருப்பும் வீசிக் காழகிற்
சந்தனு டவியுஞ் சாடி வந்துயர்
குங்கும முறித்துச் சங்கின மலறும்
தடம்பணை தவழ்ந்து, மடமயில் நடம்பயில்
வளம்பொழில் கடந்து குளம்பல நிரப்பி ’
“ வேழ வெண்மருப் பெறிந்துவெண் ணித்திலம் வரன்றி,
காழ கிற்றுணி சந்தொடு கையரிக் கொண்டு
கோழ ரைச்செழுங் குங்குமத் தடஞ்சினை சாடி
ஆழ்தி ரைக்கடல் அகடுகீண் டொழுகிய தன்றே”
“ கங்கை யென்றுல கேத்திய கடவுள்மா நதிவெண்
சங்கு சூலுளை தலறிய தடம்பணை தவழ்ந்து
கொங்கு யிர்த்தபூந் தடத்துலாய்க் குளம்பல நிரப்பி
அங்கண் மாநிலத் தமிழ்தெனப் பரந்ததை யன்றே ”
(நாட்டுப்படலம் - 4, )

கடு 116-17 ‘ நிலவொளி முத்தும் கவடியும் பணமா
அலவன் பலவிர லாலாய்ந் தெண்ண ’
“ வரிவ ளைக்குலக் குவையினுல் மணிகளால் மணிகள்
தெரித ருங்கர வலவனுல் வயின்வயிற் றிரண்ட
விரிக ருப்புர வெண்மணற் குன்றினுல் ஒலியால்
பொருவில் ஆவணம் மறிதிரைக் கடலினைப் பொருவும் ’
(நகரப்படலம் - 14

கடு 65-68 ‘ நிணங்கமழ் கூன்பிறைத் துணைமருப் பசைத்து
மம்மர் வண்டின மரற்ற மும்மதம்
பொழியும் வாரணப் புயலினம் தத்தம்
நிழலொடு கறுவி நிற்பதும் அழகே ’
“ நிழலொடு கறுவிப் பாகெறிந் தூன்பெய்
நிணத்தொடு பழகுகூன் பிறைக்கோட்
டழிகவுட் கடாத்த தறுகண்மால் யானை ”
(சுயம்வரப் படலம் - 61)

பக்கம் வரி

## நளவெண்பா

கக 2-5 ' துன்றராக்,
கவ்விய முழுமதிக் காட்சியிற் செவ்விதாம்
பின்னிய கூந்தற் பேதையின் இளமுகம் '
" சிறக்கின்ற வாள்முகமும் செங்காந்தட் கையால்
முறுக்குநெடு மூரிக் குழலும்—குறிக்கின்
கரும்பாம்பு வெண்மதியைக் கைக்கொண்ட காட்சி
அரும்பாம் பணைமுலையா யாம் "
(நளவெண்பா கலிதொடர் காண்டம் - 16)

எ அ செ. 48 ' சிவகாமி யானுனது சிதம்பரனே யென்னச்
செப்புமுனம் இருவருமற் றொருருவம் ஆனார்
எவர்தாமுன் னணைந்தனரென் றிதுகாறு மறியோம்
இருவருமொன் றாயினரென் றேயறையுஞ் சுருதி '
" ஒருவர் உடலில் ஒருவர் ஒதுங்கி
இருவர் எனுந்தோற்றம் இன்றிப்—பொருவெங்
கனற்கேயும் வேலானும், காரிகையும் சேர்ந்தார்
புனற்கே புனல்கலந்தாற் போன்று. "
(சுயம்வர காண்டம் - 167)

---

## திருநாவுக்கரசர் தேவாரம்

அஙு 168 ' பெரும்போர் இலாநாள் பிறவா நாளே "
" அரியானை அந்தணர்தம் சிந்தையானை
அருமறையின் அகத்தானை அணுவையார்க்கும்
... ... ...
பெரியானைப் பெரும்பற்றப் புலியூரானைப்
பேசாத நாளெல்லாம் பிறவா நாளே. "
(ஆறுந்திருமுறை, கோயில்—பெரிய திருத்தாண்டகம் செ. க)

## திருவிசைப்பா

" யாதுநீ நினைவ தெவரையா
தெவர்களும் யாவையும் தானாய்ப்
பாதுகை மழலைச் சிலம்பொடு புகுந்தென்
பனிமலர்க் கண்ணுணின் றகலான்
கேதகை நிழலைக் குருகெனமருவிக்
கெண்டைகள் வெருவு கீழ்க் கோட்டூர்

பக்கம் வரி

மாதவன் மணியம் பலத்துள் நின்றடும்
மைந்தனென் மனம் புகுந்தானே ”
(கருவூர்த்தேவர் திருவிசைப்பா - திருக்கீழ்க்கோட தூர்
மணியம்ப ம் 9)

## பெரிய புராணம்

௬௩ 12 ‘ சூட்டுடைச் சேவல் சுரைக்கொடி படர்ந்தஅவ்
வீட்டுச் சியின்மேல் வீம்பாய் நடந்துபின் ’
“ மற்றவ்வூர்ப்பு றம்பணையின் வயல்மருங்கு பெருங்குலையிற்
சுற்றம்விரும் பிய கீழ்மைத் தொழிலுழவர் கிளைதுவன்றிப்
பற்றிய பைங்கோடிச் சுரைமேற் படர்ந்தபழங் கூரையு டைப்
புற்குரம்பைச் சிற்றில்பல நிறைந்துளதோர் புலைப்பாடி ”
(திருநாளைப்போவார் புராணம், 6)

## திருவிளையாடற் புராணம்

௯௪ 85-7 ‘ கேதகை மலர்நிழல் இனமெனக் கருதித்
தாராத் தழுவிடச் சார்தரச் சிரித்த
ஆம்பல்வாய் கொட்டிடும் கோங்கலர்த் தாதே ’
“ கழிந்த தெங்கினொண் பழம்பரீஇ முட்பலாக் கனிகீ
டழிந்த தேன்உவர்க் கேணிபாய்ந் தகற்றுவ உவரை
வழிந்த தேன்மடற் கேதகை நிழல் தருகேன்
றெழிந்த தாமரைப் போதுபுக் கோளிப்பன கேண்மை ”
(மதுரைக்காண்டம், திருநாட்டுச் சிறப்பு 0)

## தாயுமான சுவாமிகள்

௧௬௫ 164-165 ‘ உடலால் உயிரும் விழியலால் உணர்வும்
கடபட சடமலால் கடவுளும் இலையேல் ’
“ கற்றதுங் கேட்டதுந் தானே ஏதுக்காகக்
கடபடமென் றுருட்டுதற்கோ கல்லால் எம்மான்
குற்றமறக் கைகாட்டுங் கருத்தைக் கண்டு
குணங்குறியற் றின்பநிட்டை கூடஅன்றோ ”
(நின்றநிலை )

## பட்டினத்துப்பிள்ளை பாடல்

௪௪ 40-44 ‘ தன்வலிக் கடங்கிய மண்கல் புல்புழு
இன்னதென் றில்லை யாவையும் ஈர்த்துத்
தன்னுட் படுத்தி முந்நீர் மடுவுள்

பக்கம் வரி

காலத் தச்சன் கட்டிடும் மலைக்குச்
சாத்தகு மிவை யெனவோர்ந் துருட்டி'
" கட்டிஅணைத்திடும் பெண்டிரும் மக்களும் காலத்தச்சன்
வெட்டி முறிக்கும் மரம்போற் சரீரத்தை வீழ்த்திவிட்டால்
கொட்டி முழக்கி அழுவார் மயானங் குறுகிஅப்பால்
எட்டிஅடி வைப்பரோ இறைவா கச்சி யேகம்பனே "

(திருவேகம்பமாலை, செ. 2)

## நீதிநெறி விளக்கம்

௬௯ 165-68 ' இல்லதென் உலகில் இவற்றுடன் கல்விசேர்
நல்லறி வுளதேற் பொன்மலர் நாற்றம்
பெற்றவா றன்றோ ?'
" எத்துணைய வாயினுங் கல்வி இடமறிந்
துய்த்துணர் வில்லெனில் இல்லாகும்—உய்த்துணர்ந்தும்
சொல்வன்மை இன்றெனின் என்னும் அஃதுண்டேல்
பொன்மலர் நாற்றம் உடைத்து "

(நீதிநெறி விளக்கம் செ. 4)

## நீதி வெண்பா

௭௩ 305-309 ' விழிப்பா யிருக்கிற் பிழைப்பர். விழியிமை
கொட்டிற் கோடி பிறழுமே—கொட்டும்
வாலால் தேளும் வாயால் பாம்பும்
காலும் விடமெனக் கருதி '
" ஈக்கு விடந்தலையில் எய்துமிருந் தேளுக்கு
வாய்த்த விடங் கொடுக்கில் வாழுமே—நோக்கரிய
பைங்கணர வுக்குவிடம் பல்லளவே துர்ச்சனர்க்
கங்கமுழு தும்விடமே யாம் "

(நீதி வெண்பா செ. கஅ)

## பாடுதுறை

௱௪௮ கு. வெ. 'பொறிகளறி யாதுள்ளே புகும்பொருள்கள் இலையென்பர்
துறை-3. பொருளே புன்னை
அறியஅவா வியகரணம் அலமாக்க அகத்திருந்தாய்
அச்சோ அச்சோ '
" துடித்து மனம் புலன்வழியே தாறுசெய்து
மாறுபடுந் துணையிலேனை

பக்கம் வரி

அடித்தடித்துப் பாலூட்டி ஆனந்த மெனக்களித்தான்
அச்சோ அச்சோ ''
(பாடுதுறை 50-வது அச்சோ, செ. 2

## ஒழிவிலொடுக்கம்

கச நே-வெ 'வெறும் எலும்பை நாய் கௌவும் வேளை நீ செல்ல
உறுமுவதென் நீயே யுரை'
" பட்டினத்துப் பிள்ளையினைப் பத்ரகிரி யைப்பரவி
விட்டுவிட மாட்டார் வெறுவீடர்—வெட்ட
வெறு எலும்பை நாய்கறண்ட வேந்தர்வர நாய்பார்த்
துறுமுவதைக் காட்டுவோ மோ ''
(துறவு ௬)

உக 168-9 'களியிரு கன்னியர் உளமும் வாக்கும்
புளியம் பழமும் தோடும் போலாம்'
" புளிசேர் பழமாறும் போற்புறம்போ டுள்ளின்
முளை தானும் வேறாய் முளைபோய். ''
(சத்திநிபாதத்துத் தம ரொழிபு, உக)

எஎ செ-40 'கண்டுயிலும் இல்விடந்தீ கதவுவெளி யோடுங்
கணக்கா இவ் வேடமொடு கரந்துபுறப் பட்டேன்'
" நித்திரைசெய் வீட்டில் நெருப்பும் பெரும்படையும்
முற்றிப் புறப்பட்டார் முற்றத்தே—பித்தரைப்போல்
நில்லென்று சொன்னாலும் நிற்பரோ அப்படிக்காண்
இல்லறத்தை நீத்தார் இயல்பு.
(துறவு கரு)

## புகழேந்திப்புலவர்

கக நே-வெ
" மாற்றலர்தம் மங்கையர்க்கு மங்கலநா ணங்கவிழ
ஏற்றியநாண் விற்பூட்டும் ஏந்தலே—சோற்றதற்காய்த்
தன்மகவை விற்ற அரிச் சந்திரனும் உன் அவையில்
என்மகிமை உள்ளான் இனி ''
" தென்னவன் தென்னர்பெருமான் திரல்மதுரை
மன்னவன் கோக்களிற்றின் வல்லிக்கும்—பொன்னிநா
டாலிக்கும் வேந்தாம் அபய குலமகளிர்
தாலிக்கும் ஒன்றே தளை.''
(தனிச்செய்யுட் சிந்தாமணி)

# மனோன்மணீய நாடகத்தில் வரும்

# வரலாற்று விளக்கம்

## (Allusions Explained)

## பாயிரம்

### அகத்தியர் கடல் குடித்த கதை

*இந்திரன் முதலிய தேவர்கள் தங்கள் பகைவனாகிய விருத்திராசுரன் மற்றும் பல அசுரர்களுடன் கடலில் ஒளித்துக்கொண்டபோது அகத்திய முனிவரை யடுத்து முறையிட, அவர் அக்கடலின் நீரைத் தமது ஒரு கையால் முற்றும் முகந்து பருகியருளினார். அங்கு மறைந்திருந்த விருத்திராசுரனை இந்திரன் கொன்றனன். பின் இந்திரன் முதலியவர் வேண்டுகோளின்படி மீண்டும் உமிழ்ந்தனர் என்பது.*

### குடமுனிவர் வரலாறு

*ஒரு காலத்தில் கடற்கரையிலிருந்த மித்திராவருணர் என்பவர்கள் ஊர்வசி என்னும் அப்சரசைக் கண்டு காம மீக்கூர்தலின், தங்கள் வீரியத்தை ஒருவர் கும்பத்திலும் ஒருவர் தண்ணீரிலும் விடுப்ப, கும்பத்தினின்று அகத்தியரும், தண்ணீரினின்று வசிட்டரும் தோன்றினார் என்னும் நூல்கள். இதனால் அகத்தியர் குடமுனி, கும்பமுனி முதலிய திருநாமங்களை யெய்தினர்.*

### கடல் சாகரமெனப் படல்

*சூரியகுலத்துச் சகரமகாராசன் அசுவமேத யாகம் (பரிவேள்வி) செய்தபொழுது பூமி வலம்புரிய அனுப்பிய குதிரையைப் பொறாமை கொண்ட தேவேந்திரன் மாயையால் ஒளித்துக்கொண்டு சென்று பாதாள லோகத்தில் தவஞ் செய்துகொண்டிருந்த கபில முனிவர் பின்னே கட்டிவைக்க, அவ்வேள்விக் குதிரையை நாடிச் சென்ற சகர புத்திரர் அறுபதினாயிரவரும், பூமி முழுவதும் தேடிக் காணாமல் பாதாள லோகத்திற்குப் போகும்பொருட்டு, பரதகண்டத்தின் கீழ்ப்பாகத்தில் தோண்டிச் சென்ற பெரும் பள்ளம், பின் பகீரதன் கொண்டுவந்த கங்கை முதலிய நதிகளின் நீரால் நிறைந்து சாகரம் என்னும் பெயர் பெற்றுக் கடலோடு கூடித் தானும் கடலின்பாற் பட்டது. (சகரரால் தோண்டப்பட்டது சாகரம்.)*

## நக்கீரர் அரனுர் கதை

மதுரையில் சண்பகமாறன் என்னும் பாண்டியன் தன் மனை யுடன் உய்யான வனத்து மாளிகை உப்பரிகையில் தனித்திருந்தா அப்பொழுது அடித்த காற்றில் மனையாளின் கூந்தலில் நறுமண தோன்றிற்று. இதனை யுணர்ந்த மன்னன் இத்தகைய நறு மணம் இவ கூந்தலுக்கு இயற்கையில் அமைந்ததோ, பூச்சூடுதல் அகிற் புகை காட்டல் பரிமளத் தைலந் தேய்த்தல் முதலிய செயற்கையால் ஆகி தோ வென்று ஐயுற்று வீடுவேந்தும் தெளியானாய், சங்க மண்டப சென்று ஆயிரம் பொன்னை ஒரு கிழியில் முடிப்பாகக் கட்டித் தொங் வைத்து என் ஐயத்தைத் தீர்ப்பவர் இப் பொற்கிழியைப் பெறு வென்று யாவர்க்கும் அறிவித்தான். நக்கீரர் முதலிய சங்கப் புலவ கள் யாவரும் தத்தம் கவிகளால் அரசனை யடுத்துத் தெரிவித்து ஒன்றும் அவனைத் திருப்தி செய்யவில்லை; ஐயமுந் தீரவில்லை; பொ கிழியும் எடுபடவில்லை.

ஆலவாய்க் கடவுளை அருச்சனை புரிந்த வறிஞனாகிய தருமி தனக் மணமுடித்தற்குப் பணம் வேண்டுமென்று எண்குணக் கடவுளை இறைஞ் வந்தனன். அரனும் இது சமயம் நழுவவிடாது தருமிக்கு 'கொங் தேர் வாழ்க்கை அஞ்சிறைத் தும்பி' என்னும் பாடலைப் பாடிக்கொடுத் மன்னனிடந் தெரிவித்துப் பொற்கிழியும் அறுத்தெடுக்க என்றனுப் அவனும் அங்ஙனமே போய் அறுத்தெடுக்க முற்படுதலும், நக்கீரராகி புலவர் 'கிழி அறுக்காதே; நினது பாடல் குற்றமுடையது' என்று த தனர். கைக் கெட்டியது வாய்க் கெட்டாமையிற் கவன்ற தரு விரைந்து இறைவனிடம் முறையிட்டனன். கேட்டதும் வெகுண் றுதற் கடவுள் புலவனுருக்கொண்டு சங்க மண்டபமடைந்து கவிக்கு குற்றங்கூறியவர் யாவர் எனலும், நக்கீரர் துணிந்து அது தாமே யெ னும், கூறிய கவியில் பொருட்குற்ற முண்டென்றும், பெண்கள் கூந்த கு செயற்கை மணமன்றி இயற்கை மணம் இன்றென்றும் வாதிக்க இறைவனும் புலவன் வெகுண்டு நெற்றிக் கண்ணைத் திறந்து சிற்கவு கீரர் நெற்றிக்கண் திறப்பினும் குற்றங் குற்றமே என்றனர்.

## ஏடு எதிரேறியது

திருஞான சம்பந்தமூர்த்தி நாயனர் சமணர்களை வென்று சை மதத்தை நிலைநிறுத்தும் பொருட்டு மதுரை சென்றபொழுது சமண வைத்த தீயால் பாண்டியன் வெப்புநோய் கொள்ள, அதனைச் சம்பந் நீற்றுப் பதிகத்தால் மாற்றியபின் நிகழ்ந்த அனல் வாதத்திலும் தோல் யுற்ற சமணர் புனல்வாதம் புரியவேண்டுமென்று தென்னவனை வேண்ட அவனும் இசைந்ததற்கு இணங்க, இருதிறத்தாரும் தத்தம் சமய சி

தாந்தத்தை எழுதிய ஏட்டை ஓடுகின்ற வைகையாற்றி விட்டதில் எதி ரேறும் ஏடே மெய்ப்பொரு ளுடையதென்று துணியப்படுவதாயிற்று. இம்முறையில் சம்பந்தர் ‘ வாழ்க அந்தணர் ’ என்னும் பாடலை எழுதி விட்ட ஏடு வேகவதியாற்றில் எதிர்ந்து நீரைக் கிழித்துக்கொண்டு சென்று சோழவந்தானை யடுத்துள்ள திருவேடகம் என்னும் இடத்தை யடைந்தது. தொடர்ந்து சென்ற குலச்சிறையாம் மந்திரி எடுத்து வந்து சம்பந்தர் வெற்றியைச் சிறப்பித்தனர். கூன்பாண்டியனும் தென்னவனும் இச் செய்யுட் சிறப்பால் உடற்கூனும் உளக்கூனும் நிமிர்ந்து நின்றசீர் நெடுமாறனுபினான்.

## வாசகத்தில் ஒரு பிரதி கருதியது

திருவாதவூரராகிய மாணிக்கவாசகர், அரிமர்த்தன பாண்டியன் அமைச்சரா யிருந்து அவன் விருப்பப்படி பரி வாங்கிவரச் சென்ற திருப்பெருந்துறையில் சிவகுருநாதன் திருவருள்பெற்றுப் பாண்டியற்கு வேண்டிய பரிகளை இறைவனுல் கொணர்வித்துப் பாண்டியன் தண்ட னைக்கு ஆளாயிருந்து, பின் பாண்டியனையும் ஆட்கொள்ளக் கருதிய சிவபெருமான் அருள்வழி பெருகிய வைகை வெள்ளநீரைத் தடுக்கச் செய்த அணைக்கு வந்தியின்பொருட்டு மண்ணெடுத்துப் பிட்டுண்ட பிரானுர் மகிழப் பெரும்பொருள் நிரம்பிய பாக்கள் பாடி மகிழ்வித்து வந்தனர். இவர் சிதம்பரத்தி லெழுந்தருளியிருக்கையில் சிவபெருமான் பாண்டிய நாட்டில் இவரோடு முன் பழக்கமுள்ள ஓர் அந்தணனது வடிவத்தை எடுத்துவந்து இவரது அனுமதி பெற்று இவர் பாடிய திரு வாசகத் திருப்பதிகங்களை எழுதினு ரென்பது.

## சங்கத்தார் சிறு பலகை

இது கடைச் சங்கத்துப் புலவர்களின் வேண்டுகோட்படி அவர் கட்கு மதுரைச் சோமசுந்தரக் கடவுளால் கொடுத்தருளப் பெற்றது. இப்பலகை இரண்டு சாண் அளவிற்குச் சதுரமாயிருப்பது. கலைமகள் வடிவினராம் உண்மைப் புலவர் எத்தனைபேர் வந்தாலும் ஒவ்வொரு முழம் விழுக்காடு விரிந்து ஏறி வீற்றிருக்க இடங்கொடுப்பது. சங்கப் புலவர்கள் இதனுல் தங்களுக்கும் மற்றைத் தமிழ்ப் புலவர்களுக்குங் கல்வித் திறத்திலுள்ள வேறுபாட்டை அளந்தறிய எளிதாயிருந்தது.

## சாநவி வரலாறு

பகீரதன் தவப்பயனுல் தேவலோகத்திலிருந்து வந்த ஒரு புண்ணிய நதியாகிய கங்கை வருகிற வழியில் சந்நு முனிவர் செய்துகொண்டிருந்த யாகத்தை அழிப்பதாவதை யுத்தேசித்துத் தாம் அதனை யுட்கொண் டார். பின் பகீரதன் தன் மூதாதையர்களான சகர புத்திரர்களை நற்கதி

செலுத்தும் பொருட்டுக் கொண்டுவரப்படுதலின் அதனை விடுத்தருள வேண்டுமென்று வேண்டியதற்கேற்பச் சந்நு முனிவர் தம் காது (சந்நு வழியாக விடுத்தமையின் சாநவி என்ற பெயரைப் பெறுவதாயிற்று. ப ரதனாற் கொண்டுவரப்பட்டமையால் பாகீரதி யென்றும் வழங்கப்படும்.

## காவிரி வரலாறு

காவிரி, அகத்திய முனிவர் கமண்டலம் கவேரகிரியில் விநாய ரால் கவிழ்க்கப்பட்டு உற்பத்தி செய்யப்பட்டது. இந்நதியின் வளத் னால் சோழநாடு புனல்நாடு எனப்படும். கவேர முனிவர் என்னுஞ் சிறந் முனிவர் பிரமதேவரைக் குறித்து அருந்தவம் புரிந்து அவரருளா விஷ்ணுமாயையைத் தம் புத்திரியாக அடைந்து முத்தி பெற்றன ரெ பதும், பின்னர் அக் கன்னி பிரமதேவர் கட்டளைப்படி நதிவடிவாகி பெருகி கவேரகன்னி, காவிரி எனப் பெயரேற்றனள் என்பதும் ஆக் நேய புராணம்.

இந்திரன் நந்தவனம் தழைக்கும் பொருட்டு அவன் வேண்டுகோ கிணங்கிய விநாயகர் காக வடிவங்கொண்டு அகத்தியர் கமண்டலத்தை கவிழ்த்துப் பெருகச் செய்தார் என்பதும் ஆம்.

## மன்மதன் நீறுயினமை

சிவபிரான் ஒரு காலத்துத் தம்மை யடுத்து ஞானநிலை யுணர்த் வேண்டிய சனகாதி முனிவர் நால்வர்க்கும் கல்லால மரத்தடியில் தெ பால் நோக்கி ஞானநிட்டையி லிருந்தபொழுது, அவன் தாபத்தை பொறுக்கமாட்டாத பிரமன் முதலிய தேவர்களால் திருமாலின் மான புத்திரனாகிய கருவேளாகிய மன்மதன் சிவபிரானிடம் அனுப்பப்ப டனன். அவன் கைலையம் பருப்பதத்தை யடுத்து யோகத்திலிருக்கு சிவபெருமான்மீது பஞ்ச மலர்ப்பாணங்களையும் செலுத்தினான். செலு தவே, யோகங் கலைவுற்ற சிவன் கோபத்தோடும் பார்த்தனன். நெற்றி கண்ணாற் பார்க்கப்பட்ட மதன் சாம்பரானான். பின் இரதியின் வேண் கோட்படி இரதிக்குமட்டும் உருவத்தோடிருக்க அருள் செய்யப்ப டனன்; மற்றவர் பார்க்கமுடியாத வடிவினனாதலால் அநங்கன் என் அழைக்கப்படலானான்.

## கடுவுண்ட கண்டர்

தேவர்கள் நரை திரை யடையாதிருக்க, திருப்பாற்கடலினின்று அமுதம் கடைந்தெடுக்கும்பொழுது அதிற் றோன்றிய பல பொருள்களி ஆலகாலவிடமும் ஒன்று. இதைக் கண்ட தேவர்கள் யாவரும் பத பதைத்து இறந்துவிடுவோமென் றஞ்சி, திருக்கயிலையி லெழுந்தரு யிருக்கும் சிவபெருமானிடம் தஞ்சம் புகுந்தார்கள். தஞ்சம் புகு

வர்க்கு அஞ்சல் அளித்து, ஆலாலசுந்தரரை அனுப்பி அவ்விடத்தை யெடுத்துவரச் செய்து தம் வாய்க்குட் போடுவாராயினர். பக்கமிருந்த பார்வதி தேவியார் பகிரண்டத்தைப் பாதுகாக்க உட்கொள்ளப்படும் நஞ்சு அந்தரண்டங்களை அழித்துவிடலாகாதே என்று உடன் கண்டத்தை இறுகப் பிடித்தனர். பிடித்த அளவில் அக்கடு உட்செல்லாது அக் கண்டத்தளவே நின்றது. நின்றவிடம் காளகண்டம், கறைக்கண்டம், நீலகண்டம் என்று யாவராலும் போற்றும்படி விளங்கியது.

## சிவபிரான் பிட்சாடனமூர்த்தி யானமை

தாருகாவன வாசிகளாகிய முனிவர்கள் தங்கள் தவ மகிமையினால் செருக்குற்றிருந்தமையை அறிந்த பரமசிவன், அவர்களது தபோபலத்துக்குக் காரணம் அவர்கள் பத்தினிமார்களின் கற்பென்று அறிந்து, அதை யறியவேண்டிக் கங்காளநாதராகப் புறப்பட்டு அவர்தம் ஆச்சிரமங்களிற் போய்ப் பிச்சை யெடுப்பாராயினர். சிவபெருமானைக் கண்ட பத்தினிமாரெல்லாம் தம்மை மறந்து மையலடைவாராயினர்.

## அரிச்சந்திரன் வாய்மை

விசுவாமித்திரன் முதலில் அரிச்சந்திரனிடத்தில் வந்து யாகத்திற்காகச் சில பொருளை யாசித்து வாங்கி அதை அரிச்சந்திரனிடத்தேயே கொடுத்துப் போயிருந்தான். வசிட்டருடன் தாம் கொண்டிருந்த சபதத்தை முடிக்கும் பொருட்டு நாட்டியப் பெண்களை அனுப்பி அரிச்சந்திரனிடத்துக் கடைசியாய் அரசுரிமையைப் பெற்றுக்கொண்டபொழுது, அரசன் தன் குழுவோடு காட்டுக்குப் போகும்போது மறித்துக்கொண்டு, தாம் முன் அடைக்கலமாக வைத்த பொருளையும் தந்துபோகக் கட்டாயப்படுத்த, அதன்பொருட்டு அரிச்சந்திரன், மனையாளாகிய சந்திரமதியையும் மகனாகிய தேவதாசனையும் விலைப்படுத்தித் தானும் விலைப்பட்டும் சுடலை காத்தும் இன்னோரன்ன துன்பங்களை வாய்மையின் பொருட்டே அநுபவித்தா னென்பது.

## இந்திரன் வேடனாகியது

அத்திரிமுனிவர் குமாரர் துருவாச முனிவர், ஒருகால், சிவார்ச்சனை செய்துவிட்டு வரும்போது இந்திரன் ஐராவதத்தின்மீது அமர்ந்து பவனிவருவது கண்டு அவனிடம் தம் கையிலிருந்த மாலையைக் கொடுத்தனர். அவன் அம் மலர்மாலையைப் பேணாது தன் யானை மத்தகத்தின் மேல் வைக்க, அது கீழே தள்ளித் தன் காலால் மிதித்தழித்தது. இதனைக் கண்டு பொறாத துருவாசர் சினந்து, “சேட்டானை வானவ நின் சென்னி செழியரிலோர், வாட்டானை வீரன் வளையாற் சிதறுக நின் கோட்டான நாற்கோட்ட வெண்ணிறத்த குஞ்சரமும் காட்டானையாக”

எனக் கடுஞ்சாப மிட்டார். இதன்படியே இந்திரன் வேடஞ்கித் திரிந்து மதுரையடைந்து சிவலிங்க பூசை செய்து தன்வடிவ மடைந்தனன்.

### இந்திரன் முடிமேல் வளை யெறிந்தது

பாண்டி நாட்டிலும் அயல் நாடுகளிலும் மழைப்பெயல் இல்லாது போகச் சேர சோழ பாண்டியர் மூவரும் தேவலோகஞ் சென்று இந்திரனை வணங்க, அவன் மற்றிருவருக்கும் மழைவர மீந்து பாண்டியனை மதியாது இகழ்ந்து அனுப்பிவிட்டான். பாண்டியன் மேகங்களைப் பிடித்துக் கட்டிச் சிறையிலிட, இந்திரன் பாண்டியனோடு போருக் கெழுந்து பொருதபோது பாண்டியன் வளையை விட்டு இந்திரன் முடியை, தகர்த்துவிட்டான். அவ்வளவில் இந்திரன் அடங்கிச் சமாதானம் கேட்க, பாண்டியன் மறுத்தான். வேளாளர் தாம் பிணையாகி மேகங்களைச் சிறைவிடுத்தார்கள்.

### வடகோடு தென்கோடு சமமானது

சிவபெருமான் இமயமலையரசன் மகள் பார்வதியை இமயமலையில் மணம் புரிய விருந்தபொழுது, முப்பத்து முக்கோடி தேவர்களும் நாற்பத் தெண்ணாயிரம் ரிஷிகளும் மற்றுமுள்ள தேவகணங்களும் அவ்விடத்துக்குத் திருக்கலியாணங் கண்டுகளிக்கப் போயிருந்தார்கள். அப்பொழுது, பூமியினது வடகோடு தாழ்ந்து தென்கோ டுயர்ந்துவிட்டது சிவபெருமான் வடமுனை தாழ்ந்து தென்முனை உயர்ந்திருப்பது தெரிந்து அகத்தியமுனிவரைத் தென்திசைக்கு அனுப்பி உலகைச் சமநிலை யடையச்செய்தனர் என்பது.

### விந்த மடக்கிய வரலாறு

அகத்தியர், தென்னாடு நோக்கிவருகையில் தேவர்களுடைய வேண்டுகோட்படி விந்தமலையின் வீறு குன்றும்படி நிலத்தில் அழுத்தினர் என்ப இம்மலை தென்னிந்தியாவையும் வட இந்தியாவையும் பிரிக்கும் எல்லையாக வுள்ளது. மேருமலையோடு இகலி யுயர்ந்து ஆகாயம் அளாவிச் சூரிய சந்திரர் இயக்கத்தைத் தடுத்துவந்தது. இத்தடை நீக்கக் கருதியே தேவரும் வேண்டினர்.

### இந்திரன் ஆயிரங்கண்ணன் ஆனது

ஒருகால் வானவர்கோனாகிய இந்திரன் கௌதம முனிவர் பத்தினியாகிய அகலிகையை இச்சித்து அவளைக் கரவிற் புணர்ந்து, அம் முனிவர் சாபத்தால் உடல்முழுதும் பெண்குறி யடையப்பெற்றனன். தன்னங்க மெங்கும் பங்கமான குறிகண்ட வாசவன் தேவர் முன்னிற்க நாணினன். தேவர்கள் இந்திரன்பொருட்டுக் கவுதம முனிவரை யண்மி இந்திரன்

பிழைகளைப் பொறுத்துச் சாபவிடை தருமாறு வேண்டினர். இவ் வேண்டுகோட் கிணங்கிய முனிவர் அக் குறிகள் இந்திரனொழிந்த ஏனை யோர் கண்களுக்குக் கண்களாகவே விளங்குமென்று அருள் பாலித்தார். இதனால் இந்திரன் ஆயிரங்கண்ணன் என்ற பெயர் பெறுவானாயினன்.

## மலைச் சிற கரிந்தமை

முற்காலத்தில் மலைகள் சிறகுகள் உடையனவா யிருந்து ஓரிடத்தி னின்று மற்றோரிடத்திற்குக் காலா காலத்திற் பறந்து செல்வனவாய் உலகினர்க்குத் துன்பு செய்துவந்தன. இந்திரன், தேவர் மானுடர் வேண்டுகோட் கிணங்கித் தன் வச்சிராயுதத்தால் மால்வரைகளைச் சிற கரிந்தான். இதனால் இவன் கோத்திரபித்து என்னும் காரணப்பெயர் பெற்றனன். இந்திரன் கைக்குத் தப்பிய மைநாக பருவதம் ஒன்றே கடலுள் மறைந்தது.

## உஷையின் தோழி சித்திரரேகை

சித்திரரேகை வாணாசுரன் மந்திரியாகிய கவந்தன் புத்திரி. சித்திர மெழுதுவதில் வல்லவள். இவளே அநிருத்தன் படமெழுதி, வாணா சுரன் மகள் உஷையினிடம் காட்டி, உஷை அநிருத்தனை மஞ்சத்துடன் வருவித்து இன்ப நுகர்வித்தவள்.

## யாத்திரைக்காரர் சோறு பொங்கியது

ஒன்றாய்ச் சோறு பொங்க எண்ணின சில யாத்திரைக்காரில் ஒருவன் மற்றவர் உலையில் பெய்த அரிசியோடு தன் பங்குக்கு மணலை யிட்டுவிட்டால் யாரும் அறிவதற் கிடமின்றித் தன் பங்குக்குள்ள சோறு செலவில்லாமல் கிடைக்கு மென்று நினைத்து, மணலைச் சோறு அடும் பாத்திரத்தில் சொரிய, அப்படியே யாவரும் தனித்தனி எண்ணி நடத்தி னார்கள் என்பது ஒரு கதை.

## கஜேந்திரன் வரலாறு

இந்திரத்துய்மனன் என்னும் பாண்டியன் அகத்திய முனிவரைக் கண்டு பணியாதிருந்தமையின் அவர் சினந்து யானையாகுக எனச் சபிக்க, அங்ஙனமே யானையாகித் தன் இயற்கையான விஷ்ணு பக்தியோடு யானைகட்கு அரசாய் அநேக பெண் யானைகளோடு (சலக்கிரீடை) நீர் விளையாட்டுச் செய்துகொண்டிருக்கையில், சாபத்தால் முதலை வடிவேற் றிருந்த ஊகூ என்னும் கந்தருவன் யானையின் காலைப்பற்றி இழுக்க, அநேக காலம் இரண்டும் போர்புரிந்து யானை சகிக்க முடியாது ஆதி மூலமே என்று கூவ, திருமால் ஆண்டு எய்திச் சக்கரத்தால் முதலையைச் சங்கரித்துக் காத்தனர்.

## துரோபதை வரலாறு

திருதராட்டிரன் புத்திரரில் ஒருவரான துச்சாதனன் பாஞ்சாலி யாகிய துரோபதையின் கூந்தலைப் பிடித்திழுத்துச் சென்று துரியோ தனன் சபையில் பாண்டவர்கள் முன்னிலையில் அவள் ஆடையை யுரிந்து மானபங்கஞ் செய்ய முற்பட்டனன்; அவள் கண்ணனைப் பிரார்த்தித்து ஆடை வளரப்பெற்றதனாற் பல சேலைகள் ஒன்றன்பின் ஒன்றாக வரக்கண்டு அஞ்சி விடுத்தகன்றான்.

## மார்க்கண்டேயர் வரலாறு

மிருகண்டு முனிவர் புத்திரராகிய இவர் தமக்கு வயது பதி றென்ப துணர்ந்து நாடோறுஞ் சிவார்ச்சனை செய்து அவ் வயதில் த மைப் பற்றும்படி யமபடர் வரத் தாம் அர்ச்சித்துவந்த சிவலிங்கப் பெ மானை இறுகத் தழுவிக்கொள்ளச் சிவபிரான் அவ் இலிங்கத்தினின்று புறம் போந்து எமனை உதைத்து வீழ்த்தி இவருக்குத் தீர்க்காயு அளித்தனர். இவர் எழு சிரஞ்சீவிகளுள் ஒருவர்.

---

# அநுபந்தம்

கஉ 140-44 தாயே வந்துபார் நீயே வளர்த்த
முல்லையும் நறுமுகை முகிழ்த்தது-வல்லை
காதலிற் கவிழ்வை போலும்!
போதுநீத் தெம்மனை புகுந்தாற் றிருவே!

## சகுந்தலை அங்கம் I

**சகுந்தலை**:—பருவமல்லாத பருவத்திலும் இக் குருக்கத்தி (மாத வி)க் கொடி அடிமுதல் நுனிவரை இனிய பூக்கள் பூத்து அழகாயிருக் கின்றதே!

(இருவரும் அக்கொடியை விரைந்து நெருங்கி) அன்பான தோழி, உண்மையாக அப்படித்தானா?

**சகுந்தலை**:—அப்படித்தான். நீயும் கவனித்துப் பார்.

**பிரியம்வதை**:—(ஆத்திரத்துடன்) சகுந்தலா! இந்த நற்குறியால் உன்னைத் தக்க வரன் விரைவில் கைக்கொள்வான் என்று கூற விழை கின்றேன்.

௩௭ 39-ம் வரிக்குப் பின்வரும்

'கொல்லா வெனப் பகைஞர் கோற்றொடியார் கும்பிட்டுப்
பல்லிளிக்கக் கண்சிவக்கும் பார்த்திபனே—பொல்லா
வெறும்எலும்பை நாய்கௌவும் வேளைநீ செல்ல
உறுமுவதென் நீயே உரை'

என்ற நேரிசை வெண்பாவுக்கு நூலாசிரியரவர்கள் தந்த ஆங்கிலக் குறிப்பு:—

"Exactly as the silly dog, engaged complacently in crunching a dry and useless bone, snarls with suspicious jealousy at the approach of a crowned sovereign like yourself who could not have the least intention of contending for it, so does ambitious Kudila feel jealous of the Muni's influence with you, suspecting it may be used for depriving Kudila of his power or possession and turning them to his own account, forgetting that all his worldly pomp & power must appear to the Muni even worse than a dry marrowless bone to a King. It is to be seen then that நீ refers to the King in its primary sense and to Sundara Munivar in its application when the dog must be taken as Kudila and the bone his power. Narayanan thus wishes to warn his master against the backbiting, of his minister. நீ refers to Jivaka in one sense."

௩௯ 95-ம் வரிக்குப் பின்வரும்

"மாற்றலர்தம் மங்கையர்க்கு மங்கலநா ணங்கவிழ
ஏற்றிநாண் விற்பூட்டும் ஏந்தலே—சோற்றதற்காய்த்
தன்மகவை விற்றஅரிச் சந்திரனும் உன்அவையில்
என்மகிமை உள்ளான் இனி"

என்னும் வெண்பாவில் 'சோற்றதற்கா' என்னும் தனிச்சொல் சகடனைக் குறிக்குங்கால் சோற்றுக்காக என அவனது பொருளாசையையும், அரிச்சந்திரனைக் குறிக்குங்கால் 'சொற்றதற்கா' என்பதன் நீட்டல் விகாரமாய் அவனது தவறா மொழியையும் சுட்டிநிற்கின்றது.

இவ் வெண்பாவுக்கு ஆசிரியரவர்கள் தந்த ஆங்கில உரைக்குறிப்பு:—

"The meaning of சோற்றதற்கா:—In the case of Harichandra, it is சொற்றதற்கா; that is, for the word he pledged to the முனி (Viswamitra) he gave up his worldly

enjoyments to the extent of surrendering his child. In the case of சகடன், it is 'சோற்றுக்கா'; that is, for the sake of சோறு. சகடன் is preparing himself for similar sacrifices. So says Narayana, of course in allusion to the avarice which prompts him to give his lovely daughter in marriage to one she hates from the bottom of her heart.

Harichandra is introduced to expose the falsity of the plea raised by சகடன் that he would retire to Kasi in case he should fail to keep up his word, as if he were another Harichandra, with குடிலன் to whose son really through ambition he wishes to wed his daughter."

---